# சுந்தரர் தேவாரப் பாடல்களில் இசை

முனைவர் இ. அங்கயற்கண்ணி
இணைப்பேராசிரியர்
இசைத்துறை

தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005

ISBN : 81-7090-322-X

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 262

திருவள்ளுவராண்டு மார்கழி 2034 - திசம்பர் 2003

| | | |
|---|---|---|
| நூல் | : | சுந்தரர் தேவாரப் பாடல்களில் இசை |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் இ. அங்கயற்கண்ணி |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | இசை |
| பதிப்பு | : | முதற்பதிப்பு 2003 |
| பக்கம் | : | viii +224 = 232 |
| தாள் | : | டி.என்.பி.எல்.மேப்லித்தோ |
| அளவு | : | டெம்மி 1/8 |
| நூற்கட்டுமானம் | : | சாதாக்கட்டு |
| விலை | : | உரூ. 70-00 |
| படிகள் | : | 1000 |
| அச்சு | : | தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர். |

தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் * 613 005 - இந்தியா

முனைவர் இ. சுந்தரமூர்த்தி
துணைவேந்தர்

# அணிந்துரை

பழந்தமிழ்க் கலைகளுள் இசைக்கலை பெரும் புகழ்பெற்று விளங்குவது. தொன்மையான இலக்கண நூல்களும் இலக்கிய நூல்களும் இசை குறித்து அளவிறந்த செய்திகளை நமக்குத் தருகின்றன. இலக்கண யாப்பு முறைக்கும் இசைக்கலையின் காலக்குறியீட்டிற்கும் மிகுதியான ஒப்புமைகள் உள. 'பண் என்னாம் பாடற்கு இயைபின்றேல்' என்று வள்ளுவர் பண்ணையும் பாடலையும் இணைத்துக் காட்டுவார். விலங்குகளையும் இசை தன்வயப்படுத்தி ஆற்றுப்படுத்தும் என்பர் முன்னையோர்.

தமிழ் இலக்கியங்களுள் பத்தி இலக்கியங்கள் இசையோடு இயைந்தவை. அருளாளர்கள் ஏழிசையாய் இறைவனை வணங்கி மகிழ்ந்தனர். 'தென்னாத் தெனாத் தெத்தெனா' என்று ஏத்திப் பாடிப் போற்றி வணங்கினர்.

'மந்தம் முழவு குழலும் இயம்பும் வளர்நாவலர் கோன் - நம்பி ஊரன் சொன்ன சந்தம்மிகு தண்தமிழ் மாலைகளை' விரும்பிப்பாடி வழிபட்டவர்கள் நம் முன்னோர்கள். திருமுறை இலக்கியங்களுக்கு முன்னரேயே சிலப்பதிகாரம் அனைத்து இசைக்கூறுகளுக்கும் விளக்கம் கூறியுள்ளது. இத்தகைய இசைமரபு குறித்துக் காலந்தோறும் தொடர்ந்து ஆய்வுகள் நிகழ்ந்தவண்ணம் உள்ளன.

தமிழ்ப் பல்கலைக்கழக இசைத்துறை தமிழிசை ஆய்வினையே முதன்மை நோக்கமாகக் கொண்டு தொடர்ந்து பல்வேறு நூல்களை வெளியிட்டு வருகிறது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் அமைந்துள்ள இசைக்கூறுகள் குறித்து இசைத்துறையில் பணியாற்றும் முனைவர் இ. அங்கயற்கண்ணி அவர்கள் ஏற்கெனவே

ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளார். 'சுந்தரர் தேவாரப் பாடல்களில் இசை' என்னும் இந்நூல் சுந்தரர் அருளிச்செய்த பாடல்களில் உள்ள இசைக்கூறுகளை மையமாக வைத்து ஆராயப்பெற்றுள்ளது.

காலந்தோறும் திருமுறைப் பதிகங்கள் பாடுகின்றமுறையில் வெவ்வேறு நிலைகளில் மாற்றங்கள் பெற்றுள்ளன. திருமுறை பாடும் ஓதுவார்கள் பலரும் இசை அறிஞர்களும் இது குறித்து வரலாற்று முறையில் ஆராய்ந்து பல செய்திகளை வெளியிட்டுள்ளனர்.

இசைப்புலமையும், இயற்புலமையும் வாய்க்கப்பெற்ற இந்நூலாசிரியர் முனைவர் இ. அங்கயற்கண்ணி சுந்தரரின் பதிகங்களுக்கு அமைந்த பண்களைப் பல நிலைகளில் ஒப்பிட்டுப் பார்த்துச் சுரதாளம் அமைக்கப்பெறாத பாடல்களுக்குச் சுரதாளக்குறிப்பு அமைத்து இந்நூலில் நன்கு விளக்கியுள்ளார்.

பாடல்களின் வரலாறுகளோடு பண்அமைப்பையும் விளக்கிக் கூறுவது இந்நூலின் தனிச்சிறப்பாக விளங்குகின்றது. பண் ஆராய்ச்சி குறித்த அறிஞர் பெருமக்களின் முன்னைய ஆய்வு முடிவுகளையும் இந்நூலில் தக்கவாறு பயன்படுத்தி உள்ளார்.

நூலின் இறுதியில் தரப்பட்ட பல்வேறு பின்னிணைப்புகளும் நூலாசிரியரின் கடுமையான உழைப்பைக் காட்டும்.

சுந்தரர் தேவாரப் பாடல்களில் இசை என்னும் இந்நூல் தமிழிசை ஆய்விற்கு நல்வரவு எனலாம். பழந்தமிழரின் இசைப் பெருமையை அறியும் வண்ணம் அரிய ஆய்வுநூலாக வெளியிடும் நூலாசிரியர் முனைவர் இ. அங்கயற்கண்ணி அவர்களுக்கு இனிய பாராட்டுதல்கள். இத்தகைய அரிய இசைக்கலை பற்றிய ஆய்வுகள் தமிழ்க் கலைக்கு மேலும் புகழ் சேர்க்கும் என்பது உறுதி.

இந்நூலினை நன்முறையில் வெளியிட்ட பதிப்புத் துறையினருக்கும் அச்சகத்தினருக்கும் இனிய பாராட்டுதல்கள்.

தஞ்சாவூர்
1.12.2003

(இ. சுந்தரமூர்த்தி)

# பொருளடக்கம்

# நூன்முகம்

தமிழிசை ஆய்வினையே முதன்மை நோக்கமாகக் கொண்டுள்ள தமிழ்ப் பல்கலைககழக இசைத்துறையில் தேவார இசை ஆய்வு மேற்கொள்ளப்பட்டு இரு தொகுதிகள் முறையே, "திருஞான சம்பந்தர் தேவாரப் பாடல்களில் இசை" "திருநாவுக்கரசர் தேவாரப் பாடல்களில் இசை" என்னும் தலைப்புகளில் இந்நூல் ஆசிரியரால் நிறைவு செய்யப்பட்டு நூலாக்கம் பெற்றுள்ளன. தேவாரப் பாடல்களின் இசை ஆய்வின் மூன்றாவதும் இறுதித் தொகுதியுமான "சுந்தரர் தேவாரப் பாடல்களில் இசை" என்னும் தலைப்பில் இவ்ஆய்வு தற்போது வெளி வருகிறது.

சுந்தரர் அருளிச் செய்துள்ள 101 திருப்பதிகங்களே இவ் ஆய்வுக்குரிய மூல ஆதாரங்களாகும்.

திருமுறைகண்ட புராணத்தில் சுந்தரர் பதிகங்கள் அமைந்த பண்களுக்குக் குறிப்பிடப்பட்டுள்ள கட்டளைகளை, இப் பண்களிலமைந்த பதிகங்களின் முதற்பாடல், முதல் வரிக்குச் சந்தக்குழிப்பு அமைத்தும், சீர்பிரித்துப் பார்த்தும் அதிலிருந்து பெறப்படுகின்ற கட்டளைகளோடு ஒப்பிட்டு மறுபரிசீலனைச் செய்யப்பட்டுள்ளமை இவ்வாய்வின் சிறப்பம்சமாகும். மேலும், இதுவரையில் சுரதாளக் குறிப்புடன் நூல்களில் வெளிவராத பாடல்களுக்குச் சுரதாளக்குறிப்பு அமைத்து இவ்ஆய்வு நூலில் கொடுக்கப்பட்டுள்ளமை மற்றொரு சிறப்பம்சமாகும்.

பெரியபுராணத்தின் பாட்டுடைத் தலைவரானச் சுந்தரர் பாடியுள்ள நூறு பதிகங்களின் அமைப்பும், பாடல்களின் சிறப்பும் இதனோடு தொடர்புடைய வரலாறும் பண்கள் வாரியாக இயல் ஒன்றில் தனித்தனியே ஆராயப்படுகிறது.

சுந்தரர் கையாண்டுள்ள பண்களைப் பல்வேறு வகைகளில் வகைப்படுத்தி, அப்பண்களில் அமைந்த சுந்தரர் பாடல்களின் இசைக்கூறுகள் இயல் இரண்டிலும் இயல் மூன்றிலும் ஆராய்ப்பட்டுள்ளன. இதில் முறையே சங்க இலக்கியங்களில் காணப்பெறும் பண்கள் பற்றிய குறிப்புக்களும், பண்கள் இலக்கணமும், பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவில் கிடைத்த பண்களுக்குரிய இராகங்கள் பற்றிய குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன.

திருமுறைகண்ட புராணத்தில் பண்களுக்குத் தரப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கை மறுபரிசீலனைச் செய்து ஆராயப்பட்டுள்ளது. இஃது ஒவ்வொரு பண்களில் அமைந்த பதிகங்களின் முதல்வரிக்குச் சந்தக்குழிப்பு அமைத்தும், சந்த அட்சரங்களைக் கணக்கிட்டும், அசை சீர் பிரித்துப் பார்த்தும், சீர்களில் அடங்கியுள்ள எழுத்துக்களைக் கணக்கிட்டுப் பார்ப்பதன் மூலமும் செய்யப்பட்டுள்ளன. இதன்மூலம் ஒவ்வொரு பதிகத்திற்கும் தாள நிருணயம் செய்யப்பட்டுள்ளது. இவ்வாறு கிடைக்கின்ற கட்டளை எண்ணிக்கைக்கும், திருமுறைகண்ட புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கைக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளும் பட்டியலிட்டுக் காட்டப் பட்டுள்ளன. இதுவரையில் சுரதாளக் குறிப்புடன் நூல்களில் வெளிவராத பாடல்களுக்குச் சுரதாளக் குறிப்பு அமைத்தும் இவ்வியல்களில் தரப்பட்டுள்ளன.

சுந்தரரின் 101 பதிகங்கள் தற்போதைய பாடுமுறையில் எந்த அளவு மாற்றங்கள் அடைந்தும் அடையாமலும் அமைகின்றன என்பது இயல் நான்கில் ஆராயப்பட்டுள்ள செய்தியாகும். மரபு வழியாகப் பாடப்பட்டு வரும் பழமையான மெட்டுக்களில் அமைந்த சுந்தரர் பாடல்கள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன. மேலும், தற்போது ஒலிப்பதிவு நாடாக்களில் வெளிவந்துள்ள பாடல்களின் இசையும் இதில் பரிசீலிக்கப்பட்டுள்ளன.

இந்த நான்கு இயல்களில் கண்ட ஆய்வு முடிவுகள் இயல் ஐந்தில் தொகுக்கப்பட்டுள்ளன.

பிற்சேர்க்கையாகச் சுந்தரர் பதிகப்பட்டியல், சுந்தரர் கையாண்டுள்ள பண்களுக்குரிய இராகங்கள், . பண்களின் இலக்கணம், திருமுறைகண்ட புராணம் - பண்களின் கட்டளைகளுக்குரிய வரிகள், துணைநூற்பட்டியல் ஆகியவை சேர்க்கப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

# சுந்தரர் பதிகங்களின் இயலிசை அமைப்பு

இவ்வியலில் , சுந்தரர் பாடியுள்ள நூறுபதிகங்களின் அமைப்பும் பாடல்களின் சிறப்பும் இதனோடு தொடர்புடைய வரலாறும் தனித்தனியே ஆராயப்படுகிறது. ஒன்றுமுதல் பன்னிரண்டு பதிகங்கள் வரையில் இந்தளப் பண்ணில் அமைந்த பதிகங்களைக் காணலாம்.

1. "பித்தா பிறைசூடி" எனத் தொடங்கும் பதிகம் இந்தளப் பண்ணில் அமைந்தது. திருவெண்ணெய் நல்லூர் தலத்துப் பதிகம். இறைவனே முதலடி எடுத்துக் கொடுத்துப் பாடச் செய்த சிறப்பினை உடையது. பத்துப் பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் மூன்றாம், நான்காம் வரிகளின் முதற்சீர்களில் சிறிது மாற்றம் கொண்டு,

*".........பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்*
*அருள் துறையுள்*
*..........உனக்கு ஆள்ஆய் இனி அல்லேன் எனல் ஆமே?"*

என்ற வினாவுடன் முடிவடைகிறது. ஒவ்வொரு பாடலும் இறைவன் தம்மை ஆட்கொண்ட பெருங்கருணைத் திறத்தை நினைந்து உருகிப் பாடும் பாடல்களாகத் திகழ்கின்றன. இக்கருத்திற்கேற்ப பக்திச்சுவையைச் சிறப்பாக வெளிப்படுத்தக் கூடிய இந்தளப் பண்ணில் இப்பதிகத்தை அமைத்துப் பாடியிருப்பது பொருத்தமானதாகும். சான்றாக, மோனைச் சிறப்பு நிரம்பித் ததும்பும் ஏழாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

*ஊனாய், உயிர்ஆனாய்; உடல்ஆனாய்; உலகுஆனாய்;*
*வான் ஆய், நிலன்ஆனாய்; கடல்ஆனாய்; மலைஆனாய்;*
*தேன் ஆர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்*
*நல்லூர் அருள்துறையுள்;*
*ஆனாய்! உனக்கு ஆள்ஆய் இனி அல்லேன்*
*எனல்ஆமே?"*

## இப்பாடல் எழுந்த சூழல்

சுந்தரருக்கும், சடங்கவியார் புதல்விக்கும் புத்தூரில் திருமணம் நடைபெறவிருக்கும் வேளையில் சிவபெருமான் தம் அடியாரைத் தடுத்தாட் கொள்ளும் பொருட்டு அந்தண வடிவம் பூண்டு திருமணப் பந்தலை அடைந்தார். அவையோரை நோக்கி சுந்தரருக்கும் தமக்கும் உள்ள தொடர்பால் ஏற்கனவே ஒரு பெருவழக்கு இருக்கின்றது. அதனை முடித்தே சுந்தரர் தம் மணவேள்வியை நிகழ்த்த வேண்டுமென்றார். சுந்தரரும் அதற்கு ஒப்புக்கொண்டார். அந்தணர் வேடம் பூண்ட இறைவன், அவையோரை நோக்கி, "இந்த நாவலூரான் என் அடியான். இதுதான் நான் சொல்வது" என்றார். இதனைக் கேட்டவுடன் சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஓர் அந்தணர் மற்றோர் அந்தணருக்கு அடிமையாதல் எவ்வாறு? என்று எள்ளி நகையாடினார். அவ்வாறிருந்தால் அதற்கு ஆதாரமாக தம் முன்னோர் எழுதித் தந்த அடிமையோலையைக் காட்டும்படி கூறினார். அடிமைத் தொழில் செய்வதற்குரிய நீ ஓலையைப் பார்க்க உரியவன் அல்லன் என்று அந்தணர் கூற சுந்தரர் அந்தணர் கையிலிருந்த ஓலையைப் பிடுங்கிக் கிழித்தெறிந்தார்.

திருவெண்ணெய் நல்லூரில் வாழ்பவர் அவ்வேதியர் என்பதை உணர்ந்து, அவ்வூர்ச் சபையினிடம் வழக்குப் பேசலாமென யாவரும் சென்றனர். அவையின் முன் தம் வழக்கைக் கூறவும், முதலில் அவர்கள் நம்பவில்லை. பிறகு அந்தணர் "இவன் கிழித்தது மூலவோலையின் படி. மூலஓலை இதோ இருக்கிறது" என்று காட்ட அவையினர்

சுந்தரர் அம்முதியவருக்கு அடிமையாக ஏவல் செய்ய வேண்டும் என்று முடிவு செய்தனர். பிறகு முதியவரை நோக்கி, "ஓலையில் நீர் இந்த ஊரினர் என்று குறித்திருக்கிறது. உம்முடைய இருப்பிடம் எது? என்று கேட்க, "ஒருவரும் அறியீரோ" என்று சொல்லி அந்தணர், நம்பி ஆரூரையும் மற்றவர்களையும் அழைத்துச் சென்று, திருவருட்டுறை என்னும் கோயிலின் உள்ளே சென்று மறைந்தார். தொடர்ந்து வந்தவர்கள் கோயிலுள் சென்றவரைக் காணாமல் வியந்து நிற்கச் சிவபெருமான் இடப வாகனத்தின் மேல் எழுந்தருளி ஆரூரருக்குக் காட்சி தந்து, "நீ முன்பே நமக்குத் தொண்டன்; நீ பிறர்பால் வைத்த பற்றின் காரணமாக நம்முடைய கட்டளைப்படி இவ்வுலகிற் பிறந்தனை. துன்பமிக்க வாழ்க்கையோடுள்ள தொடர்பினை அறுப்பதற்காக அந்தணர் முன் வழக்குத் தொடர்ந்து நாமே உம்மைத் தடுத்தாட்கொண்டோம்; நம்மை வன்மை பேசினமையால் நீ வன்தொண்டன் என்ற பெயருக்கு உரியாய். நமக்கு அருச்சனைப் பாட்டாகத் தமிழ்ப் பதிகங்கள் பாடுவாயாக" என்று அருளினார். ஆரூரர், "நான் எம்பெருமானைப் பாடுமாறு அறியேனே!" என உரைக்க, நம்மைப் பித்தன் என்றாய்; அதையே வைத்துப் பாடுக" என்று பெருமான் அருள, அவ்வாறே "பித்தா பிறைசூடி" என்ற திருப்பதிகத்தை அமைத்துப் பாடினார்.[1]

2. "கோத்திட்டையும் கோவலும்" எனத் தொடங்கும் பதிகம் 11 பாடல்கள் கொண்டது. திருப்பரங்குன்றத் தலத்துப் பதிகம். இப்பாடல்கள் சிவபெருமானின் பெருமைகளை வஞ்சப்புகழ்ச்சியாகக் கொண்டுள்ளன. இப்பதிகத்தின் ஆறாம் பாடலில் இசைக்குறிப்பு காணப்பெறுகிறது. இப்பாடல் வருமாறு:

*தென்னாத் தெனாத் தெத் ; தெனா என்று பாடிச்*
*சில்பூதமும் நீரும் திசைதிசையன;*
*பல் நால்மறை பாடுதிர்; பாசூர் உளீர்*

**படம்பக்கம் கொட்டும் திருஒற்றியூர்;**
**பண்ஆர் மொழியாளை ஓர்பங்கு உடையீர்**
**படுகாட்டு அகத்து என்றும்ஓர் பற்று ஒழியீர்;**
**"அண்ணாமலையேன்" என்றீர்; ஆரூர் உளீர்**
**அடிகேள்! உமக்கு ஆட்செய அஞ்சுதுமே".**

இதில் தென்னா, தெனா, தெத்தெனா போன்ற அசைச் சொற்களைக் கொண்டு பாடும் முறை கூறப்பட்டுள்ளது. இதுவே தற்போது தன்னா, தனா, தத்தனா என்று இராக ஆலாபனையின்போது பாடப்படும் அசைச் சொற்களாக மருவி இருக்கலாம்.[2]

இப்பாடலின் மூன்றாம் வரியில், உமையம்மையைப் "பண் ஆர் மொழியாள்" என்று சிறப்பித்திருப்பது குறிப்பிடத்தக்கது.

ஒவ்வொரு பாடலின் இறுதிவரி "அடிகேள்! உமக்கு ஆட்செய அஞ்சுதுமே என்னும் தொடருடன் முடிவடைகின்றது.

இப்பதிகத்தின் இறுதிப் பாடல் இப்பதிகத்தைக் கற்பதனால் வரும் பயன்களைக் கூறும் பாடலாகத் திகழ்கின்றது. திருஞானசம்பந்தர் ஒவ்வொரு பதிகத்திற்கும் திருக்கடைக்காப்பு வைத்திருப்பது போன்று சுந்தரர் சில பதிகங்களுக்குத் திருக்கடைக்காப்பு அமைத்துப் பாடியுள்ளார்.

3. "கல்வாய் அகிலும் கதிர் மாமணியும்" எனத் தொடங்கும் பாடல் திருநெல்வாயில் அரத்துறைத் தலத்துப் பதிகம். இது பத்துப் பாடல்களை உடையது. மூன்று முதல் ஒன்பது வரையிலான ஏழு பாடல்களின் இறுதி வரியிலும் "அடியேன் உய்யப் போவது ஓர் சூழல் சொல்லே" என்னும் தொடர் காணப்படுகிறது. பத்தாம் பாடலில் திருக்கடைக்காப்பும் அமையப் பெற்றுள்ளது. இப்பாடல் வருமாறு,

நீர் ஊரும் நெடுவயல் சூழ் புறவின்
நெல்வாயில் அரத்துறை நின் மலனைத்
தேர் ஊர்நெடுவீதி நல் மாடம்
தென் நாவலர் கோன்-அடித் தொண்டன்
ஆரூரன் உரைத்தன நல் தமிழின்
மிகு மாலை ஓர் பத்து இவை கற்றுவல்லார்
கள் ஊர் களி வண்டு அறை யானை மன்னர்
அவர் ஆகி ஓர் விண் முழுது ஆள்பவரே.

ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் தம்மை உய்விக்குமாறு இறைவனை வேண்டுகிறார். மூன்றாம் பாடலில், “எற்றே ஒரு கண் இலன்... மற்றே ஒரு பற்று இலன்” என்று தமக்கு ஒரு கண் இல்லை என்பதை அகச்சான்றாக இப்பாடலில் அமைத்துக் காட்டுகிறார்.

4. “தலைக்குத் தலைமாலை” எனத் தொடங்கும் பதிகம் திரு அஞ்சைக்களத் தலத்துப் பதிகம். பத்துப் பாடல்கள் கொண்டது. திருஞானசம்பந்தரைப் போன்று எட்டாம் பாடலில் இராவணன் பற்றிய குறிப்பினை வைத்துள்ளார். இப்பாடல் வருமாறு:

“வெறுத்தேன், மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன்;
விளங்கும் குழைக் காது உடை வேதியனே!
இறுத்தாய், இலங்கைக்கு இறை ஆயவனை
தலைபத்தொடு தோள்பல இற்று விழ
குறுத்தாய், கடல் நஞ்சு அமுது உண்டு கண்டம்
கடுகப் பிரமன் தலை ஐந்திலும் ஒன்று
அறுத்தாய்-கடல்அம் கரைமேல் மகோதை
அணிஆர் பொழில் அஞ்சைக் களத்து அப்பனே!”

சுந்தரர் இப்பதிகத்தின் முதல் இரண்டு பாடல்களில் “என்னே? என்னே?” என்று இறைவனின் தோற்றத்தை வியந்து வருணிக்கிறார். ஒன்று முதல் ஒன்பது பாடல்களின் இறுதி

வரி "அணி ஆர் பொழில் அஞ்சைக் களத்து அப்பனே!" என்று ஒத்து அமைகின்றது. இப்பதிகத்தின் திருக்கடைக்காப்புப் பாடலானப் பத்தாம் பாடலில்,

"...... ...... ........ .........

***மந்தம் முழவும் குழலும் இயம்பும்***
***வளர் நாவலர் கோன்-நம்பி ஊரன் சொன்ன***
***சந்தம் மிகு தண்தமிழ் மாலைகள் கொண்டு***
***அடிவீழ வல்லார் தடுமாற்று இலரே"***

என்றவாறு மந்தம் முழவு, குழல் ஆகிய இசைக்கருவிகள் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

5. "நெய்யும் பாலும் தயிரும்" எனத் தொடங்கும் திரு ஓணகாந்தன் தளி தலத்துப் பதிகம் 10 பாடல்களைக் கொண்டுள்ளது. ஒன்று முதல் ஒன்பது பாடல்களின் இறுதி வரியில் "ஓணகாந்தன் தளி உளீரே" என்று முடிவடைகிறது. பத்தாம் பாடலில் திருக்கடைக்காப்பும் இடம்பெறுகிறது. இப்பதிகத்தில் சிவபெருமானை இகழ்வது போல் புகழ்ந்து பேசும், வஞ்சப்புகழ்ச்சி இடம் பெறுகிறது. சான்றாக, ஒன்பதாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

***"வாரம் ஆகித் திருவடிக்குப் பணிசெய் தொண்டர் பெறுவது என்னே?***
***ஆரம் பாம்பு; வாழ்வது ஆரூர்; ஒற்றியூரேல், உ(ம்) மது அன்று;***
***தாரம் ஆகக் கங்கையாளைச் சடையில் வைத்த அடிகேள்! உம்தம்***
***ஊரும் காடு(வ்) உடையும் தோலே ஓணகாந்தன் தளிஉளீரே!"***

6. "படம் கொள் நாகம் சென்னி சேர்த்தி" எனத் தொடங்கும் பதிகம் திருவெண்காடு தலத்தில் பாடப் பெற்றது. பத்துப் பாடல்கள் கொண்டது. இப்பதிகமும் சிவபெருமானின்

பெருமைகளை வஞ்சப் புகழ்ச்சியாகப் பாடப்பெற்றது. சான்றாக நான்காம் பாடல் வருமாறு:

*"பண் உளீராய்ப் பாட்டும் ஆனீர்; பத்தர் சித்தம் பரவிக்*
*கொண்டீர்*
*கண் ஊளீராய்க் கருத்தில் உம்மைக் கருதுவார்கள் காணும்*
*வண்ணம்*
*மண் உளீராய் மதியம் வைத்தீர் வானநாடார் மருவி ஏத்த*
*விண் உளீராய் நிற்பது என்னே! வேலைசூழ்*
*வெண்காடனீரே"*

என்று ஒன்று முதல் ஒன்பது பாடல்களின் இறுதி வரியிலும், "வேலைசூழ் வெண்காடனீரே" என்னும் தொடர் காணப்படுகிறது. இறுதிப் பாடல் திருக்கடைக்காப்பாக அமைந்துள்ளது.

7. "மத்தயானை ஏறி" எனத் தொடங்கு பாடல் திரு எதிர் கொள் பாடி தலத்துப் பாடல். 11 பாடல்கள் அமைந்தது. ஒன்று முதல் பத்து பாடல்களின் இறுதி வரியில். "கோயில் எதிர் கொள்பாடி என்பது அடைவோமே" என்னும் தொடர் ஒத்தமைந்து உள்ளது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பதிகம் நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையை விடுத்து இறைவனைச் சரணடைவோம் என்று அறிவுறுத்தும் போக்கில் அமைந்துள்ளது. சான்றாக, இரண்டாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

*"தோற்றம் உண்டேல், மரணம் உண்டு; துயரம்,*
*மனைவாழ்க்கை;*
*மாற்றம் உண்டேல், வஞ்சம் உண்டு" நெஞ்ச*
*மனத்தீரே!*
*நீற்றர், ஏற்றர், நீலகண்டர், நிறைபுனல் நீள் சடைமேல்*
*ஏற்றர், கோயில் எதிர் கொள்பாடி என்பது அடைவோமே".*

8. "இறைகளோடு இசைந்த இன்பம்" எனத் தொடங்கும்

பதிகம், திரு ஆரூர் தலத்துப் பதிகம். ஒன்று முதல் ஒன்பது பாடல்களின் இறுதிவரியில், "ஆரூர் அப்பனே அஞ்சினேனே" என்னும் தொடர் வந்துள்ளது. பத்தாம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாக அமைந்துள்ளது.

இப்பதிகம், "நிலையற்ற இப்பிறவியை யாம் விரும்பவில்லை. இதனை நினைந்து அஞ்சினேனே" என்னும் பொருளில் அமைந்துள்ளது. சான்றாக ஆறாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

***மணம் என மகிழ்வர், முன்னே மக்கள் தாய் தந்தை***
***சுற்றம் பிணம் எனச் சுடுவர், பேர்த்தே; பிறவியை***
***வேண்டேன், நாயேன்;***
***பணை இடைச் சோலை தோறும் பைம் பொழில்***
***வளாகத்து எங்கள்***
***அணை வினைக் கொடுக்கும் ஆரூர் அப்பனே!***
***அஞ்சினேனே'.***

ஏழாம் பாடலின் இறுதியில், "யாழ் முரன்று இருக்கும் ஆரூர்" என்று யாழ்க் கருவியைக் குறிப்பிடுகின்றார்.

9. "மலைக்கும் மகள் அஞ்ச(ம்) எனத் தொடங்கும் பதிகம் திருஅரிசிற்கரைப் புத்தூர் தலத்துப் பதிகமாகும். பதினோரு பாடல்கள் கொண்டது. ஒன்று முதல் பத்து பாடல்களின் இறுதி வரி, "அழகு ஆர் திருப்புத்தூர் புனிதனீரே" என்னும் வரியாக அமைந்துள்ளது. இறுதிப் பாடல் திருக்கடைக் காப்பாகும்.

இப்பதிகப் பாடல்கள் சிவபெருமானின் பெருமைகளையும், திருவிளையாடல்களையும், திருநடனக் காட்சியையும் வருணிக்கும் வண்ணம் அமைந்துள்ளன. சான்றாக, எட்டாம் பாடல் வருமாறு:

பறைக்கண் நெடும் பேய்க்கணம் பாடல் செய்ய
குறள் பாரிடங்கள் பறைதாம் முழக்க
பிறைக் கொள் சடைதாழ, பெயர்ந்து, நட்டம்
பெருங்காடு அரங்குஆக நின்று, ஆடல் என்னே!
கறைக்கொள் மணிகண்டமும், திண்தோள்களும்,
கரங்கள், சிரம் தன்னிலும், கச்சும் ஆகப்
பொறிக் கொள் அரவம் புனைந்தீர், பலவும்
பொழில் ஆர் திருப்புத்தூர்ப் புனிதனீரே!".

இப்பாடலில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பேய்க்கணம் பாடல் செய்வதும், பறை முழக்கத்திற்கேற்பவும், காட்டினை அரங்காக மாற்றி ஆடல் செய்யும் சிவபெருமானின் திருநடனக் காட்சியை நம் கண்முன்னே நிறுத்துகின்றார்.

10. "தேன் நெய் புரிந்துழல்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சி அனேகதங்காவதம் தலத்தில் பாடப்பட்டது. பத்து பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும், "...கலிக்-கச்சி அனேகதங்காவதமே" என்னும் தொடருடன் முடிவடைகின்றது. பத்தாம் பாடல் திருக்கடைக் காப்பாக அமைந்துள்ளது. இப்பதிகத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தலத்துப் பெருமைகளையும், சிவபெருமான் விரும்பி ஆடும் இடம் இத்தலமாகும் எனவும் உரைக்கின்றார். சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு

"கூறு நடைக் குழிகண் பகுவாயன
பேய் உகந்து ஆட, நின்று ஓரிஇட
வேறுபடக் குடகத் தி(ல்)லை அம்பலவாணன்
நின்று ஆடல் விரும்பும் இடம்;
ஏறு விடைக் கொடி எம்பெருமான்,
இமையோர் பெருமான், உமையாள் கணவன்,
ஆறு சடைக்கு உடை அப்பன் இடம், கலிக்
கச்சி அனேகதங்காவதமே".

11. "திருஉடையார்" எனத் தொடங்கும் பாடல் திருப்பூவணம் தலத்தில் பாடப் பெற்றது. எட்டுப் பாடல்கள் கொண்டது. எட்டாம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாக அமைந்துள்ளது. இப்பாடலில்,

*"...சொல் மாலைகள் பத்து இவை*
*பாரில் உரைப்பவர் பாவம் அறுப்பரே"*

என்று காணப்படுகிறது. எனவே, இப்பதிகத்தில் 10 பாடல்கள் இருந்திருக்க வேண்டும். இரண்டு பாடல்கள் கிடைக்கவில்லை என்று கூறலாம். ஒன்று முதல் ஏழு பாடல்களின் இறுதிவரியில், "...உறை பூவணம் ஈதோ" என்று முடிவடைகிறது. இப்பாடல்களில் திருப்பூவணத் தலத்துப் பெருமைகளும், சிவபெருமான் வருணனைகளும் இடம் பெற்றுள்ளன. சான்றாக, நான்காம் பாடல் வருமாறு:

*"நிலன் உடை மான்மறி கையது; தெய்வக்*
*கனல் உடை மா மழு ஏந்தி; ஓர்கையில்*
*அனல் உடையார்; அழகு ஆர் தரு சென்னிப்*
*புனல் உடையார்; உறை பூவணம் ஈதோ!"*

இரண்டாம் பாடலில் மூன்றாம் வரியில்,

*"பண் இசை ஆர் மொழியார் பலர் பாடப்*
*புண்ணியனார்"*

என்றவாறு பண் இசைப் பாடுதல் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

12. "வீழக் காலனை" எனத் தொடங்கும் பதிகம் திருநாட்டுத் தொகை பதிகம். பதினோரு பாடல்கள் கொண்டது. ஒன்று முதல் பத்துப் பாடல்கள் வரையிலும், ஒவ்வொரு பாடலிலும், சிவபெருமான் உறையும் தலங்கள் கொண்ட ஊர்ப்பெயர்கள் காணப்படுகின்றன. பதினோராம்

பாடல், திருக்கடைக் காப்புப் பாடலாகத் திகழ்கின்றது. சான்றாக நான்காம் பாடல் இங்கு தரப்படுகிறது.

*"தேங் கூரும், திருச்சிற்றம்பலமும், சிராப்பள்ளி*
*பாங்கு ஊர், எங்கள் பிரான் உறையும்-கடம்பந்துறை*
*பூங்கூரும்-பரமன் பரஞ்சோதி பயிலும்ஊர்*
*நாங்கூர் நாட்டு நாங்கூர், நறையூர் நாட்டு நறையூரே"*

இப்பதிகத்தில் இடம்பெற்றுள்ள ஊர்ப்பெயர்கள் வருமாறு:

1. ஆலங்காடு
2. இராமேசுவரம்
3. கடம்பந்துறை
4. கடற்கரை
5. கழிப்பாலை
6. கீழையம்
7. கீழைவழி
8. குரங்கணில் முட்டம்
9. குறுக்கை
10. குற்றாலம்
11. கொண்டல்
12. கோவலூர்
13. சிராப்பள்ளி
14. தகட்டூர்
15. தக்களூர்
16. தண்டங்குறை
17. தண்டந்தோட்டம்
18. தண்டலை
19. தருமபுரம்
20. தாழையூர்
21. திருக்கானப்பேர்
22. திருச்சிற்றம்பலம்
23. திருச்சுழியல்
24. திருத்தேவனூர்
25. துருத்தி
26. தென்னூர்
27. தேங்கூர்
28. நறையூர்
29. நாங்கூர்
30. நாலனூர்
31. பழையாறு
32. புரிசை
33. பூங்கூர்
34. பொன்னூர்
35. மருகல்
36. மாதோட்டம்
37. மிழலை மிழலைநாடு
38. மிழலை வெண்ணிநாடு
39. மூலனூர்
40. வெண்ணி
41. வெற்றியூர்
42. வேலனூர்

இந்தளப் பண்ணில் அமைந்த மேற்கண்ட பதிகங்கள் யாவும் சிவபெருமானின் பெருமைகளையும், இறைவனின்

பெருங்கருணைகளையும், சிறப்பிக்கும் வகையில் அமைந்துள்ளன. இதனை இந்தளப் பண்ணின் மூலம் நல்லமுறையில் வெளிபடுத்த முடியும். இப்பண்ணிற்கு நேரான இராகமான நாதநாமக்கிரியைப் பக்திச்சுவைக்கு உரியது என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ஆகவே, இந்தளப் பண் இசை மேற்கண்ட பதிகப் பாடல்களை நல்லமுறையில் இசைத்து, வெளிப்படுத்துவதில் உறுதுணையாக அமைந்துள்ளது எனக் கருதலாம்.

இனி, தக்கராகப் பண்ணில் அமைந்த 13 முதல் 16 வரையிலானப் பதிகங்களை ஆராயலாம்.

13. "மலை ஆர் அருவி" எனத் தொடங்கும் பதிகம் திருத்துறையூர் தலத்துப் பதிகமாகும். பதினொரு பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும் வெவ்வேறாக இறைவனை விளித்து, "உனை வேண்டிக் கொள்வேன் தவ நெறியே" என்று நிறைவடைகிறது. பதினோறாம் பாடல் திருக்கடைக்காப்பாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலின் இரண்டாம் வரி இறுதியில் "ஓர் பெண்ணை வடபால்" என்னும் தொடர் இடம்பெறுகிறது.

இப்பதிகப் பாடல்கள் தல வருணனையாகவும், இறைவனிடம் தவநெறி வேண்டும் வகையிலும் அமைந்துள்ளன. சான்றாக, ஆறாம் பாடல் வருமாறு:

> *"மட்டு ஆர் மலர்க் கொன்றையும் வன்னியும் சாடி,*
> *மொட்டு ஆரக் கொணர்ந்து எற்றி, ஓர் பெண்ணை வடபால்,*
> *கொட்டு ஆட்டொடு பாட்டு ஒலி ஓவா, துறையூரில்*
> *சிட்டா! உனை வேண்டிக் கொள்வேன், தவநெறியே".*

இப்பாடலில், கொட்டு (இசைக்கருவி) ஆடல், பாடல் ஒலி குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை, "சங்கீத த்ரயம்" எனப்படும் கீத, வாத்ய, நிருத்யம் என்பதனோடு ஒப்பிடலாம்.[3]

14. "வைத்தனன் தனக்கே" எனத் தொடங்கும் திருப்பாச்சிலாச் சிராமம் தலத்துப் பதிகம் 12 பாடல்களைக் கொண்டமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "இவர் அலாது இல்லையோ, பிரானார்?" என்னும் வினாவுடன் அமைந்துள்ளது. பன்னிரண்டாம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாக அமைந்துள்ளது.

இப்பதிகப் பாடல்கள் சிவபெருமானின் பெருமைகளை வஞ்சப் புகழ்ச்சியாக உரைக்கும் பாடல்களாகும். சான்றாக, ஏழாம் பாடல் வருமாறு

*கையது கபாலம்; காடு உறை வாழ்க்கை;*
*கட்டங்கம் ஏந்திய கையர்?*
*மெய்யது புரிநூல்; மிளிரும் புன்சடைமேல்*
*வெண் திங்கள் சூடிய விகிர்தர்;*
*பைஅரவு அல்குல் பாவையர் ஆடும்*
*பாச்சிலாச் சிராமத்து எம் பரமர்;*
*மெய்யரே இவர் ஒத்துஓர் பொய் செய்வது ஆகில்*
*அலாது இல்லையோ, பிரானார்?"*

15. "பூண் நாண் ஆவது ஓர்" எனத் தொடங்கும் பதிகம், திருநாட்டியத்தான் குடி தலத்துப் பதிகமாகும். பத்துப் பாடல்களைக் கொண்டது. ஒன்று முதல் ஒன்பது பாடல்களின் இறுதி வரியில், "நாட்டியத்தான் குடி நம்பி!" என்று முடிவடைகின்றது. பத்தாம் பாடல் இப்பதிகத்தைப் பாடுவதால் ஏற்படும் பயன்களை உரைக்கின்றது.

இப்பதிகத்தில், சுந்தரர் சிவபெருமானைப் பலவாறு புகழ்ந்து, தம்முடைய வினைதீர்த்து அருளுமாறு இறைஞ்சி வேண்டுகிறார். ஒன்பதாம் பாடலில் சமணர்கள் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. சான்று:

*குண்டாடிச் சமண் சாக்கியப் பேய்கள்*
*கொண்டார் ஆகினும், கொள்ளக்*
*கண்டாலும், கருதேன்; எருது ஏறும்*
*கண்ணா! நின் அலது அறியேன்;*
*தொண்டாடித் தொழுவார் தொழக் கண்டு*
*தொழுதேன், என் வினை போக;*
*நண்டு ஆடும் வயல்-தண்டலை வேலி*
*நாட்டியத் தான்குடி நம்பீ!"*

## *இப்பாடல் எழுந்த சூழல்*

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரினின்று நீங்கி பல தலங்களையும் வணங்கிச் சென்று கோட்புலி நாயனாரின் ஊராகிய திருநாட்டியத்தான் குடியை நெருங்கியபோது, கோட்புலி நாயனார் தம் ஊரை நன்கு அலங்கரித்து, சுவாமிகளை எதிர்கொண்டழைத்து, அவருக்கு அளவற்ற சிறப்புச் செய்தார். அவரைத் தமது வீட்டிற்கு அழைத்துச் சென்று அமுது படைத்து, தம் புதல்வியராகிய, சிங்கடியார், வனப்பகையார் என்னும் இருவரையும் அழைத்துச் சுந்தரரின் திருவடிகளைத் தொழும்படி கூறினார். சுந்தரர், அவர்கள் தமக்கு நற்புதல்வியர் என்று கூறி தமது மடிமீது வைத்துத் தூய அன்புள்ளத்தோடு உச்சி மோந்து அவர்களுக்கு வேண்டுவனவற்றை அளித்துவிட்டுத் திருக்கோயிலை அடைந்தார். அங்கு, "பூணாணவதோர்" எனத் தொடங்கும் மேற்குறிப்பிட்ட பதிகத்தைப் பாடி அதில் கோட்புலியாரது அருளுரிமையைச் சிறப்பித்துப் பாடி அப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில், "சிங்கடி அப்பன்" என்று தம்மை சிங்கடியாரின் தந்தை என்று குறிப்பித்தருளினார்.[4]

16. "குரும்பை முலை மலர்க்குழலி" எனத் தொடங்கும் பதிகம், திருக்கலய நல்லூர் தலத்துப் பதிகமாகும். பதினோரு பாடல்கள் கொண்டது. ஒன்று முதல் பத்துப் பாடல்களின் இறுதி வரியில், "கலய நல்லூர் காணே" என்று முடிவடைகிறது. பதினோறாம் பாடல் திருக்கடைக்காப்பாக அமைந்துள்ளது.

ஒவ்வொரு பாடலிலும் சிவபெருமானின் பெருமைகளைக் கூறி, அவன் இருக்கும் ஊர் எது என்று வினவினால், அஃது கலயநல்லூரே" என்னும் பொருள்பட பாடியுள்ளார். ஏழாம் பாடலில் இராவணன் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. திருக்கடைக்காப்புப் பாடலில் சடையன்-இசைஞானி சிறுவன் என்று தம்மைக் குறிப்பிடுகிறார். இப்பாடல் வருமாறு

*"தண் புனலும் வெண்மதியும் தாங்கிய செஞ்சடையான்,*
*தாமரையோன் தலை கலனாக் காமரம் முன் பாடி*
*உண் பலி கொண்டு உழல் பரமன், உறையும் ஊர், நிறைநீர்*
*ஒழுகு புனல் அரிசிலின் தென் கலய நல்லூர் அதனை,*
*நண்பு உடைய-நன் சடையன் இசை ஞானி சிறுவன்,*
*நாவலர் கோன் ஆருரன் நாவின் நயந்து உரை செய்*
*பண் பயிலும் பத்தும் இவை பத்தி செய்த நித்தம்*
*பாட வல்லார், அல்லலொடு பாவம் இலர், தாமே".*

"பண் பயிலும் பத்தும்" என்னும் குறிப்பில் பண்ணோடு பாடுதற்குரிய பாடல்களாக இவற்றைக் குறிப்பிடுகின்றார்.

மேற்கண்ட பதிகங்கள் யாவும் இறைவன் பெருமைகளை வியந்தும், பல்வேறு வகையாக வஞ்சப்புகழ்ச்சியாக விளித்தும், இறைவனிடம் தவநெறி வேண்டியும் பாடப்பட்டுள்ளன. இத்தகைய உணர்ச்சிகளைத் தக்கராகப் பண் நல்லமுறையில் வெளிப்படுத்துகின்றது. இப்பண்ணின் நேர் இராகமான காம்போதியும் அற்புத சுவையை வெளிபடுத்துகின்றமை குறிப்பிடத் தகுந்தது. ஆகவே தக்கராகப் பண் இசை, மேற்கண்ட பதிகப் பாடல்களை இசைப்பதற்கு உறுதுணையாக அமைந்துள்ளது எனக் கருதலாம்.

17 முதல் 30 வரை நட்ட ராகப் பண்ணிலமைந்தவை. அப்பதிகங்கள் ஈண்டு ஆராயப்படுகிறது.

17. "கோவலன் நான்முகன்" எனத் தொடங்கும் பதிகம் திருநாவலூர் தலத்துப் பதிகமாகும். பதினொரு பாடல்கள் கொண்டது. ஒன்று முதல் பத்துப் பாடல்களின் இறுதி வரியில் "...இடம் ஆவது நம் திருநாவலூரே" என்று முடிவடைகிறது. 11-ஆம் பாடல் திருக்கடைக் காப்பாக அமைந்துள்ளது.

இப்பாடல்களில் சிவபெருமானின் பெருமைகளைப் புகழ்ந்தும், திருவியைாடல்களை நினைந்தும், வெண்ணெய் நல்லூரில் தம்மை தடுத்தாட்கொண்ட திறத்தையும் கூறி அப்பேர்பட்ட இறைவனுக்கு இடம் ஆவது திருநாவலூரே என்று குறிப்பிடுகிறார். சான்றாக ஆறாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

***"கோட்டம் கொண்டார், குட மூக்கிலும் கோவலும்***
***கோத்திட்டையும்***
***வேட்டம் கொண்டார் வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை***
***ஆளும் கொண்டார்***
***ஆட்டம் கொண்டார், தில்லைச் சிற்றம்பலத்தே;***
***அருக்கனைமுன்***
***நாட்டம் கொண்டார்க்கு இடம் ஆவது, நம் திரு நாவலூரே".***

18. "மூப்பதும் இல்லை பிறப்பதும்" எனத் தொடங்கும் பதிகம் திருவேள்விக்குடி தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. ஒன்று முதற்ப் பத்து பாடல்களின் இறுதிவரியில் "...அறிந் தோமேல் நாம் இவர்க்கு ஆட்படோமே!" என்று முடிவடைகின்றது. பத்தாம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாக அமைந்துள்ளது.

இப்பாடல்களில் சிவபெருமானின் பெருமைகள் வஞ்சப்புகழ்ச்சியாகப் பாடப்பட்டுள்ளன. சான்றாக மூன்றாம் பாடல் வருமாறு:

**"பேரும் ஓர் ஆயிரம் பேர் உடையார் பெண்ணோடு**
**ஆணும் அல்லர்;**
**ஊரும் அது ஒற்றியூர்; மற்றை ஊர் பெற்றவர் நாம் அறியோம்;**
**காரும் கருங்கடல் நஞ்சு அமுது உண்டு கண்டம் கறுத்தார்க்கு**
**ஆரம் பாம்பு ஆவது; அறிந்தோமேல் நாம் இவர்க்கு**
**ஆட்படோமே!"**

19. "அற்றவனார் அடியார் தமக்கு" எனத் தொடங்கும் பதிகம் திருநின்றியூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பாடல்கள் சிவபெருமானின் வருணனைகளாகவும் பெருமைகளை உரைப்பனவாகவும் அமைந்துள்ளன. சான்றாக, நான்காம் பாடல் வருமாறு:

**ஆறு உகந்தார், அங்கம், நால்மறையார் எங்கும் ஆகி அடல்**
**ஏறு உகந்தார், இசைஏழ் உகந்தார்; முடிக்கங்கைதன்னை**
**வேறு உகந்தார்; விரிநூல் உகந்தார்; பரி சாந்தம் அதா**
**நீறு உகந்தார்; உறையும் இடம் ஆம் திருநின்றியூரே"**

இப்பாடலில் இரண்டாம் வரியில் "இசை ஏழ் உகந்தார்" என்று ஏழிசையைக் குறிப்பிடுகிறார்.

20. "நீள நினைந்து அடியேன்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோளிலி தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. பத்தாம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒன்று முதல் ஒன்பது பாடல்களின் இறுதி வரியில், "அவை அட்டித்தரப் பணியே" என்று முடிவடைகின்றது. எட்டாம் பாடலில், "அரக்கன் முடிகரங்கள் அடர்த்திட்ட எம் ஆதிப்பிரான்" என்று இராவணன் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

### இப்பதிகம் எழுந்த சூழல்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரில் தங்கியிருக்கும் நாளில் குண்டையூர்க் கிழாரென்னும் ஒரு வேளாளர் நெல், பருப்புச் சர்க்கரை முதலிய பல பொருட்களைப் பரவையார் மாளிகைக்குக் கொண்டு போய் கொடுக்கும் பணி பூண்டு இருந்தார். அக்காலத்தில் மழை குறைந்து நிலவளம் சுருங்கினமையால், பரவையார் மாளிகைக்கு வேண்டிய அளவு நெல் கொடுக்க இயலாமையை நினைந்து வருந்திக் கொண்டிருந்தார். அப்போது சிவபெருமான் தோன்றி, "நம்பியாரூரக்கு வேண்டிய நெல் உமக்கு இப்போது தந்தோம்" என்றருளிச் செய்து அவ்வூர் முழுவதும் நிறையும் படியாக நெல்மலையை உண்டுபண்ணினார். விடிந்ததும் குண்டையூர்க் கிழார் நெல்மலையைக் கண்டு பெருவியப்புற்றுச் சுந்தரரிடம் சென்று இவ் அதிசயத்தைக் கூறினார். சுந்தரரும் குண்டையூர் சென்று நெல்மலையைக் கண்டு பெருவியப்புற்றார். பரவையாரின் வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போவதற்கு வேண்டிய ஆட்களையும் சிவபெருமானே தரவேண்டுமென்று அருகிலுள்ள தலமான திருக்கோளிலி சென்று இப்பதிகம் பாடினார்.[5]

இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலும் இதையே பொருளாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது. சான்றாக, முதற்பாடல் வருமாறு"

> ***நீள நினைந்து அடியேன் உமைநித்தலும் கைதொழுவேன்;***
> ***வாள் அனகண் மடவாள் அவள் வாடி வருந்தாமே,***
> ***கோளிலி எம்பெருமான்! குண்டையூர் சிலநெல்லுப்***
> ***பெற்றேன்;***
> ***ஆள் இலை; எம்பெருமான், அவை அட்டித்தரப்***
> ***பணியே!"***

21. "நொந்தா ஒண்சுடரே" எனத் தொடங்கும் திருக்கச்சி மேற்றளி தலத்துப் பதிகம் பத்துப் பாடல்களைக்

கொண்டமைந்துள்ளது. பத்தாம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாக அமைந்துள்ளது. (ஏழாம் பாடலில் இரவாணன் கைநரம்பால் வேத கீதங்கள் பாடிய குறிப்பு காணப்படுகிறது.) ஒவ்வொரு பாடலிலும் "திருமேற்றளி உறையும் சிவபெருமானே! உனையன்றி வேறு யாரையும் மகிழ்ந்து ஏத்தி பாட மாட்டேனே" என்று சுந்தரர் பாடுகின்றார். சான்றாக எட்டாம் பாடல் வருமாறு :

*விரைஆர் கொன்றையினாய் விமலா இனி! உன்னை*
*அல்லால்,*
*உரையேன், நாஅதனால், உடலில் உயிர் உள்ளளவும்;*
*சிறையூர், தன்கழனித் திருமேற்றளி உறையும்*
*அரையா! உன்னை அல்லால் அறிந்து ஏத்த மாட்டேனே"*

22. "முன்னவன் எங்கள் பிரான்" எனத் தொடங்கும் திருப்பழ மண்ணிப் படிக்கரை தலத்துப்பதிகம் 10 பாடல்கள் கொண்டமைந்துள்ளது. பத்தாம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாக அமைந்துள்ளது. ஏழாம் பாடலில் இராவணன் கைநரம்பால் வேத கீதங்கள் பாடிய குறிப்பு காணப்படுகிறது. ஒவ்வொரு பாடலிலும் சிவபெருமானின் பெருமைகளை உரைத்தும், சிவபெருமானை வருணித்தும், தொண்டர்களை விளித்து, "பழமண்ணிப் படிக்கரையை இருப்பிடமாகக் கொண்ட எம்பிரானை ஏத்தித் தொழுங்கள்". என்று அறிவுறுத்தும் வகையிலும் அமைந்துள்ளன. சான்றாக, ஐந்தாம் பாடல் வருமாறு:

*"உம் கைகளால் கூப்பி உகந்து ஏத்தித் தொழுமின்,*
*தொண்டீர்*
*மங்கை ஓர்கூறு உடையான், வானோர் முதல் ஆய பிரான்,*
*அம்கையில் வெண் மழுவன்(ன்) அலை ஆர் கதிர்*
*மூவிலைய*
*பங்கய பாதன், இடம் பழமண்ணிப் படிக்கரையே".*

23. "செடியேன் தீவினையில்" எனத் தொடங்கும் திருக்கழிப்பாலை தலப் பதிகம், 10 பாடல்கள் கொண்டது. இறுதிப் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்கள் சிலவற்றில் சுந்தரர் தம்மை தீவினையிலிருந்து ஆட்கொள்ளுமாறும், சிலவற்றில் சிவபெருமானின் அருளை நினைந்து நெகிழ்ந்தும் சிவபெருமானை வருணித்தும் பாடுகின்றார். எட்டாம் பாடலில், மூன்றாம் வரியில், "அடர்த்தாய், வல் அரக்கன் தலைபத் தொடு தோள் நெரியு" என்று இராவணனைப் பற்றிய குறிப்பையும் தருகின்றார். சான்றாக ஐந்தாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

> ***"ஒழிப்பாய், என் வினையை உகப்பாய் முனிந்து அருளித்***
> ***தெழிப்பாய்; மோதுவிப்பாய்; விலை ஆவணம் உடையாய்***
> ***கழிப்பால் கண்டல் தங்கச் சுழி ஏந்துமா மறுகின்***
> ***கழிப்பாலை மருவும் கனல் ஏந்து கையானே"***

24. "பொன்ஆர் மேனியனே" எனத் தொடங்கும் திருமழபாடி தலத்துப் பதிகமாகும். இஃது 10 பாடல்கள் கொண்டது. பத்தாம் பாடலில் திருக்கடைக் காப்பு அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் சிவபெருமானைப் பலவாறாகப் புகழ்ந்து, வருணித்து, "மழபாடியுள் மாணிக்கமே" உனை அன்றி வேறு யாரை நினைப்பேனே" என்று வினா தொடுத்துப் பாடுகின்றார். சான்றாக ஒன்பதாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

> ***"நெறியே நின்மலனே! நெடுமால் அயன் போற்றி செய்யும்***
> ***குறியே! நீர்மையனே! கொடி ஏர் இடையாள் தலைவா !***
> ***மறிசேர் அம்கையனே! மழபாடியுள் மாணிக்கமே!***
> ***அறிவே உன்னை அல்லால் இனி யாரை நினைக்கேனே?"***

25. "பொன் செய்த மேனியினீர்" எனத் தொடங்கும் திருமுதுகுன்றம் தலத்துப் பதிகம், 10 பாடல்கள்

கொண்டமைந்துள்ளது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பதிகம் எழுந்த சூழல் வருமாறு:

சுந்தரர் சிவபெருமானின் திருஅருளால் திருமுதுகுன்றத்தில் தமக்குக் கிடைத்த பொன் அனைத்தையும் யாவரும் வியக்கும் வண்ணம் திருவாரூரில் கிடைக்கச் செய்ய வேண்டுமென்று வேண்ட, இறைவனும் மணிமுத்தாற்றினிற் பொருள் முழுவதையும் இட்டுத் திருவாரூர் குளத்திற் போய் எடுத்துக் கொள்க" என்றருளினார். அவ்வாறே திருவாரூரில் பரவையாருடன் மகிழ்ந்திருக்கும் நாளில் ஒருநாள், தாம் மணிமுத்தாற்றில் விட்ட பொன்னை திருவாரூர் கோயில் குளத்தில் எடுக்கும் பொருட்டு, பரவையாருடன் கோயில் குளத்திற்குச் சென்ற இறைவனைக் கைதொழுது குளத்திலிறங்கி பொன்னை எடுப்பதற்குத் தடவினர். சிவபெருமான் இவருடைய திருப்பாட்டைப் பெறுவதற்கு விரும்பிச் செம்பொன்னை வருவிக்காமல் இருக்க பரவையாரும், "ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடுகின்றீரே" என்று கேட்க, சுந்தரரும், இறைவனை நோக்கி, முன்னேநீர் அருள் செய்தபடி பொன்னினைத் தாருமென்று, "பொன் செய்த மேனியினீர்" என்று மேற்கண்ட திருப்பதிகத்தை இசைத்தார்.[6]

இச் செய்தியையே ஒவ்வொரு பாடலிலும், முதுகுன்று அமர்ந்த சிவபெருமானே! பரவை வாடுகின்றாள். பொன்னினைத் தந்தருள வேண்டும்" என்று பாடுகின்றார். சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு:

> *உம்பரும் வானவரும்(ம்) உடனே நிற்கவே, எனக்குச்*
> *செம்பொனைத் தந்தருளி திகழும் முதுகுன்று அமர்ந்தீர்;*
> *வம்பு அமரும் குழலாள் பரவை இவள் வாடுகின்றாள்;*
> *எம்பெருமான்! அருளீர், அடியேன் இட்டளம் கெடவே!"*

எட்டாவது பாட்டளவும் இறைவன் பொன்னினைக் காட்டாதிருந்தார். ஒன்பதாம் பாடலான, "ஏத்தாது இருந்து அறியேன்" என்னும் பாட்டினைப் பாடியவுடன் பொன்

திரளானது கைக்கு வர அதனைக் கரையிலிட்டார். அங்கிருந்தோர் அனைவரும் பெரு வியப்பெய்தினார்.

26. "செண்டாடும் விடையாய்" எனத் தொடங்கும் திருக்காளத்தி தலப்பதிகம் 10 பாடல்களைக் கொண்டமைந்துள்ளது. இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் சுந்தரமூர்த்தி சுவாமிகள், இறைவனைப் பலவாறு வருணித்தும், அவன் பெருமைகளை உரைத்தும், காளத்திநாதரே! உமையன்றி வேறு ஒருவரையும் ஏத்திப் பாடமாட்டேன்" என்று நெகிழ்ந்து பாடுகின்றார். சான்றாக எட்டாம் பாடல் வருமாறு:

> *"நீறுஆர் மேனியனே! நிமலா! நினை அன்றி மற்றுக்*
> *கூறேன், நாஅதனால்; கொழுந்தே என் குணக்கடலே!*
> *பாறுஆர் வெண் தலையில் பலி கொண்டு உழல்*
> *காளத்தியாய்!*
> *ஏறே! உன்னை அல்லால் இனி ஏத்த மாட்டேனே"*

27. "விடை ஆரும் கொடியாய்" எனத் தொடங்கும் திருக்கற்குடி தலத்துப் பதிகம், பத்து பாடல்களைக் கொண்டது. பத்தாம் பாடலான திருக்கடைக் காப்புப் பாடலில் "நல்ல சிங்கடி அப்பன் உரை" என்னும் குறிப்பில் தம்மை சிங்கடியாரின் தந்தை என்று கூறிக் கொள்கிறார். இப்பதிகப் பாடல்களில் சுந்தரர் சிவபெருமானைப் பலவாறு வருணித்து அடியேனாகிய தம்மையும் "அஞ்சல்" என்னே" என்று வேண்டுகிறார். எட்டாம் பாடலில் இறைவன் பஞ்சபூதமாகவும் உள்ள திறத்தைக் காட்டுகிறார். இப்பாடல் வருமாறு:

> *நிலனே நீர், வளி, தீ, நெடுவானகம் ஆகிநின்ற*
> *புலனே புண்டரிகத்து அயன், மாலவன், போற்றிசெய்யும்*
> *கனலே! கற்பகமே! திருக்கற்குடி மன்னி நின்ற*
> *அனல்சேர் கையினே!-அடியேனையும் 'அஞ்சல்' என்னே!"*

28. "பொடி ஆர் மேனியனே" எனத் தொடங்கும் பதிகம், திருக்கடவூர் வீரட்டம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. இறுதிப் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "எனக்கு ஆர்துணை நீ அலதே?" என்று முடிவடைகின்றது இப்பாடல்களில் சுந்தரர் இறைவனின் பெருமைகளையும் சிறப்புக்களையும் வருணித்து, எனக்கு உம்மையன்றி வேறு யார் துணை இருக்கிறார்கள் என்று வினவுகின்றார். சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு :

> ***"மைஆர் கண்டத்தினாய் மதமா உரி போர்த்தவனே!***
> ***பொய்யாது என் உயிருள் புகுந்தாய்! இன்னம் போந்து அறியாய்!***
> ***கைஆர் ஆடுஅரவா! கடவூர் தனுள் வீரட்டத்துஎம்***
> ***ஐயா! என் அமுதே! எனக்கு ஆர்துணை, நீஅலதே?"***

29. "இத்தனை ஆம் ஆற்றை" எனத் தொடங்கும் திருக்குருகாவூர் வெள்ளடை தலத்துப் பதிகம் 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடலானத் திருக்கடைக் காப்புப் பாடலில், "வனப்பகை அவள் அப்பன்" என்னும் குறிப்பில் தம்மை வனப்பகையின் தந்தை என்று சுந்தரர் குறிப்பிடுகின்றார். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "குருகாவூர் வெள்ளடை நீ அன்றே" என்று முடிவடைகின்றது. ஒவ்வொரு பாடலிலும் சிவபெருமானின் பண்புகளைச் சிறப்பித்துக் கூறி, எம்மை ஆட்கொண்டவன் நீ அன்றோ' என்று பாடுகிறார். சான்றாக, ஆறாம் பாடல் வருமாறு:

> ***"பண் இடைத் தமிழ்ஒப்பாய்! பழத்தினில் சுவை ஒப்பாய்!***
> ***கண் இடை மணி ஒப்பாய்! கடு இருள் சுடர் ஒப்பாய்!***
> ***மண் இடை அடியார்கள் மனத்து இடர் வாராமே,***
> ***விண் இடைக் குருகாவூர் வெள்ளடை நீ அன்றே!"***

இப்பாடலில், "பண் இடைத் தமிழொப்பாய்" என்று சிவபெருமானைப் பண்ணிற்கும் தமிழிற்கும் ஒப்பிடுகிறார்.

## *இப்பாடல் பாடப்பட்ட சூழல்*

சுந்தரர் திருக்கருகாவூருக்குச் செல்லும்போது, அவருக்குப் பசியும் தாகமும் எடுத்தது. அதை உணர்ந்த சிவபெருமான் ஓர் அந்தணர் வடிவங் கொண்டு உணவும் தண்ணீரும் எடுத்துக்கொண்டு, வெயிலின் வெம்மையைத் தடுத்தற் பொருட்டு ஒரு குளிர்ந்த பந்தலமைத்து, அங்கு சில மறையவரோடு சுந்தரரை எதிர்நோக்கி அமர்ந்து கொண்டிருந்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் வந்தவுடன் அவரை எதிர் கொண்டழைத்து அவருக்கு உணவும் நீரும் கொடுத்தனர். பின்னர் அங்கு வந்த அனைவரும் உணவு உண்டு, அவ்வந்தணரை வாழ்த்தியபடியே அங்கு உறங்கினர். அப்போது இறைவன் பந்தலோடு மறைந்தார். துயில் நீங்கிய சுந்தரர் சிவபெருமான் திருவருளை வியந்து, "இத்தனை யாமாற்றை" என்னும் மேற்கண்ட பதிகத்தைப் பாடினார்.[7]

30. "சிம்மாந்து, சிம்புளித்து" எனத் தொடங்கும் பதிகம், திருக்கருப்பறியலூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டமைந்தது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இதில் "வனப்பகை அப்பன்" என்னும் குறிப்புக் காணப்படுகிறது. 3-ஆம் பாடலில், 3-ஆம் வரியில் கொட்டு ஆட்டுப் பாட்டு ஆகி நின்றானை" என்னும் குறிப்பில் இறைவனைக் கொட்டு (இசைக்கருவி) ஆடல், பாடல் ஆகிய மூன்றுமாகி நிற்பவன் என்று வருணிக்கிறார். 10-ஆம் பாடலில் "பண் தாழ் இன் இசை முரல" என்று பண்ணிசையைக் குறிப்பிடுகிறார். இதே பாடலில் 3-ஆம் வரியில், "குண்டாடும் சமணரும் சாக்கியரும் புறம் கூறும்" என்னும் குறிப்பில் சமணர் சாக்கியர்களைக் குறிப்பிடுகிறார். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "நினைந்தபோது அவர் நமக்கு இனிய ஆறே" என்று முடிவடைகின்றது.

ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் சிவபெருமானை வருணித்து, கருப்பறியலூர் தலத்தை வருணித்து, அத்தலத்து

இறைவனை நினைந்தபோது நமக்கு இனியவாறு உள்ளது என்று கூறுகிறார். சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு:

*"பொடி ஏறு திருமேனிப் பெருமானை, பொங்கு அரவக்*
*கச்சையானை,*
*கடிநாறும் பூம்பொய்கைக் கயல்வாளை குதிகொள்ளும்*
*கருப்பறியலூர்*
*கொடி ஏறி வண்டு இனமும் தண்தேனும் பண்செய்யும்*
*கொகுடிக்கோயில்*
*அடி ஏறு கழலானை, நினைந்தபோது அவர் நமக்கு*
*இனிய ஆறே!"*

மேற்கண்ட பதிகங்கள் இறைவனை வருணித்தும் தல வருணனையாகவும், இயற்கை வருணனையாகவும், இறைவனின் சிறப்பு நலன்களை விதந்துபோற்றும் வகையிலும் அமைந்துள்ளன. இத்தகைய கருத்துக்களை நட்ட ராகப் பண்ணின் மூலம் நன்முறையில் வெளிப்படுத்த முடிகிறது. நட்ட ராகப் பண்ணிற்குரிய இராகமானப் பந்துவராளியும் பக்திச்சுவையை வெளிப்படுத்தும் ரக்தி இராகமாகத் திகழ்கின்றது. ஆகவே நட்ட ராகப் பண் இசை மேற்கண்ட பதிகப் பாடல்களை இசைப்பதில் பெருந்துணை புரிவதை இதன் மூலம் அறியலாம்.

பதிகம் 31 முதல் 37 வரை கொல்லிப் பண்ணில் அமைந்தவை. கொல்லிப் பண்ணில் அமைந்த பதிகங்களை ஒவ்வொன்றாக ஆராய்வோம்.

31. "முந்தைஊர் முதுகுன்றம்" எனத் தொடங்கும். பதிகம் "திருஇடையாற்றுத் தொகை பதிகம்" என சிறப்புப் பெயர் பெற்றது. 10 பாடல்கள் கொண்டது. இறுதிப் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலிலும் சிவபெருமான் உறையும் ஊர்களைத் தொகையாகக் கூறிவிட்டு, இறுதி வரியில் சிவபெருமான்

விரும்பி உறையும் ஊர்களைத் தொகையாகக் கூறிவிட்டு, இறுதி வரியில் சிவபெருமான் விரும்பி உறையும் ஊர் இடையாறு இடை மருதே" என்னும் பொருள்பட, "...ஊர் எய்து அ(ம்)மான் இடையாறு, இடைமருதே" என்று முடிவடைகின்றது. சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

**திங்களூர், திருஆதிரையான் பட்டினம் ஊர்,**
**நங்களூர், நறையூர், நனிநால்இசை நாலூர்,**
**தங்களூர், தமிழான் என்று பாவிக்க வல்ல**
**எங்களூர், எய்துஅ(ம்)மான் இடையாறு இடைமருதே"**

இப்பதிகத்தில் இடம்பெறும் ஊர்களின் பெயர்கள் அகர வரிசைப்படி பின்வருமாறு பட்டியலிடப்படுகின்றன.

1. அண்ணாமலை
2. (திரு) ஆக்கூர்
3. (திரு) ஆதிரையான்பட்டினம்
4. (திரு) ஆரூர்
5. ஆவடுதுறை
6. ஆழியூர்
7. இடைமருது
8. இடையாறு
9. இறையனூர்
10. (திரு) ஊறல்
11. ஒற்றியூர்
12. கச்சி
13. கச்சையூர்
14. கடங்களூர்
15. கடவூர்
16. கடைமுடி
17. கண்டியூர்
18. கயிலாயம்
19. கழுக்குன்றம்
20. (திருக்) காரிக்கரை
21. காரோணம்
22. காவம்
23. கிள்ளிகுடி
24. கிடங்கி கொடுங்குன்றம்
25. சிக்கல்
26. சுழியல்
27. (திருச்) சோபுரம்
28. சோற்றுத்துறை
29. தங்களூர்
30. தஞ்சை
31. திங்களூர்
32. திருமலை
33. தேசனூர்
34. நங்களூர்
35. நறையூர்
36. நன்னிலம்

37. நாலூர்
38. நிறையனூர்
39. நின்றியூர்
40. நெடுங்களம்
41. நெய்த்தானம்
42. நெல்லிக்காவு
43. பந்தையூர்
44. பழனம்
45. பழையாறு
46. பாசனூர்
47. பாம்பனி
48. பாம்புரம்
49. பிறையனூர்
50. (திருப்) புன்கூர்
51. பெரும்பற்றப் புலியூர்
52. பெருமூர்
53. பைஞ்ஞீலி
54. மறைக்காடு
55. மறையனூர்
56. மிழலை
57. முதுகுன்றம்
58. வடகஞ்சனூர்
59. வடபேறூர்
60. வலஞ்சுழி
61. விடங்களூர்
62. விளத்தூர் நாட்டு விளத்தூர்
63. (திரு) வெண்ணி
64. வேளார் நாட்டு வேளூர்

32. "சுடிஆய்க்கடல் காற்று" எனத் தொடங்கும் பதிகம். திருக்கோடிக் குழகர் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. பத்தாம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர், சிவபெருமானின் லீலைகளைக் கூறி, "கோடிக் குழகா! நீ எதனால் தனியே இருக்கின்றாய்?" என்று வினவுகின்றார். சில பாடல்கள் தல வருணனையாகவும் அமைந்துள்ளன.

ஏழாம் பாட்லில், "பறையும் குழலும்(ம்) ஒலி பாடல் இயம்ப" என்னும் குறிப்பில், பறை, குழல் ஒலிகளுடன் பாடல் இயம்ப, இறைவன் ஆடும் திறத்தைக் கூறுகின்றார். சான்றாக, எட்டாம் பாடல் இங்கு தரப்படுகின்றது.

> *"ஒற்றியூர் என்ற ஊனத்தினால் அதுதானோ!*
> *அற்றப்பட ஆரூர் அது என்று அகன்றாயோ!*
> *முற்றாமதி சூடிய கோடிக்குழகா!*
> *எற்றால் தனியே இருந்தாய்! எம்பிரானே!"*

33. "பாறு தாங்கிய காடரோ?" எனத் தொடங்கும் பதிகம், "நமக்கு அடிகள்" ஆகிய அடிகள்" என்னும் தலைப்பினைக் கொண்டது. ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும் மேற்கண்ட தொடருடனே முடிவடைகின்றது. இப்பதிகத்தில் சுந்தரர் ஒவ்வொரு பாடலிலும் சிவபெருமானைப் பலவாறு வருணித்து, அவரே நமக்கு அடிகளாகிய அடிகள் என்று கூறுகிறார். சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு:

***"கோணல் மாமதி சூடரோ கொடு கொட்டி காலர் கழலரோ!***
***வீணைதான் அவர் கருவியோ! விடை ஏறு வேத***
***முதல்வரோ?***
***நாண் அது ஆக ஓர் நாகம் கொண்டு அரைக்கு ஆர்ப்பரோ!***
***நலம் ஆர்தர***
***ஆணை ஆக நம் அடிகளோ! - நமக்கு அடிகள் ஆகிய***
***அடிகளே".***

இப்பாடலில் கொடுகொட்டி, வீணை போன்ற இசைக் கருவிகள் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றன. ஒன்பதாம் பாடலில், நமணநந்தி, கருமவீரன், தருமசேனன் என்னும் சமணர்கள் குறிப்பும், ஞமணம், ஞாஞணம், ஞாணம், ஞோணம்" என்று அவர்கள் ஓதும் குறிப்பும் காணப்படுகின்றது.

34. "தம்மையே புகழ்ந்து" எனத் தொடங்கும் பதிகம் திருப்புகலூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இதில் வனப்பகை அப்பன், சடையன் தன்சிறுவன்" என்றவாறு தம்மை வனப்பகையின் தந்தை என்றும் சடையனாரின சிறுவன் என்று தம் தந்தையாரைப் பற்றிய குறிப்பையும் வைத்துள்ளார்.

ஒவ்வொரு பாடலிலும், சுந்தரர், புலவர்காள்! என்று புலவர்களை விளித்து, எவ்வாறெல்லாம் பாடக்கூடாது என்று அறிவுறுத்தி புகலூரைப் பாடுங்கள்! அவ்வாறு பாடினால்

சிவலோகம் அடைவீர்! அதில் எவ்வித ஐயமும் இல்லை என்று கூறுகிறார். சான்றாக முதற்பாடல் வருமாறு:

*தம்மையே புகழ்ந்து இச்சைபேசினும சார்வினும்*
*தொண்டர் தருகிலாப்*
*பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின்*
*புலவீர்காள்*
*இம்மையேதரும், சோறும் கூறையும்; ஏத்தல் ஆம்; இடர்*
*கெடலும் ஆம்;*
*அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவு*
*இல்லையே"*

## *இப்பாடல் எழுந்த வரலாறு*

ஒரு பங்குனி உத்திரத் திருவிழாவில் பரவையார் செலவு செய்தற்குரிய பொன்னைக் கொண்டுவரும் பொருட்டுத் திருப்புகலூரை அடைந்தார். இறைவனைப் பணிந்து போற்றி கோயில் வாயிலிலேயே சிறிதுநேரம் இளைப்பாறியிருந்தார். இறைவனருளால் அப்போது அவருக்கு உறக்கம் வருவதாயிற்று. கோயில் திருப்பணிக்காக அங்கு வைக்கப்பட்டிருந்த செங்கற்களைத் தலைக்கு அணையாக வைத்து மேலாடையை அதன்மேல் விரித்துத் துயில்வாராயினார். பின் துயிலணர்ந்தெழுந்த சுந்தரர் தலைக்கு அணையாக வைக்கப்பட்டிருந்த செங்கற்களெல்லாம் பொன் கட்டிகளாக மாறியிருப்பதைக் கண்டு வியந்து திருவருளைத் துதித்துக் கோயிலுள்ளே சென்று தொழுது தம்மையே புகழ்ந்து" என்னும் மேற்கண்ட பதிகம் பாடியருளினர்.[8]

35. "அங்கம் ஓதி ஓர்" எனத் தொடங்கும் பதிகம் திருப்புறம்பயம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும், "புறம் பயம் தொழப் போதுமே" என்று முடிவடைகின்றது. ஒவ்வொரு பாடலிலும், சுந்தரர், நெஞ்சினை முன்னிலைப்படுத்தி, நிலையற்ற இவ்வாழ்க்கை சுகத்தை நினையாது, புறம் பயம்

தொழுக என்று அறிவுறுத்துகின்றார். சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு:

*பதியும், சுற்றமும், பெற்ற மக்களும், பண்டையார் அலர்;*
*பெண்டிரும்*
*நெதியில் இம்மனை வாழும் வாழ்க்கையும்*
*நினைப்புஒழி(ம்) மடநெஞ்சமே!*
*மதியம் சேர் சடைக் கங்கையான் இடம்-மகிழும் மல்லிகை*
*சண்பகம்*
*புதிய பூ மலர்ந்து எல்லி நாறும்-புறம்பயம் தொழப்*
*போதுமே"*

36. "கார் உலாவிய நஞ்சை உண்டு" எனத் தொடங்கும் திருப்பைஞ்ஞீலி தலத்துப் பதிகம். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒன்று முதல் 10 பாடல்களின் இறுதிவரியில், "ஆரணீய விடங்கரே" என்று முடிவடைகின்றது. இப்பாடல்களில் சுந்தரர் பைஞ்ஞீலியில் உறையும் சிவபிரானை வஞ்சப்புகழ்ச்சியாகத் தோழமை உணர்வோடு பாடுகின்றார். சான்றாக, மூன்றாம் பாடல் வருமாறு:

*"தூயவர், கண்ணும் வாயும் மேனியும், துன்ன ஆடை,*
*கடலையில்*
*பேயொடு ஆடலைத் தவிரும்! நீர் ஒரு பித்தரோ?*
*எம்பிரானிரே!*
*பாயும் நீர்க் கிடங்கு ஆர் சமலமும், பைந்தண் மாதவி,*
*புன்னையும்,*
*பைம்பொழில் சூழ்-பைஞ்ஞீலியில் ஆரணீய விடங்கரே!"*

ஒன்பதாம் பாடல், முதலிரண்டு வரிகளில் சுந்தரர் சிவபெருமானை, தக்கை, தண்ணுமை, தாளம், வீணை, தகுணிச்சம், கிணை, சல்லரி, கொக்கரை, குடமுழவு ஆகிய இசைக் கருவிகளோடு கூடிப் பாடிநின்று ஆடுபவர்" என்று குறிப்பிடுகின்றார்.

37. "குருகு பாய" எனத் தொடங்கும் திரு ஆரூர் தலத்துப் பதிகம் 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடலில் சுந்தரர் தம்மை சிங்கடி அப்பன் என்று குறிப்பிடுகின்றார். இப்பாடல்களில் சுந்தரர் தம்மைத் தலைவியாக பாவித்து, பறவைகள், வண்டுகள் ஆகியவற்றை முன்னிலைப்படுத்தி, தாம் ஆரூராரின் பிரிவுத்துயரால் வளைகள் நில்லாமல் கழன்று விழும் நிலையில் உள்ளதையும், ஆரூரைப்பாடி, பரவி, உருகி நாடும் நிலையையும் உணர்த்துமாறு கூறுகிறார். சான்றாக நான்காம் பாடல் வருமாறு:

***"சக்கிரவாளத்து இளம் பேடைகாள்! சேவல்காள்!***
***அக்கிரமங்கள் செயும் அடிகள் ஆரூரர்க்கு***
***வக்கிரம் இல்லாமையும், வளைகள் நில்லாமையும்,***
***உக்கிரம் இல்லாமையும், உணர்த்தவல்லீர்களே"***

இவ்வாறு அகத்துறைப் பாடல்களாகத் தோழமை உணர்வோடு பாடுகின்றார்.

மேற்கண்ட கொல்லிப் பண்ணில் அமைந்த பதிகங்கள் யாவும் சிவபெருமானை வருணிப்பதாகவும், இறைவன் பெருமைகளை உரைப்பதாகவும், நெஞ்சுக்கு அறிவுறுத்தும் பாங்கிலும் அமைந்துள்ளன. இக்கருத்துக்கள் இப்பண்ணிற்கு நேரான நவரோஜ் இராகத்தில் பாடும் போது நல்லமுறையில் வெளிப்படுகின்றன. பக்திச்சுவையை வெளிப்படுத்தும் இராகங்களுள் ஒன்றாக நவரோஜ் இராகம் இருப்பதால் இப்பதிகங்களுக்கு இப்பண் இசைமுறையில் பொருத்தமாக இருப்பதை உணரலாம்.

பதிகம் 38 முதல் 46 வரையில் கொல்லிக் கௌவாணப் பண்ணில் அமைந்துள்ளன. இப்பதிகங்களை ஈண்டுக் காணலாம்.

38. "தம்மானை அறியாத" எனத் தொடங்கும் பதிகம் திரு அதிகைத் திருவீரட்டானம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியிலும் "....எறிகெடில வடவீரட்டானத்து உறைவானை, இறைபோதும் இகழ்வன் போல் யானே! என்று முடிவடைகின்றது.

## *இப்பாடல் எழுந்த சூழல்*

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல தலங்களை வணங்கி திருவதிகை வந்தடைந்தார். அங்கு, "சித்தவடம்" என்னும் இடத்திலுள்ள மடத்தில் தம் பரிசனங்களோடு தங்கி உறங்கி கொண்டிருந்தார். அப்போது திருவீரட்டானப் பெருமான், சுந்தரரிடம் லீலை புரிய விரும்பி, ஒரு முதிய மறையவர் வடிவோடு மடத்திற் புகுந்து, அவர்தம் தலை மீது தம் திருவடிகளை வைத்துப் பள்ளி கொள்வராயினார். சுந்தரர் அம்முதியவரை நோக்கி தம் தலைமேல் அவருடைய காலினை வைத்தது எதனாலென்று வினவ, முதியவர் என்னுடைய மூப்பின் காரணமாகத் திசையறியாமல் அவ்வாறு செய்து விட்டேன் என்றார். சுந்தரரும் அதனை ஒப்புக்கொண்டு வேறொரு இடத்திற் சென்று துயின்றார். அங்கேயும் அம்மறையவர் தம் திருவடிகளைச் சுந்தரர் தலையில் நீட்டியருள, "சுந்தரர் இங்கேயும் வந்து என் தலைமேல் காலை நீட்டுகின்றீரே, நீர் யார்?" என்று "நீ என்னை யறியாயோ" என்று சொல்லி மறைந்தார்.[9] அப்போது ஆரூரரும் தம் தலைமேல் திருவடிகளைப் பதித்தவர் சிவபெருமானே என்று அறிந்து மேற்கண்ட பதிகத்தைப் பாடி திருவதிகை மூலவரைப் பணிந்தார்.

ஒவ்வொரு பாடலிலும், சுந்தரர் சிவபெருமானைப் பலவாறு புகழ்ந்தும், சிவபெருமானின் உருவத்தைப் பலவாறு வருணித்தும், இறைவன் தம்முடைய திருவடிகளைக் கொண்டு தம் தலைமேல் வைத்து அருள்புரிந்த திறத்தை எண்ணி உருக, வடவீரட்டானத்து உறையும் இறைவனை ஒருபோதும் மறக்க மாட்டேன் என்று பாடுகின்றார். ஒன்பதாம் பாடலில் இராவணன் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. அப்பாடல் வருமாறு:

*"திருந்தாத வாள் அவுணர் புரம் மூன்றும் வேவச்*
*சிலை வளைவித்து, ஒரு கணையால்-தொழில்*
*பூண்டசிவனை,*

கருந்தான மதகளிற்றின் உரியானை, பெரிய
கண் மூன்றும் உடையானை, கருதாத அரக்கன்
பெருந் தோள்கள் நால்-ஐந்தும், ஈர்-ஐந்து முடியும்
உடையானைப் பேய் உருவம் ஊன்றும்-உற
மலைமேல்
இருந்தானை, எறிகெடில வட வீரட்டானத்து
உறைவானை, இறைபோதும் இகழ்வன் போல்
யானே!"

39. "தில்லைவாழ் அந்தணர்தம்" எனத் தொடங்கும் பதிகம், திருத்தொண்டத் தொகை என்னும் தலைப்புக் கொண்டது. 11 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் 11-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும்.

திருவாரூர் கோவிலில் தேவாசிரியன் மண்டபத்தில் அடியார்கள் கூடியிருந்தபோது, சுந்தரமூர்த்தி சுவாமிகள், "இறைவன் என்னை இவர்களுக்கு அடியவனாக்குங்காலம் எப்பொழுதோ?" என்று நினைந்து மண்டபத்தைக் கடந்து நெடுவாயிலை வணங்க, சிவபெருமான் எதிராகத் தோன்றிக் காட்சி கொடுக்க, அவரின் திருவடிகளை வணங்கி திருவடிப் புகழ்மாலை கூறினார். பிறகு சிவபெருமானே "தில்லைவாழ் அந்தணர்தம்" என்று அடியெடுத்துக் கொடுக்க அவர் திருவருளால் சுந்தரர் பாடத் தொடங்கினார். தேவாசிரியன் மண்டபத்தில் இருந்த அடியார்களின் தனித்தனி அடியேனென்று வைத்துப் பாடி தொகையடியாரையும் பாடித் திருத்தொண்டர் தொகையை முடித்தார்.[10] இதில் கூறிய முறையிலேயே சேக்கிழார் பெரியபுராணத்தில் அறுபத்து மூன்று நாயன்மார் வரலாற்றை வகுத்து விரித்துரை செய்தார்.

ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே" என்று நிறைவடைகிறது. 1 முதல் 9 பாடல்களில் சுந்தரர் 63 நாயன்மார்களையும் பாடி அவர்களுக்குத்தாம் அடியேன் என்று பாடுகிறார். பத்தாம் பாடலில்,

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்;
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்;
சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்க்கும் அடியேன்;
திரு ஆரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்;
முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்;
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்;
அப்பாலும் அடிச் சார்ந்த அடியார்க்கும் அடியேன்;
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே"

என்று எல்லோருக்கும் அடியேன் எனப் பாடுகின்றார். இப்பதிகத்தில் இடம் பெற்றுள்ள 63 நாயன்மார்களின் பெயர் அகர வரிசையில் பட்டியலிடப் படுகின்றன.

1. அதிபத்தர்
2. அப்பூதி
3. அமர்நீதி
4. ஆனாயர்
5. இசைஞானி
6. இடங்கழி
7. இயற்பகை
8. இளையான் தன் குடிமாறன்
9. உருத்திர பசுபதி
10. எறிபத்தர்
11. ஏயன்கோன் கலிக்காமன்
12. ஏனாதிநாதன்
13. ஐயடிகள் காடவர்கோன்
14. கணநாதர்
15. கணம் புல்ல நம்பி
16. கண்ணப்பர்
17. கலயன்
18. கலிக்கம்பன்
19. கலியன்
20. கழல் சத்தி
21. கழறிற்றறிவார்
22. கழற்சிங்கன்
23. களந்தைக் கோசி
24. கறைக்கண்டன்
25. காடவர் கோன்
26. காரி
27. குறும்பர்
28. கோட்புலி
29. சடையன்
30. சண்டிப் பெருமாள்
31. சாக்கியர்
32. சிலச்சிறை
33. சிறப்புலி

34. சிறுதொண்டர்
35. செருத்துணை
36. சோமாசி மாறன்
37. தண்டி
38. தாயன்
39. தார்நம்பி
40. திருக்குறிப்புத் தொண்டர்
41. திருநாவுக்கரையன்
42. திருநாளைப் போவார்
43. திருநீலகண்டர்
44. திருநீலகண்டத்துப் பாணனார்
45. திருமூலன்
46. நமிநந்தி
47. நரசிங்க முனையரையர்
48. நின்றசீர் நெடுமாறன்
49. நின்றவூர்
50. நீல நக்கர்
51. புகழ்ச் சோழர்
52. புகழ்த் துணை
53. பூசல் நாயனார்
54. பேயார்
55. மயிலை வாயிலான்
56. மானக் கஞ்சாறன்
57. முருகன்
58. மூர்க்க நாயனார்
59. மூர்த்தி
60. மெய்ப் பொருள்
61. விரிஞ்சையர் கோன்
62. விறல் மிண்டர்
63. வேல்நம்பி முனையடுவார்

40. "வள் வாய மதி மிளிரும்" எனத் தொடங்கும் பதிகம், திருக்கானாட்டு முள்ளூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தில் 11-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும்.

ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும் "கானாட்டு முள்ளூரில் கண்டு தொழுதேனே" என்று முடிவடைகிறது. இப்பாடல்கள் சிவபெருமானின் உருவ வருணையாகவும், இயற்கை வருணனையாகவும் அமைந்துள்ளன. சான்றாக முதற்பாடல் வருமாறு:

*வள்வாய மதிமிளிரும் வளர்சடையினானை,*
*மறையவனை, வாய்மொழியை, வானவர்தம்*
*கோனை,*
*புள் வாயைக் கீண்டு உலகம் விழுங்கி உமிழ்ந்தானை,*
*பொன் நிறத்தின் முப்புரிநூல் நான் முகத்தினானை,*

*முள் வாய மடல் தழுவி, முடத்தாழை ஈன்று*
*மொட்டு அலர்ந்து, விரைநாறும் முருகு விரி பொழில்*
*சூழ்*
*கள்வாய கருங்குவளை கண்வளரும் கழனி...*
*கானாட்டு முள்ளூரில் கண்டு தொழுதேனே"*

41. "முதுவாய் ஓரி கதற" எனத் தொடங்கும் பதிகம் திருக்கச்சூர் ஆலக்கோயில் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்களைக் கொண்ட இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும் "ஆலக்கோயில் அம்மானே" என்று முடிவடைகின்றது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் இறைவனைப் பலவாறு புகழ்ந்து, தம்மை ஆட்கொள்ள வேண்டுமென்று உருகிப் பாடுகின்றார். சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

*"பிறவாய் இறவாய் பேணாய் மூவாய் பெற்றம் ஏறிப்பேய்*
*சூழ்தல்*
*துறவாய் மறவாய் சுடுகாடு என்றும் இடமாக் கொண்டு*
*நடம்ஆடி*
*ஒறுவாய்த் தலையில் பலிநீ கொள்ளக் கண்டால் அடியார்*
*உருகாரே!*
*அறவே ஒழியாய்-கச்சூர் வடபால் ஆலக் கோயில்*
*அம்மானே"*

## இப்பதிகம் எழுந்த வரலாறு

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல தலங்களுக்கும் சென்று பதிகங்கள் பாடி இறைவனைத் தொழுது திருக்கச்சூர் ஆலக்கோயிலை அடைந்தார். அப்போது உணவு நேரம் வந்தது. அமுது செய்யும் பரிசனங்கள் வாராமையால் சுவாமிகள் கோயில் வாயிலை அடுத்த மதிற்புறத்தில் பசியோடு அமர்ந்திருந்தார். அவரது பசியைத் தீர்க்க எண்ணிய இறைவன் ஓர் அந்தணர் வடிவம் கொண்டு அவர் முன்

தோன்றி, "நீர் பசியால் வருந்துகின்றீர். நான் பிச்சையெடுத்து உணவு தருகின்றேன். இவ்விடத்தை விட்டு அகலாதீர்" என்று கூறிச் சென்று, திருக்கச்சூர் வீடுதோறும் இரந்து, சாதமும், கறியும் கொணர்ந்து சுந்தரரிடம் கொடுத்தார். அதனை வாங்கி, அவ்வந்தனரின் அருட்செயலைப் போற்றி தம் தொண்டருடன் பசியார உண்டு உவந்திருந்த போது, அங்கே நின்ற அந்தணர் மறைந்தார். இறைவனது இப் பேரருஞ் செயலை பெரிதும் போற்றி கண்ணீர் வகுத்து "முதுவாயோரி" என்னும் மேற்கண்ட பதிகத்தை இசைத்தார்.

42. எறிக்கும் கதிர்வேய் உதிர்முத்த(ம்) மொடு எனத் தொடங்கும் திருவெஞ்சமாக் கடல் தலத்துப் பதிகம் 10 பாடல்களைக் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும் வெஞ்சமாக் கடல் விசிர்தா: அடியேனையும் வேண்டுதியே" என்று முடிவடைகின்றது. இப்பாடல்கள் வெஞ்சமாக் கடல் தல வருணனையாகவும், இத்தலத்து உறையும் இறைவனை வருணித்தும் பாடப்பட்டுள்ளன. பாடல்களில் இசை, இசைக்கருவிகள், மற்றும் நடனக் குறிப்புகள் காணப்படுகின்றன.

நான்காம் பாடலில் உமையம்மையைப் பண்ணின் நேர்மொழியாளாக உவமிக்கிறார். "மண் ஆர் முழவும் குழலும் இயம்ப மடவார் நடம் ஆடம் மணி அரங்கில்" உறைபவன் என்று சிவபெருமானை வருணிக்கிறார். முழலின் ஆர்ப்பொலிவுடன் பாடலும் ஆடலும் புரிகின்ற முதுகாட்டதனை அரங்கமாகக் கொண்டு நடம் ஆடவல்லவன் என்று சிவபெருமானை ஆறாம் பாடலில் வருணிக்கிறார். எட்டாம் பாடலில் தலபெருமையைக் கூறும்போது, பாடல் முழவும் குழலும் இயம்ப நங்கையர் பாடலோடு ஆடல் புரியும் இடம்" என்று வருணிக்கிறார். ஒன்பதாம் பாடலில் சிவபெருமானைக் "கொடு கொட்டி ஓர் வீணை உடையவனே" என்று வருணிக்கிறார். சான்றாக ஒன்பதாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

*கொங்கு ஆர் மார்க் கொன்றை அம் தாரவனே!*
*கொடு கொட்டி ஓர் வீணை உடையவனே!*
*பொங்கு ஆடு அரவும் புனலும் சடைமேல்*
*பொதியும் புனிதாபுனம் சூழ்ந்து அழகு ஆர்*
*துங்கு ஆர் புனலுள் பெய்த கொண்டு மண்டி,*
*திளைத்து எற்று சிற்றாறு அதன் கீழ்க்கரை மேல்-*
*வெங்கார் வயல் சூழ்-வெஞ்சமாக்கூடல்*
*விகிர்தா! அடியேனையும் வேண்டுதியே".*

43. "நஞ்சி, "இடை இன்று நாளை" எனத் தொடங்கும் திருமுதுகுன்றம் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்களைக் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் முதுகுன்றத் தலப்பெருமையைக் கூறி அத்தலத்து உறையும் இறைவனின் பெருமைகளை வினாயுரையாகக் கூறுகின்றார். சான்றாக, ஆறாம் பாடல் வருமாறு:

**"இழை வளர்நுண்இடை மங்கையொடு இடுகாட்டு இடைக்**
**குழை வளர் காதுகள் மோத நின்று குனிப்பதே?**
**மழை வளரும் நெடுங்கோட்டு இடை மதயானைகள்**
**முழை வளர் ஆளி, முழக்கு அறா முதுகுன்றரே!"**

44. "முடிப்பது கங்கையும் திங்களும்" எனத் தொடங்கும் பதிகம் பொதுப் பதிகமாகும். இஃது "முடிப்பது கங்கை" என்னும் தலைப்பு கொண்டது. 10 பாடல்கள் கொண்டது.

இப்பதிகத்தின் பெரும்பாலான பாடல்களில் சுந்தரர் தொண்டர்களை விளித்து சிவபெருமானின் பெருமைகளைப் பலவாறு கூறி, அவ்விறைவனைப் பிரியாமல் இருங்கள் என்று அறிவுறுத்துகின்றார். சான்றாக, 4-ஆம் பாடல் வருமாறு:

*"நரிதலைகவ்வ, நின்று ஒரி கூப்பிட, நள் இருள்*
*எரிதலைப் பேய் புடை சூழ, ஆர் இருள் காட்டு இடைச்*
*சிரிதலை மாலை சடைக்கு அணிந்த எம் செல்வனைப்*
*பிரிதலைப் பேசன்மின், தொண்டர்காள், எம்பிரானையே"*

இப்பதிகத்தின் ஒன்பதாம் பாடலில், "கரிய மனச்சமன் பாடி ஆடு கழுக்களால்-எரிய வசவுணும் தன்மையோ" என்றவாறு சமணரைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.

45. "காண்டனன் காண்டனன்" எனத் தொடங்கும் பதிகம், திருவாமாத்தூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலும் இறைவனை வருணித்தும், இறைவன் பெருமைகளைப் பலவாறு புகழ்ந்துரைத்தும் வருகின்றன. இப்பாடல்களின் ஒவ்வொரு வரியின் தொடக்கத்திலும் அடுக்குத் தொடர் அணி இடம்பெறுகிறது. சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

*"காண்டவன் காண்டவன் காண்டற்கு அரிய கடவுளாய்*
*நீண்டவன் நீண்டவன், நாரணன் நான்முகன் நேடவே*
*ஆண்டவன் ஆண்டவன், ஆமாத்தூரையும் எனையும் ஆள்*
*பூண்டவன் பூண்டவன், மார்பில் புரிநூல் புரளவே"*

46. "பத்து ஊர்ப் புக்கு" எனத் தொடங்கும் பதிகம் திருநாகைக் காரோணம் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் இறைவனை வஞ்சப்புகழ்ச்சியாகப் பாடி சிவபெருமானிடம் தோழமை உணர்வோடும், உரிமையோடும் தமக்கு வேண்டுவனவற்றைக் கேட்கிறார். சான்றாக 8-ஆம் பாடல் வருமாறு:

*"மாற்றம் மேல் ஒன்று உரையீர் வாளாநீர் இருந்தீர்;*
*வாழ்விப்பன் என ஆண்டீர் வழி அடியேன், உமக்கு;*

*ஆற்றவேல் திருஉடையீர்; நல்கூர்ந்தீர் அல்லீர்*
*அணி ஆரூர் புகப் பெய்த அருநிதியம் அதனில்*
*தோற்றம் மிகு முக்கூற்றில் ஒரு கூறு வேண்டும்;*
*தாரீரேல், ஒரு பொழுதும் அடி எடுக்கல் ஒட்டேன்;*
*காற்று அனைய கடும் பரிமா ஏறுவது வேண்டும்*
*கடல் நாகைக் காரோணம் மேவி இருந்தீரே!"*

ஏழாம் பாடலில், இலங்கையர்கோன் இராவணனுக்குத் தேரும் வாளும் கொடுத்த செய்தி.

***"தேசுஉடைய இலங்கையர் கோன் வரை எடுக்க அடர்த்து***
***திப்பிய கீதம் பாட, தேரொடு வாள் கொடுத்தீர்"***

என்னும் வரியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கொல்லிக் கௌவாணப் பண்ணில் அமைந்த மேற்கண்ட பதிகப் பாடல்களும் இறைவனின் பெருமைகளை வஞ்சப் புகழ்ச்சியாக உரைக்கும் வண்ணம் பக்திச் சுவை பெருக்கோடு அமைந்துள்ளமை குறிப்பிடத்தகுந்தது. கொல்லிக் கௌவாணப் பண்ணிற்குரிய நேர் இராகமான நவரோஜ் இராகமும், பக்திச் சுவையை வெளிப்படுத்தும் இராகங்களுள் ஒன்றாகத் திகழ்வதினால் இப்பதிகப் பாடல்கள் இப்பண்ணிசைக்குப் பொருந்த இருப்பதை உணரலாம். பதிகம் 47 முதல் 53 வரையிலான ஏழு பதிகங்கள் பழம் பஞ்சுரம் பண்ணில் அமைந்துள்ளன. இவற்றின் இயலிசை அமைப்பு ஈண்டு தனித்தனியே ஆராயப்படுகிறது.

47. "காட்டூர் கடலே" எனத் தொடங்கும் பதிகம் "ஊர்த்தொகை" என்னும் தலைப்பிலானது. 10 பாடல்கள் உடையது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்பானது. ஒவ்வொரு பாடலிலும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஊர்களின் பெயரால் இறைவனை விளித்து, இறைவனின் அருளை வேண்டி நிற்கின்றார். சான்றாக எட்டாம் பாடல் வருமாறு:

*துருத்திச் சுடரே நெய்த்தானத்தாய்! சொல்லாய் கல்லாலா!*
*பரு(த்)தி நியமத்து உறைவாய்! வெயில் ஆய், பலஆய்*
*காற்று ஆனாய்;*
*திருத்தித் திருத்தி வந்து, என்சிந்தை இடம் கொள் கயிலாயா*
*அருத்தித்து, உன்னை அடைந்தார் வினைகள்*
*அகலஅருளாயே"*

48. "மற்றுப்பற்று எனக்கு" எனத் தொடங்கும் பதிகம் திருப்பாண்டிக் கொடுமுடி தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 1 முதல் 9 பாடல்களில் இறுதிவரியில் "..உனை நான் மறக்கிலும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்று முடிவடைகின்றது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும்.

இப்பதிகப் பாடல்களில் சுந்தரர் பாண்டிக் கொடுமுடிதலத்துப் பெருமைகளைக் கூறி, அத்தலத்தில் உறையும் இறைவனே! உன்னுடைய மலர்ப் பாதங்களையே நினைந்து வினைகள் விடுபட்டு போனேன். உன்னை மறந்தாலும் என்னுடைய நா நமச்சிவாய மந்திரத்தை எப்பொழுதும் கூறிக்கொண்டே இருக்கும் என்கிறார். சான்றாக ஏழாம் பாடல் இங்கு தரப்படுகின்றன.

*"விரும்பி நின் மலர்ப் பாதமே நினைந்தேன்; வினைகளும்*
*விண்டனன்;*
*நெருங்கி வண்பொழில் சூழ்ந்து எழில் பெற நின்ற*
*காவிரிக்கோட்டு இடை*
*குரும்பை மென்முலைக் கோதைமார் குடைந்து ஆடு*
*பாண்டிக் கொடுமுடி*
*விரும்பனே! உனை நான் மறக்கினும் சொல்லும் நா*
*நமச்சிவாயவே".*

49. "கொடுகு வெஞ்சிலை" எனத் தொடங்கும் பதிகம் திருமுருகன் பூண்டித் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள்

கொண்டது. இறுதிப் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் திருமுருகன் பூண்டியில் வாழும் வேடுவர்கள் செய்யும் கொடுஞ் செயல்களையெல்லாம் கூறி, அவர்களிடமிருந்து வழிப் பயணிகளைக் காப்பாற்றாமல், உமையம்மையொடும் எதற்காக இங்கு இருந்தீர் என்று கேட்கிறார். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும் எத்துக்கு இங்கு இருந்தீர் எம்பிரானீரே! என்று முடிவடைகின்றது. சான்றாக 3-ஆம் பாடல் வருமாறு:

> ***பசுக்களே கொன்று தின்று, பாவிகள் ஒன்று அறியார்,***
> ***உசிர்க்கொலைபல நேர்ந்து, நாள்தொறும் கூறை கொள்ளும் இடம்***
> ***முசுக்கள் போல் பலவேடர் வாழ் முருகன் பூண்டிமா நகர்வாய்***
> ***இசுக்கு அழியப் பயிக்கம் கொண்டு, நீர் எத்துக்கு இங்கு இருந்தீர்? எம்பிரானீரே!***

ஆறாம் பாடலில், "விட்டு இசைப்பன, கொக்கரை, கொடு கொட்டி, தத்தளகம், கொட்டிப் பாடும் துந்துமி, குடமுழா, "நீர் மகிழ்வீர்", என்று இறைவனை மேற்கூறிய இசைக்கருவியொலியில் மகிழ்பவர் என்று கூறுகிறார்.

சுந்தரர் தம் ஆருயிர் தோழராகிய சேர மன்னரோடு அரண்மனையில் தங்கியிருக்கும் நாளில் ஒரு நாள் திருவாரூர் நினைவு வந்து அங்கு புறப்படடபொழுது சேரமான் பிரிவாற்றாமையால் வருந்தினார். சுந்தரர் அவருக்குப் பலவகையாக ஆறுதல் கூறி, அரசுப் பணிகளை இயற்றும்படி கூறினார். சேர மன்னரும் ஆறுதலடைந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் கொடையாகப் பல்வகைப் பொருள்களையும், அணிகலன்களையும், பொன், பூந்துகில் வகைகளையும் பொதி சுமக்கும் தொழிலாளர் மேல் ஏற்றி சுந்தரருக்கு முன்செல்ல விடுத்தார்.

சேர மன்னரிடம் விடைப் பெற்றுக் கொண்டு மலைநாட்டினைக் கடந்து திருமுருகன் பூண்டிக்குச் செல்லும் வழியினை அடைந்தார். அங்கு செல்லும்போது, தாம் கொடுக்கும் பொன்னைத் தவிர பிறர்பால் பொன் கொள்ளக் கூடாதென்று சுந்தரருக்கு அறிவுறுத்தக் கருதியோ அல்லது வேறு காரணத்திற்காகவோ இறைவன் பொன்னைப் பறித்தற் பொருட்டுப் பூதங்களை ஏவ, பூதங்கள் வேடர் வடிவாய் சென்று பொதி சுமப்பார்மீது அம்பு தொடுத்து நிதிகளனைத்தையும் கவர்ந்தோடின. அப்பூதங்கள் நம்பியாரூரை ஒன்றும் செய்யவில்லை. நிதி பறிகொடுத்தவர்கள் சுந்தரரிடம் வந்து முறையிட அவரும் அங்கு வீற்றிருக்கும் சிவபிரானைத் தொழுது, "கொடுகு வெஞ்சிலை" என்னும் மேற்கண்ட பதிகம் பாடினார்[12]. இந்தச் சூழலையே ஒவ்வொரு பாடலின் இறுதியிலும், ஏத்துக் கிங்கிருந்தீர் எம்பிரான் நீரே என்று இப்பதிகத்தில் அமைத்துப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

50. "சித்தம் நீநினை" எனத் தொடங்கும் பதிகப் திருப்புவனவாயில் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலிலும், சுந்தரர் புனவாயில் தலத்துப் பெருமையைக் கூறி, இத்தலத்திலேயே இறைவன் உறைகின்றார். எனவே இறைவனை இத்தலத்தில் தொழுக என்று மனதை முன்னிலைப்படுத்தி அறிவுறுத்துகின்றார். சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

***"மறவல் நீ மனம் என்னொடு சூள் அறு, வைகலும்!***
***உறவும் ஊழியும் ஆய பெம்மாற்கு இடம் ஆவது***
***பிறவு கள்ளியின் நீள கவட்டு ஏறித்தன் பேடையைப்***
***புறவம் கூப்பிடப் பொன் புனம் சூழ் - புனவாயிலே"***

51. "பத்திமையும் அடிமையையும்" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துப் பதிகமாகும். 12 பாடல்கள்

கொண்டது. 12-ஆம் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலிலும், சுந்தரர் சிவபெருமானின் அருள்திறத்தை நினைந்து, திரு ஆரூர் இறைவனைப் பிரிந்திருக்கின்றேனே! என்று உருகிப் பாடுகிறார். ஒவ்வொரு பாடலின் இறுதி வரியிலும், "பிரிந்திருக்கேன், என் ஆரூர் இறைவனையே" என்று. முடிவடைகின்றது. 10-ஆம் பாடலில், இறைவன் ஏழிசையாகவும் இசைப் பயனாகவும் இருப்பவன் என்று குறிப்பிடுகின்றார். சான்றாக இப்பாடல் இங்கு தரப்படுகிறது.

***"ஏழ்இசைஆய் இசைப்பயன் ஆய், இன்அமுதுஆ என்னுடைய***
***தோழனும் ஆய், யான் செய்யும் துரிசுகளுக்கு உடன் ஆகி,***
***மாழைஒண்கண் பரவையைத் தந்து ஆண்டானை, மதிஇல்லா***
***ஏழையேன் பிரிந்திருக்கேன், என் ஆரூர் இறைவனையே"***

## *இப்பாடல் எழுந்த சூழல்*

சுந்தரர் சங்கிலியாருடன் திருவொற்றியூரில் வீற்றிருக்கும்போது இளவேனிற் காலம் வந்தது. திருவாரூரில் வீதிவிடங்கப் பெருமானுக்கு நிகழும் இளவேனிற் திருவிழாவில் பரவையார் பாடல் ஆடல் இயற்றுவதை நினைந்தும், திருவாரூர் பெருமானின் அருள்திறத்தை நினைந்தும் பிரிவாற்றாமையை உணர்ந்தார். திருவாரூர்க்குச் சென்று இறைவனை வழிபட வேண்டுமென்றும் அவா மேலீட்டினால், "பத்திமையும் அடிமையையும்", என்ற மேற்கண்ட திருப்பதிகத்தைப் பாடினார்.

52. "முத்தா முத்தி தரவல்ல" எனத் தொடங்கும் பதிகம். திருஆலங்காடு தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் இறுதிப் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். 1 முதல் ஒன்பது பாடல்களின் இறுதிவரியும்

"ஆலங்காடா உன் அடியார்க்கு அடியேன் ஆவேனே" என்று முடிவடைகின்றது.

சுந்தரர் இப்பாடல்களில் இறைவனைப் பலவாறு புகழ்ந்தும் அடியார்களின் வினையைத் தீர்ப்பவன் என்றும் பாடுகிறார். மேலும் தாம் மாதர்கள் வலையில் பட்டு மதிமயங்கி அழிந்தவன் என்றும் இறைவனின் அடியார்க்கு அடியவன் ஆவேன் என்றும் கூறுகிறார். சான்றாக, ஐந்தாம் பாடல் வருமாறு:

*வேல் அங்கு ஆடு தடங்கண்ணார் வளையுள் பட்டு*
*உன் நெறி மறந்து*
*மால் அங்குசூடி மறந்தொழிந்தேன்: மணியே! முத்தே!*
*மரகதமே!*
*பால் அங்குசூடி, நெய் ஆடீ; படர்புன்சடையாய்!*
*பழையனூர்*
*ஆலங்காடா! உன்னுடையஅடியார்க்கு அடியேன்*
*ஆவேனே".*

53. "மருஆர் கொன்றை மதிசூடி" எனத் தொடங்கும் பதிகம், திருக்கடவூர் மயானம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "......கடவூர் மயானத்துப் பெரிய பெருமான் அடிகளே' என முடிவடைகின்றது. ஒவ்வொரு பாடலும் சிவபெருமானின் உருவ வருணையாகவும், பண்புநலன்களை உரைப்பதாகவும், உள்ளன. சான்றாக, ஒன்பதாம் பாடல் இங்கு தரப்படுகிறது

*"வேழம் உரிப்பர்; மழுவாளர்; வேள்வி அழிப்பர்;*
*சிரம் அறுப்பர்;*
*ஆழி அளிப்பர், அரிதனக்கு; ஆன் அஞ்சு உகப்பர்; அறம்*
*ஏழைத்தலைவர்; கடலூரில் இறைவர்; சிறுமான்*
*மறிக்கையர்*

*பேழைச்சடையர்-மயானத்துப் பெரிய பெருமான்*
*அடிகளே".*

நான்காம் பாடலில், "கறை ஆர் முழவம் பாட்டோடு பயிலும் தொண்டர்" என்று கடவூர்ப் பெருமானின் தொண்டர்களைப் பற்றிக் கூறும்போது, பறை, முழவு ஆகிய இசைக்கருவிகளையும் பாட்டையும் கூறுகின்றார். மேற்கண்ட பழம் பஞ்சரப் பண்ணில் அமைந்த பதிகங்கள் பக்தி பூர்வமானப் பதிகங்களாக உள்ளன. இதற்கேற்ப பழம் பஞ்சுரப் பண்ணிற்குரிய நேர் இராகமான சங்கராபரணத்தில் இவை பாடப்பட்டுள்ளன. சங்கராபரணம் இராகம் பக்தி, வீரம், வியப்பு ஆகிய சுவைகளை வெளிப்படுத்தும் ரக்தி இராகம் என்பது குறிப்பிடத்தக்கது. ஆகவே பழம் பஞ்சுரப்பண் மேற்கண்ட பதிகங்கள் இசைப்பதற்குப் பொருத்தமாகத் திகழும் பெற்றிமையை இதன்மூலம் அறியலாம்.

54. பதிகம் 54 முதல் 70 வரையில் தக்கேசிப் பண்ணில் அமைந்தவை. இப்பதிகங்கள் ஈண்டு தனித்தனியே ஆராயப்படுகின்றது.

"அழுக்கு மெய்கொடு உன் திருவடி அடைந்தேன்" எனத் தொடங்கும் திருஒற்றியூர் தலப்பதிகம், 10 பாடல்கள் கொண்டது. 10ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும்.

### இப்பாடல் பாடப்பட்ட சூழல்

சுந்தரர் சங்கிலியாருடன் திருவொற்றியூரில் வாழ்க்கை நடத்தி வந்த வேளையில் திருவாரூர் பெருமானிடம் செல்ல வேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. அந்நினைவு மிகவும் விஞ்சி நின்றபோது ஒருநாள் திருவொற்றியூர் பெருமானிடம் விடை பெற்றுக் கொண்டு அவ்வூருக்கப்பால் செல்லத் தொடங்கியவுடன், தாம் முன்னர் சங்கிலியிலாரை விட்டு பிரிய மாட்டேனென்று சங்கிலியாருக்கு வாக்குக் கொடுத்ததை

மீறியதன் காரணமாகச் சுந்தரர் கண்கள் மறைவுற்றன. அப்போது செய்வதறியாது திகைத்து இறைவனை நோக்கித் தமக்குக் கண் தந்தருள வேண்டுமென்று மேற்கண்ட திருப்பதிகத்தைப் பாடினார்[13].

ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ஒற்றியூர் எனும் ஊரில் உறைபவனே! எம்முடைய பிணியை தீர்த்தருள்க. எனும் பொருள்படும்படியாக அமைத்துப் பாடுகிறார். சான்றாக ஒன்பதாம் பாடல் வருமாறு:

**"மகத்தில் புக்கது ஓர் சனி எனக்கு ஆனாய்;**
**மைந்தனே! மணியே! மணவாளா!**
**அகத்தில் பெண்டுகள் நான் ஒன்று சொன்னால்**
**"அழையேல், போ, குருடா!" எனத் திரியேன்;**
**முகத்தில் கண் இழந்து எங்ஙனம் வாழ்வேன்?**
**முக்கணா! முறையோ! மறைஓதீ!**
**உகைக்கும் தண்கடல் ஓதம் வந்து உலவும்**
**ஒற்றியூர் எனும் ஊர் உறைவானே!**

55. "அந்தணாளன் உன் அடைக்கலம்" என்னும் பதிகம் திருப்புன்கூர் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும் "திருப்புன்கூர் உளானே" என்று முடிவடைகின்றது.

## இப்பதிகம் எழுந்த சூழல்

சிவபெருமான் சுந்தரர் பொருட்டு பரவையார் பால் தூது சென்றமையைக் கேள்வியுற்று கோபத்துடன் இருந்த பேரன்பரான ஏயர்கோன் கலிக்காமநாயனாரையும், சுந்தரரையும் இணைவிப்பதற்காகச் சிவபெருமான் நடத்தியச் சுந்தரரிடம் திருவிளையாடலின் பலனாக இப்பதிகம் பாடப்பட்டுள்ளது. சிவபெருமான் ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்குச் சூலைநோயை 'ஏற்படுத்தி அதனைத் தீர்க்கும்

பணியை ஒப்படைத்தார். சுந்தரரும் இதற்காக ஏயர்கோன் கலிக்காம நாயனார் வீட்டிற்குத் தம் வருகையை ஆட்களின்மூலம் சொல்லி அனுப்பினார். இதைக் கேள்வியுற்ற கலிக்காம நாயனார் சுந்தரர் வந்து தம்முடைய நோயை தீர்ப்பதைக் காட்டிலும் உயிரை விடுவதே மேல் என்று தம் உடைவாளைக் கொண்டு வயிற்றைக் கிழித்துக் கொண்டு உயிரை மாய்த்துக் கொண்டார். நாயானருடைய மனைவியும் கணவரோடு உடன்செல்ல கருதியிருந்தபோது சுந்தரர் அங்குச் சென்றார். கலிக்காம நாயனாரின் மனைவி உடனே வீட்டுச் சூழ்நிலையை மறைத்துச் சுந்தரரை எதிர்கொண்டு அழைத்தார். அங்குக் கலிக்காம நாயனாரின் நிலையைத் தெரிந்து கொண்டதும் சுந்தரர் தாமும் உயிர் விடுவதாக உடைவாளைப் பற்றிய அளவில் இறைவன் திருவருளினால் ஏயர்கோன் கலிக்காம நாயனார் உயிர் பெற்றெழுந்து சுந்தரர் கையிலிருந்த உடைவாளை பற்றிக் கொண்டார். இவ்வியத்தகு செயல்களைக் கொண்டு விண்ணவர் மலர்மாரி பொழிந்தனர். இருவரும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு மிக்க சிநேகத்துடன் திருப்புன்கூர் பெருமானை வழிபட்டனர். அப்போது சுந்தரர், "அந்தணாளன் உன்" எனத் தொடங்கும் மேற்கண்ட பதிகத்தைப் பாடினார்.

ஒவ்வொரு பாடலிலும் சிவபெருமானின் அருள் திறத்தை வியந்து போற்றி திருப்புன்கூரில் வீற்றிருக்கும் பெருமானே! உன்தன் திருவடி அடைந்தேனே" என்று பாடுகிறார். சான்றாக மூன்றாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

**ஏதம்-நன்நிலம் ஈர்-அறுவேறு**
**ஏயர்கோன் உற்ற-இரும்பிணிதவிர்த்து**
**கோதனங்களின் பால் கறந்து ஆட்டக்**
**கோல வெண்மணல் சிவன்தன்மேல் சென்ற**
**தாதை தாள் அற எறிந்த தண்டிக்கு உன்**
**சடை மிசை மலர்அருள் செயக்கண்டு**
**பூத ஆளி! நின் பொன் அடி அடைந்தேன்**
**பூம்பொழில்திருப்புன்கூர் உளானே!"**

நான்காம் பாடலில் சுந்தரர் நல்-தமிழ் வல்ல ஞான சம்பந்தன், நாவினுக்கு அரையன், திருநாளைப்போவாரும், கற்ற சூதன், சாக்கியன், சிலந்தி, கண்ணப்பன், கணம்புல்லன் என்ற இவர்கள் குற்றம் செய்யினும் குணம் எனக்கருதும் உம்முடைய கொள்கை கண்டு உன் கழல் அடைந்தேன் என்று (சைவர்களையும் சமணர்களையும்) பாடுகிறார்.

56. "ஊர்வது ஓர் விடை" எனத் தொடங்கும் பதிகம், திருநீடூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் இறுதிப் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் இறைவனின் பண்பு நலன்களையும், உருவை வருணித்தும், திருநீடூர் தலத்து இயற்கை எழில்களை வருணித்தும், இத்தலத்துப் பெருமானைப் பணியாமல் விடுதல் நன்றோ? என்று பாடுகின்றார். சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு:

*"துன்னுவார்சடைத் தூமதியானை*
*துயக்கு உறாவகை தோன்றுவிப்பானை*
*பன்னுநால்மறை பாடவல்லானை,*
*பார்த்தனுக்கு அருள் செய்த பிரானை*
*என்னைஇன் அருள் எய்துவிப்பானை,*
*ஏதிலார் தமக்கு ஏதிலன்தன்னை*
*புன்னை, மாதவிப்போது, அலர்-நீடூர்ப்*
*புனிதனை பணியாவிடல் ஆமே"*

57. "தலைக்கலன் தலைமேல்" எனத் தொடங்கும் பதிகம், திருவாழ்கொளி புத்தூர் தலத்துப் பதிகமாகும். 12 பாடல்கள் கொண்டது. 12-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் சிவபெருமானின் உருவ வருணனையும், பண்பு நலன்களையும் புகழையும் கூறி, வாழ்கொளி புத்தூர் மாணிக்கத்தை-மறந்து என் நினைக்கேனே? என்று பாடுகிறார். 10-ஆம் பாடலில் தேரர், சமணர்களைக் குறிப்பிடுகின்றார். இப்பாடல் வருமாறு:

"திருந்தநால்மறை பாட வல்லானை
தேவர்க்கும் தெரிதற்கு அரியானை
பொருந்தமால்விடை ஏற வல்லானை
பூதிப்பை புலித்தோல் உடையானை
இருந்து உணும் தேரரும் நின்றுஉணும் சமணும்
ஏசநின்றவன், ஆர் உயிர்க்கு எல்லாம்
மருந்து அனான்தனை, வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத்தை-மறந்துஎன் நினைக்கேனே?"

58. "சாதலும் பிறத்தலும்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கழுமலம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும் கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே" என்று முடிவடைகின்றது. இப்பாடல்களின் சிவபெருமானின் பெருமைகளையும், பேரன்பினையும் நினைந்து, உருகி அப்பேர்பட்ட இறைவனை யான் கழுமல வளநகரில் கண்டு கொண்டேனே! என்று பாடுகிறார். சான்றாக நான்காம் பாடல் வருமாறு:

"மழைக்கு அரும்பும் மலர்க் கொன்றையினானை
வளைக்கல் உற்றேன்; மறவா மனம் பெற்றேன்;
பிழைத்து ஒருகால் இனிப் போய்ப் பிறவாமைப்
பெருமை பெற்றேன்; பெற்றது ஆர் பெறுகிற்பார்?
குழைக் கருங்கண்டனைக் கண்டு கொள்ளாவே
பாடுகின்றேன்; சென்று கூடவும் வல்லேன்;
கழைக் கரும்பும் கதலிப் பலசோலை
கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே"

59. "பொன்னும் மெய்ப் பொருளும் தருவானை" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. இறுதிப் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலும் இறைவனின் பண்பு நலன்களும், உருவ வருணனைகளும், அருள் திறமும்

வெளிப்படும் வகையில் உள்ளன. பாடலின் இறுதியில் அத்தகைய ஆரூரானை மறக்கவும் முடியுமோ? என்று பாடுகின்றார். சான்றாக முதற்பாடல் வருமாறு:

*"பொன்னும் மெய்ப் பொருளும் தருவானை,*
*போகமும் திருவும் புணர்ப்பானை,*
*பின்னை என் பிழையைப் பொறுப்பானை,*
*பிழைஎலாம் தவிரப் பணிப்பானை,*
*இன்ன தன்மையன் என்று அறிவு ஒண்ணா*
*எம்மானை, எளிவந்த பிரானை,*
*அன்னம் வைகும் வயல்பழனத்து அணி*
*ஆரூரானை, மறக்கலும் ஆமே",*

60. "கழுதை குங்குமம் தான்" எனத் தொடங்கும் பதிகம் திருஇடைமருதூர் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் தம்மைச் சிறுமை படுத்திக்கொண்டு இடைமருது தலத்தில் உறையும் எம்பிரானே! இப்பிறவியின்று உய்வதற்கு நீதான் அருள வேண்டும் என்று வேண்டிப் பாடுகின்றார். சான்றாக, நான்காம் பாடல் வருமாறு:

*முந்திச் செய்வினை இம்மைக்கண் நலிய,*
*மூர்க்கண் ஆகிக் கழிந்தன, காலம்;*
*சிந்தித்தே மனம் வைக்கவும் மாட்டேன்;*
*சிறுச் சிறிதே இரப்பார்கட்கு ஒன்று ஈயேன்;*
*அந்தி வெண்பிறை சூடும் எம்மானே!*
*ஆரூர் மேவிய அமரர்கள் தலைவா!*
*எந்தை! நீ எனக்கு உய்வகை அருளாய்*
*இடைமருது(ன்) உறை எந்தை பிரானே!"*

61. "ஆலம் தான் உகந்து" எனத் தொடங்கும் திருக்கச்சி ஏகம்பம் தலத்துப் பதிகம். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும்.

சுந்தரர் கண்கள் மறைவுற்றன. தமக்குக் கண்கள் திரும்பவும் தந்தருள வேண்டுமென்று பல தலங்களையும் வணங்கி காஞ்சீபுரம் வந்தார். அங்கு அம்மன் திருக்கோயிலை வணங்கிப் பின் ஏகம்பரரைக் கண் கொடுத்தருள வேண்டுமென்று இறைஞ்சினார். இறைவனும் இடக்கண் தெரியும்படி செய்தார். அங்கு அம்மையப்பரை வணங்கி, மேற்கண்ட பதிகம் பாடினார். இதனை ஒவ்வொரு பாடலின் இறுதி வரியிலும், "கம்பன் எம்மானை காணக்கண் அடியேன் பெற்ற ஆறே!" என்று முடிவுறுமாறு அமைத்துப் பாடியுள்ளார். ஒவ்வொரு பாடலும் இறைவனைப் பலவாறு ஏத்திப் புகழ்ந்து அவனைக் காண கண் பெற்றேனே" என்று பாடுமுறையில் அமைந்துள்ளன. சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

*திங்கள் தங்கிய சடை உடையானை*
*தேவ தேவனை, செழுங்கடல் வளரும்*
*சங்க வெண் குழைக்காது உடையானை,*
*சாம வேதம் பெரிது உகப்பானை,*
*மங்கை நங்கை மலைமகள் கண்டு*
*மருவி ஏத்தி வழிபடப் பெற்ற*
*கங்கையாளனை, கம்பன் எம்மானை,*
*காணக்கண் அடியேன் பெற்ற ஆறே!*

62. "புற்றில் வாள் அரவு" எனத் தொடங்கும் பதிகம் திருக்கோலக்காத் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் சிவபெருமானைப் பலவாறு வருணித்து, புகழ்ந்து போற்றி, அத்தகைய இறைவனைக் கோலக்காலினிற் கண்டு கொண்டேனே! என்று பாடுகின்றார். எட்டாம் பாடலில்,

*"நாளும் இன்இசையால்-தமிழ் பரப்பும்*
*ஞான சம்பந்தனுக்கு உலகவர் முன்*
*தாளம் ஈந்து, அவன் பாடலுக்கு இரங்கும்*
*தன்மையாள"னாக*

சிவபெருமானைப் போற்றுகிறார். சான்றாக மூன்றாம் பாடல் வருமாறு:

*பாட்டு அகத்து இசை ஆகிநின்றானை,*
*பத்தர் சித்தம் பரிவு இனியானை,*
*நாட்டு அகத்தேவர் செய்கை உளானை,*
*நாட்டம் ஆயிரம், நம்பெருமானை,*
*காட்டு அகத்து உறுபுலியானை,*
*கண்ஓர் மூன்று உடை அண்ணலை, - அடியேன்*
*கோட்டகப் புனல்ஆர் செழுங்கழனிக்*
*கோலக் காவினில் கண்டு கொண்டேனே"*

63. "மெய்யை முற்றப் பொடிபூசி ஓர் நம்பி" எனத் தொடங்கும் பதிகம், "நம்பி என்ற திருப்பதிகம்' என்னும் தலைப்புக் கொண்டது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் 10-ஆம் பாடல் முழுமையாகக் காணப்படவில்லை. மூன்று வரிகள் மட்டுமே காணப்படுகின்றது. சிவபெருமானின் பெருமைகளை "நம்பி" என்ற அடைமொழி கொடுத்துப் பாடுகின்றார். ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும் "என்னை ஆள் உடை நம்பி எழு பிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே" என்று முடிவடைகின்றது. சான்றாக ஆறாம் பாடல் இங்குத் தரப்படுகின்றது.

*அரித்தநம்பி, அடிகை தொழுவார் நோய்;*
*ஆண்டநம்பி, முன்னை; ஈண்டு உலகங்கள்*
*தெரித்த நம்பி ஒருசேஉடை நம்பி;*
*சில்பலிக்கு என்று அகம் தோறும் மெய்வேடம்*
*தரித்த நம்பி சமயங்களின் நம்பி;*
*தக்கன்தன் வேள்வி புக்கு அன்று இமையோரை*
*இரித்த நம்பி; என்னை ஆள்உடை நம்பி*
*எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே".*

64. "நீறு தாங்கிய திருநுதலானை" எனத் தொடங்கும் பதிகம் திருத்தினை நகர் தலத்துப் பதிகமாகும். 10

பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதிவரியும், "...திருத்தினை நகருள் சிவக்கொழுந்தினை, சென்று அடை, மனனே! என்று முடிவடைகின்றது. இப்பாடல்களில் சுந்தரர் மனதை முன்னிலைப்படுத்தி நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையில் ஆசை வையாமல் திருத்தனை நகரத்து சிவக்கொழுந்தினைச் சென்று அடைவீர்களாக! என்று அறிவுறுத்துகிறார். சான்றாக, இரண்டாம் பாடல் வருமாறு:

***"பிணிகொள் ஆக்கையில் பிறப்பு இறப்பு என்னும்***
***இதனை நீக்கி, ஈசன் திருவடி இணைக்கு ஆள்***
***துணிய வேண்டிடில், சொல்லுவன் கேள், நீர்;***
***அஞ்சல் நெஞ்சமே! வஞ்சர் வாழ் மதில் மூன்று***

***அணிகொள் வெஞ்சிலையால் உகச்சீறும்***
***ஐயன் வையகம் பரவி நின்று ஏத்தும்***
***திணியும் வார் பொழில் திருத்தினை நகருள்***
***சிவக் கொழுந்தினை, சென்று அடை, மனனே!***

ஒன்புதாம் பாடலில் தேரர், சமணர் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

65. "திருவும் வன்மையும்" எனத் தொடங்கும் பதிகம், திருநின்றியூர் தலத்துப் பதிகமாகும். இதில் ஏழு பாடல்கள் மட்டுமே உள்ளன. இப்பாடல்களில் சுந்தரர், சிவபெருமான், திருநாவுக்கரசர் கண்ணப்பர், பரசுராமர், இந்திரன், அகத்தியர் ஆகியோருக்கு அருள் செய்த தன்மையைப் பாராட்டி அதைக் கண்டு உன்னுடைய பாதத்தை அடைந்தேன் என்று பாடுகின்றார். மேலும் திருநின்றியூர் தலப்பெருமையும் இதில் காணப்படுகிறது. ஆறாம் பாடலில் சமணர்கள் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இப்பாடல் வருமாறு:

"காது பொத்தர் ஐக் கின்னரர், உழுவை,
கடிக்கும் பன்னகம், பிடிப்ப(அரும்) சீயம்,
கோதுஇல் மாதவர் குழுஉடன், கேட்பக்
கோல ஆல் நிழல் கீழ் அறம்பகர;
ஏதம் செய்தவர் எய்திய இன்பம்
யானும் கேட்டு, நின்இணையடி அடைந்தேன்
நீதி வேதியர் நிறை புகழ் உலகில்
நிலவு தென்திரு நின்றியூரானே!

இப்பதிகத்தின் இரண்டாம் பாடலில், இணைகொள்ஏழ் எழுநூறு இரும்பனுவல் ஈந்தவன் திருநாவினுக்கு அரையன் என்னும் வரியில் திருநாவுக்கரசர் ஏழு எழுநூறு பனுவல்கள் (7 x 700 = 4900) பாடல்கள் பாடியிருப்பதாகக் கூறுகிறார்.

66. "மறையவன் ஒருமாணி" எனத் தொடங்கும் பதிகம் திருஆவடுதுறை தலத்துப் பதிகமாகும். இதில் 5 பாடல்கள் மட்டுமே காணப்படுகின்றன. இப்பாடல்களில் சுந்தரர், சோழன், விசயன், இந்திரன் முதலான மற்றவர்களுக்கு அருள்செய்த திறத்தைக் கண்டு, சிவபெருமானே! உன் சேவடி அடைந்தேன் என்னைக் காத்தருள்க என்று வேண்டுகிறார். சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு

தெருண்ட வாய்இடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென இயற்ற
சுருண்ட செஞ்சடையாய்! அது தன்னைச்
சோழன் ஆக்கிய தொடர்ச்சி கண்டு, அடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப்பாதம்,
"போற்றி போற்றி"! என்று அன்பொடு புலம்பி

அருண்டு, என்மேல் வினைக்கு அஞ்சி, வந்து அடைந்தேன் ஆவடு துறை ஆதி எம்மானே!"

67. "ஊன் அங்கத்து உயிர்ப்பாய்" எனத் தொடங்கும் பதிகம், திருவலிவலம் தலத்துப் பதிகம் 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சிவபெருமானின் பெருமைகளைக் கூறி வலிவலம்தனில் வந்து கண்டேனே! என்று பரவுகிறார். சான்றாக 5-ஆம் பாடல் வருமாறு:

*"நல்இசை ஞான சம்பந்தனும் நாவுக்கு*
*அரசரும் பாடியநல் தமிழ்-மாலை*
*சொல்லியவே சொல்லி ஏத்து உகப்பானை;*
*தொண்டனேன் அறியாமை அறிந்து*
*நல்இயல் மனத்தைக் கசிவித்து,*
*கழல் அடிகாட்டி, என்களைகளை அறுக்கும்*
*வல்இயல் வானவர் வணங்க நின்றானை;*
*வலிவலம் தனில் வந்து கண்டேனே"*

68. "செம்பொன்மேனி" எனத் தொடங்கும் பதிகம் திருநள்ளாறு தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். சிவபெருமானைப் பலவாறு புகழ்ந்து, நள்ளாறனை, அமுதை நாயினேன் மறந்து என் நினைக்கனே? என்று ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் பாடுகின்றார். மூன்றாம் பாடலில், "காமரத்து இசைபாட நாவில் ஊறும் நள்ளாறன்" என்று சிவபெருமானைக் காமரப் பண்ணில் விருப்புடையவன் என்று பாடுகிறார். ஒன்பதாம் பாடலில் இராவணன் இசை கேட்டு வாளொடு நாமமும் கொடுத்த வள்ளல் என்றும் சிவபெருமானை ஏத்துகின்றார். சான்றாக, எட்டாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

*"மாதினுக்கு உடம்புஇடம் கொடுத்தானை,*
*மணியினை, பணிவார் வினை கெடுக்கும்*
*வேதனை, வேத வேள்வியர் வணங்கும்*
*விமலனை, அடியேற்கு எளிவந்த*

நாதனை, தன்னைத் தோழமை அருளித்
தொண்டனேன் செய்ததுரிசுகள் பொறுக்கும்
நாதனை, நள்ளாறனை, அமுதை
நாயினேன் மறந்து என் நினைக்கேனே?"

69. திருவும் மெய்ப் பொருளும் எனத் தொடங்கும் பதிகம் வடதிருமுல்லை வாயில் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இறைவனைப் பலவித அடைமொழிகளுடன் போற்றி, அடியேன் படும் துயர்களைக் களைக! என்று பொருள்படும்படி ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் அடியேன் படுதுயர் களையாய், பாசுபதா பரஞ்சுடரே என்று அமைத்துப் பாடுகிறார். 2,4ஆம் பாடலகளில் இறைவன் திருப்புகழில் விருப்புடையவன் என்று கூறுகிறார். திருமுல்லைவாயில் தலத்து வருணனையில் பொறிவரி வண்டு இசைபாட என்று வண்டுகள் இசைபாடும் அழகை உரைக்கிறார். எட்டாம் பாடலில் திருவெண்ணெய் நல்லூரில் தம்மை ஆட்கொண்ட திறத்தை அமைத்துக் காட்டுகிறார். மூன்றாம் பாடலில் சங்கிலியர்க்காக தம்முடைய கண்களைக் கொண்ட இறைவனின் பண்பு நலனை உரைக்கின்றார். இரண்டாம் பாடலில், கூடிய இலயம் (ஜதி) பிழையாமை கொடி இடை உடைய அவள் காண, ஆடிய அழகா!" என்று சிவபெருமான் இலயம், சதி (ஜதி) பிழையாமல் ஆடுபவன் என்று ஏத்திப் பாடுகிறார். சான்றாக, மூன்றாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

விண்பணிந்து ஏத்தும் வேதியா மாதர்
வெருவிட, வேழம் அன்று உரித்தாய்!
செண்பகச் சோலை சூழ்திருமுல்லை
வாயிலாய்! தேவர்தம் அரசே!
தண்பொழில் ஒற்றி மாநகர் உடையாய்!
சங்கிலிக்காக என் கண் கொண்ட
பண்பா! நின் அடியேன் படுதுயர் களையாய்
பாசுபதா பரஞ்சுடரே!"

70. "கங்கை வார் சடையாய்" எனத் தொடங்கும் பதிகம் திருஆவடுதுறை தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும்.

இரண்டாம் பாடலில் சுந்தரர் தம்மைக் கண் இல்லாதவன், உடம்பில் நோய் உடையவன் என்னும் குறிப்பைத் தருகிறார். இப்பாடல்களில் இறைவனைப் பலவாறு புகழ்ந்து தம்மை அஞ்சாதே! என்று சொல்லி அருள வேண்டும் என்று வேண்டுகிறார். ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும்;...எனை "அஞ்சல்" என்று அருளாய்! ஆர் எனக்கு உறவு? அமரர்கள் ஏறே!" என்று முடிவடைகின்றது. சான்றாக ஒன்பதாம் பாடல் இங்கு தரப்படுகிறது.

*வானநாடனே! வழித்துணை மருந்தே*
*மாசுஇலா மணியே மறைப் பொருளே*
*ஏனமா எயிறு ஆமையும் எலும்பும்*
*ஈடு தாங்கிய மார்பு உடையானே*
*தேன்நெய் பால் தயிர் ஆட்டு உகந்தானே*
*தேவனே திரு ஆவடுதுறையுள்*
*ஆணையே எனை "அஞ்சல்" என்று அருளாய்*
*ஆர் எனக்கு உறவு? அமரர்கள் ஏறே"*

பதிகம் 71 முதல் 75 வரை காந்தாரப் பண்ணில் அமைந்தவை. இப்பதிகங்கள் இங்கு ஆராய்ப்படுகிறது.

71. "யாழைப் பழித்தன்ன மொழி" எனத் தொடங்கும் பதிகம், திருமறைக்காடு தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் 10-ஆம் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் மறைக்காட்டில் இயற்கை வருணனைகளையும், சிவபெருமானின் உருவ வருணனைகளையும் கூறி நெஞ்சை விளித்துத் திருமறைக் காட்டினை அறிந்து கொள்! என்று கூறுகிறார். சான்றாக நான்காம் பாடல் வருமாறு:

*"நரை விரவிய மயிர் தன்னொடு பஞ்ச(வ்) வடிமார்பன்,*
*உரை விரவிய உத்தமன், இடம்-உணரல்(ல்) உறு, மணமே!*
*குரை விரவிய குலை சேகரக் கொண்டல் தலை - விண்ட*
*வரை புரைவன திரை பொழுது இழிந்து எற்றும்*
*மறைக்காடே"*

ஒன்பதாம் பாடலில் குண்டாடியும் சமன் ஆடியும் குற்று உருக்கையர் தாமும் என்ற வரியில் புறச்சமயத்தினரைப் பற்றி குறிப்பிடுகிறார்.

72. "எனக்கு இனித் தினைத்தனை" எனத் தொடங்கும் பதிகம் திருவலம்புரம் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர், இறைவனின் எழில் தோற்றத்தையும் பெருமைகளையும் வலம்புரத்து வருணனைகளையும் உள்ளடக்கிப் பாடுகிறார். சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு:

*கொடு மழு விரகினன், கொலைமலி சிலையினன்*
*நெடு மதில் சிறுமையின் நிரவ வல்லவன், இடம்*
*படு மணிமுத்தமும் பவளமும் மிகச் சுமந்து*
*இடு மணல் அடைகரை இடம்-வலம்புரமே".*

73 "கரையும் கடலையும்" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் "..இருப்பதும் ஆரூர்; அவர் எம்மையும் ஆள்வரோ? கேளீர்!" என்று முடிக்கிறார். இப்பாடல்களில் சுந்தரர் இறைவனின் பெருமைகளைப் பலவாறு பேசியும் தம்முடைய பண்பு நலன்களை கூறியும் அவன் இருப்பது ஆரூரில் அவர் எம்மையும் ஆள்வரோ? என்று கேளீர்! என்று தோழமை உணர்வோடு வினா தொடுக்கிறார். சான்றாக ஐந்தாம் பாடல் வருமாறு:

*நீதியில் ஒன்றும் வழுவேன் நிட்கண்டகம் செய்து*
*வாழ்வேன் வேதியர் தம்மை வெகுளேன் வெகுண்டார்க்கும்*
*துணை ஆவேன்;*
*சோதியில் சோதி எம்மானை நீறு அணிந்திட்ட*
*ஆதிஇருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ?*
*கேளீர்!*

எட்டாம் பாடலில் இலங்கை வேந்தனை தம் காலின் கீழ் அடக்கி வைத்த பெருமையுடைய இறைவன் இருப்பதும் ஆரூர் என்று பாடுகிறார்.

74. "மின்னும் மா மேகங்கள்" எனத் தொடங்கும் பதிகம் திருத்துரத்தி திருவேள்விக்குடி தலங்களுக்கானப் பதிகம். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். திருத்துருத்தி தலத்தின் இயற்கை வளங்களை எடுத்துக் கூறி, திருவேள்விக்குடியில் உள்ள எம்பெருமானை எவ்வாறு அறிவது என்பதை அறியாதவனாக தாம் இருப்பதாகச் சுந்தரர் கூறுகின்றார். சான்றாக ஏழாம் பாடல் வருமாறு:

*"வரையின் மாங்கனி யொடு வாழையின் கனியும்*
*வருடியும் வணக்கியும் மராமரம் பொருது,*
*கரையும் கருங்கடல் காண்பதே கருத்து-ஆய்*
*காம்(பு) பீலி சுமந்து, ஒளிர் நித்திலம் கைபோய்,*
*விரையும் மா காவிரித் துருத்தியார்; வேள்விக்*
*குடிஉளார் அடிகளை, செடியனேன் நாயேன்*
*உரையும் ஆறு அறிகிலேன் - எம்பெருமானை,*
*"உலகு அறி பழவினை அற ஒழிந்தானை",*

75. "மறைகள் ஆயின நான்கும்" எனத் தொடங்கும் பதிகம், திருஆனைக்காத் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் பத்தாம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் ஆனைக்காவில்

உறையும் பெருமானின் புகழ் நலங்களைக் கூறி, அவ்விறைவன் அடி சேருபவர் எம்மையும் ஆட்கொண்டவராவர் என்று தம்மை அடியார்க்கு அடியவர் என்று கூறிக்கொள்கிறார். சான்றாக, நான்காம் பாடல் வருமாறு:

***"தந்தை தாய், உலகுக்கு ஓர் தத்துவன்.***
***மெய்த்தவத்தோர்க்கு; பந்தம் ஆயின பெருமான் பரிசு***
***உடையவர் திரு அடிகள்;***
***அம்தண் பூம்புனல் ஆனைக்கா உடை ஆதியை நாளும்***
***"எந்தை" என்று அடிசேர்வார் எம்மையும் அள்***
***உடையாரே",***

76. "பொருவனார்; புரிநூலர்" எனத் தொடங்கும் பதிகம் பியந்தைக் காந்தாரப் பண்ணிலமைந்தது. திருவாஞ்சியம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. பெரும்பாலானப் பாடல்களில் சுந்தரர் சிவபெருமானின் உருவ வருணனையும் திருவாஞ்சியத் தலத்து இயற்கை வருணனையும் கூறி, இத்தலத்து உறையும் பெருமான் அடியார்களின் ஊழ்வினையை அகற்ற வல்லவர் என்று பாடுகிறார். சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

***"கரந்தை கூவிளமாலை கடிமலர்க் கொன்றையும் சூடி***
***பரந்த பாரிடம் சூழ, வருவர், எம்பரமர், தம் பரிசால்;***
***திருந்து மாடங்கள் நீடு திகழ்திரு வாஞ்சியத்து உறையும்***
***மருந்தனார், அடியாரை வல்லினை நலிய ஒட்டாரே"***

77. "பரவும் பரிசொன்றறியேன்" எனத் தொடங்கும் பதிகம காந்தாரப் பஞ்சமப் பண்ணில் அமைந்தது. திருஐயாறு தலத்துப் பதிகம் 11 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலின்".... திரைக் காவிரிக் கோட்டத்து ஐயாறு உடைய அடிகளே" என்று முடிவடைகிறது.

### இப்பாடல் பாடப்பட்ட சூழல்

சுந்தரரும் சேரமான் பெருமான் என்பவரும் மிகுந்த நட்பு பூண்டொழுகி வந்தனர். இருவரும் பல தலங்களுக்கும் சென்று இறைவனை வழிபட்டுப் பின்னர் திருவாரூரில் தங்கியிருக்கும் நாளில் சேரமன்னர் தம் நாட்டிற்கு எழுந்தருள வேண்டுமென்று சுந்தரரை மிகவும் வற்புறுத்தி வந்தார். சுந்தரரும் அதற்கிசைந்து பரவையாரின் இசைவையும் பெற்று இருவரும் திருவாரூர் எல்லையைக் கடந்து காவிரி தென்கரையிலுள்ள திருக்கண்டியூர் முதலிய தலங்களை வணங்கிப் பின்னர் காவிரிக் கரையை அடைந்தனர். காவிரியானது இருகரையும் பெருக்கெடுத்து ஓடங்கள் செல்ல முடியாதவாறு மிக விரைவுடன் சென்றது. இதைக் கண்டு சுந்தரர், "பரவும் பரிசொன்று" எனத் தொடங்கும் மேற்கண்ட பதிகம் பாடினார்[15]. இப்பாட்டில் விருப்பம் கொண்ட சிவபெருமான் ஆறு விலகி வழிகாட்டும்படி அருள் செய்தார். இருவரும் இறைவன் திருவருளை வியந்து தம் பரிசனங்களுடன் நதியைக் கடந்து ஐயாற்று இறைவனை வழிபட்டனர்.

இப்பாடல்களில் சுந்தரர் இறைவனின் அருளை வேண்டிப் பாடுகிறார். சான்றாக மூன்றாம் பாடல் வருமாறு:

> *"மருவிப்பிரிய மாட்டேன்நான்; வழிநின்றொழிந்தேன்; ஒழிகிலேன்*
> *பரவி விச்சி(ய) மலைச்சாரல் பட்டைகொண்டு பகடு-ஆடி,*
> *குருவிஓப்பி, கிளிகடிவார் குழல்மேல் மாலை கொண்டு ஒட்டந்*
> *தர, அம்திரைக் காவிரிக் கோட்டத்து ஐயாறு உடைய அடிகளோ!"*

78. "வாழ்வாவது மாயம்" எனத் தொடங்கும் பதிகம் நட்டபாடைப் பண்ணிலமைந்தது. திருக்கேதாரம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் பத்தாம்

பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் நிலையற்ற இவ்வுலக வாழ்வில் மனம் செலுத்தாது அறம் செய்வீர்களாக! கேதாரம் என்று கூறினாலே பிறப்பு ஒழித்துப் பிறவிப்பயன் அடையலாம் என்று கூறுகிறார். சான்றாக 5-ஆம் பாடல் வருமாறு:

*"வாள் ஒடிய தடங்கண்ணியர் வலையில்(ல்) அழுந்தாதே,*
*நாள் ஒடிய நமனார் தமர் நணுகாமுனம் நணுகி,*
*ஆள் ஆய் உய்ம்மின்! அடிகட்கு இடம் அதுவே எனில் இதுவே*
*கீளோடு அரவு அசைத்தான் இடம் கேதாரம் எனீரே!"*

ஏழாம் பாடலில், "பண்ணின் தமிழ் இசை பாடலின், பழவேய் முழவு அதிர", "கிண்ணென்று இசை முரலும்" என்றவாறு தமிழிசைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. ஒன்பதாம் பாடலில் இராவணன் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

79. "மானும் மரை இனமும் எனத் தொடங்கும் பதிகம், நட்டபாடையிலமைந்தது. திருப்பருப்பதம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் பருப்பதமலை நாட்டின் இயற்கை வளங்களையும் விவரிக்கின்றார். ஒவ்வொரு பாடலின் இறுதியும், "சீ பர்ப்பத மலையே (ஸ்ரீ பர்வதமலை) என்று முடிவடைகிறது. சான்றாக இரண்டாம் பாடல் வருமாறு:

*"மலைச் சாரலும் பொழில் சாரலும் புறமே வரும் இனங்கள்*
*மலைப் பால் கொணர்ந்து இடித்து ஊட்டிட மலங்கி தன் களிற்றை*
*அழைத்து ஓடியும், பிளிறீயவை அலமந்து வந்து எய்த்து,*
*திகைத்து ஓடி, தன்பிடி தேடிடும் சீபர்ப்பதமலையே"*

3,4,7 ஆம் பாடல்களில் புனம் காக்கும் பெண் கிளியை ஓட்டும் செயல் நாடகமாக்கம் செய்யக்கூடிய வகையில் மிகவும் அருமையாக சித்தரிக்கப்பட்டுள்ளது.

80. "நத்தார் புடை ஞானன்" எனத் தொடங்கும் நட்டபாடைப் பண்ணிலமைந்த பதிகம் திருக்கேதீச்சுரம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் கேதீச்சுரத்தில் உறையும் சிவபெருமானைப் பலவாறு வருணிக்கிறார். ஒவ்வொரு பாடலிலும் இறைவன் "பாலவியின் கரைமேல்" உறைபவன் என்று பணிபடர்ந்த கேதீச்சுரத்தை உவமிக்கிறார். சான்றாக 4-ஆம் பாடல் வருமாறு:

***கரிய கறைக் கண்டன்ன்(ன்): நல கண்மேல் ஒரு கண்ணான்.***
***வரிய சிறை வண்டு யாழ் செயும் மாதோட்ட நன் நகருள்***
***பரிய திரை எறியாவரு பாலாவியின் கரைமேல்-***
***தெரியும் மறைவல்லான்-திருக் கேதீச்சுரத்தானே"***

81. "கொன்று செய்த கொடுமையால்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கழுக்குன்றம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் பத்தாம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் சிவபெருமான் உறையும் இடமானத் திருக்கழுக்குன்றத்தை எவ்வாறெல்லாம் தொழவேண்டும் என்றும், மனத்தில் நிறுத்த வேண்டும் என்றும் விளக்குகின்றார். சான்றாக, 3-ஆம் பாடல் வருமாறு:

***"நீளநின்று தொழுமின், நித்தலும் நீதியால்***
***ஆளும் நம்ம வினைகள் அலகி அழுந்திட***
***தோளும் எட்டும் உடைய மாமணிச்சோதியான்***
***காளகண்டன், உறையும் தண் கழுக்குன்றமே!"***

82. "ஊன் ஆய் உயிர் புகல்ஆய்" எனத் தொடங்கும் பதிகம் நட்டராகப் பண்ணிற்குரியதாகத் தரப்பட்டுள்ளது. இஃது திருச்சுழியல் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் திருச்சுழியல் தல இறைவனைத் தொழுவார்கள் பெறும் நற்பயன்களையெல்லாம் அடுக்குகிறார். சான்றாக முதற்பாடல் வருமாறு:

*"ஊன்ஆய், உயிர் புகல்ஆய், அகலிடம் ஆய், முகில் பொழியும்*
*வான்ஆய், அதன்மதிஆய், விதி வருவான் இடம்-பொழிலின்*
*தேன் ஆதரித்து இசை வண்டு இனம் மிழற்றும்- திருச்சுழியல்,*
*நானா விதம் நினைவார் தமை நலியார், நமன் தமரே"*

இப்பாடலில் "வண்டினம் இசை மிழற்றும் திருச்சுழியல்" என்று தலத்தை வருணிக்கின்றார். ஒன்பதாம் பாடலில், குண்டாடிய சமன் ஆதர்கள் குடைச் சாக்கியர் அறியா" என்று சமணர்களையும் சாக்கியர்களையும் குறிப்பிடுகிறார்.

83. பதிகம் 83 முதல் 85 வரை புறநீர்மைப் பண்ணிலமைந்தவை "அந்தியும் நண்பகலும்" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துக்குரியது. 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர், தென்திரு ஆரூர் சென்று இறைவனை அடியேனாகிய தாம் என்று எய்துவேம்? என்று இறைவனைப் பிரிந்துள்ள துயரை எண்ணி கவல்கின்றார். சான்றாக ஏழாம் பாடல் வருமாறு:

*கொம்பு அனநுன் இடையாள் கூறனை, நீறு அணிந்த*
*வம்பனை, என்உயிருக்கும் வைப்பினை, ஒப்பு அமராச்*

*செம்பானை, நல்மணியை-தென்திரு ஆரூர் புக்கு-*
*எம்பொனை, என் மணியை, என்று கொல் எய்துவதே?"*

ஆறாம் பாடலில், இறைவனை ஏழி இசையாகவும் ஏழ் நரம்பின் ஓசையாகவும் வருணிக்கிறார்.

84. "தொண்டர் அடித் தொழலும்" எனத் தொடங்கும் பதிகம் திருக்கானப்பேர் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் இறைவனைப் பலவாறு புகழ்ந்து, போற்றி, வருணித்து, அத்தகைய இறைவனைத் தம்முடைய இரு கண்கள் கொண்டு கண்டு தொழுவது எந்நாளோ? என்று வருந்திப் பாடுகிறார். சான்றாக, இரண்டாம் பாடல் வருமாறு:

*"கூதல்இடும் சடையும், கேள் அரவும், விரவும்*
*கொக்கு இறகும், குளிர்மா மத்தமும், ஒத்து உனதாள்*
*ஓதல் உணர்ந்து, அடியார் உன் பெருமைக்கு நினைந்து*
*உள் உருகா, விரசும் ஓசையைப் பாடலும், நீ*
*ஆதல் உணர்ந்து அவரோடு அன்பு பெருத்து அடியேன்*
*அங்கையில் மாமலர் கொண்டு, என் கணது அல்லல் கெட*
*காதல் உற, தொழுவது என்று கொலோ, அடியேன?-*
*கார் வயல் சூழ் கானப்பேர் உறை காளையையே"*

ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும், "கார் வயல் சூழ் கானப்பேர் உறை காளைளையே" என்று முடிவடைகிறது.

85. "வடிவுஉடை மழுவேந்தி" எனத் தொடங்கும் பதிகம். திருக்கடைலையாற்றூர் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் உமையொரு பாகனாக விளங்கும் சிவபெருமானைப் பலவாறு புகழ்ந்து, போற்றி வருணிக்கிறார். ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும்,

"..இவ்வழி போந்த அதிசயம் அறியேனே!" என்று முடிவடைகின்றது. சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

*"வித்தக வீணையோடும், வெண்புரிநூல் பூண்டு,*
*முத்து அனவெண் முறுவல் மங்கையொடும்(ம்) உடனே,*
*கொத்து அலரும் பொழில்சூழ் கடலையாற்றூரில்*
*அத்தன் இவ்வழி போந்த அதிசயம் அறியேனே".*

## இப்பதிகம் பாடப்பட்ட சூழல்

சுந்தரர் பல தலங்களையும் வணங்கி, பாடி திருக்கடலையாற்றூர்கருகாகச் சென்று அப்பதிக்குச் செல்லாது திருமுதுகுன்றை நோக்கிப் புறப்பட்டார் அப்போது இறைவன் ஓர் அந்தணர் வடிவங் கொண்டு அவ்வழி வரவே, சுந்தரர் அவரிடம் திருமுதுகுன்றம் செல்வதற்கான வழி யாது? என்று வினவ, அந்தணரும் கடலையாற்றூர்க்குச் செல்லும் வழி இவ்வழிதான் என்று கூறி வழித்துணையாகச் சிறிது தூரம் சென்று மறைந்தார். இந்நிகழ்ச்சியில் "வியப்படைந்த சுந்தரர், வடிவுடை, மழுவேந்தி என்ற மேற்கண்ட பதிகம் பாடி ஒவ்வொரு பாடலின் முடிவிலும், "அடிகள் இவ்வழி போந்த அதிசய மறியேனே" என்னும் சொற்றொடரமைத்துக் கடலையாற்றூர்ச் சென்று இறைவனை வணங்கி வழிபட்டார்[16].

86. "விடையின் மேல் வருவானை" எனத் தொடங்கும் பதிகம் திருவன் பார்த்தான் பனங்காட்டூர்த் தலப் பதிகமாகும். சீகாமரப் பண்ணில் அமைந்தது. 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் இறைவனைப் பலவாறு வருணித்து, பனங்காட்டூர்த் தலத்து இறைவனைச் சாராதோர், உணராதோர், பேசாதோர், பரவாதோர், பயிலாதோர், அறியாதோர், நினையாதோர், குழையாதோர் அந்தந்த செயற்கருவிகள் அற்றவர் என்னும் பொருள்பட உரைக்கின்றார். சான்றாக மூன்றாம் பாடல் வருமாறு:

*"தண் ஆர் மாமதிசூடி, தழல் போலும் திருமேனிக்கு*
*எண்ஆர் நாள்மலர் கொண்டு அங்கு இசைந்து ஏத்தும்*
*அடியார்கள்*
*பண் ஆர் பாடல் அறாத படிநன், தன் பனங்காட்டூர்*
*பெண் ஆண் ஆய பிரானை, பேசாதார் பேச்சு என்னே!"*

87. "மாட மாளிகை கோபுரத்தொடு" எனத் தொடங்கும் பதிகம் திருப்பனையூர்த் தலத்துப் பதிகமாகும். சீகாமரப் பண்ணில் அமைந்தது. 10 பாடல்கள் கொண்டது. இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் முதலிரு வரிகள் திருப்பனையூர் தல வருணணையாகவும், பின் இரு அடிகள் சிவபெருமானின் புகழ்குறித்தும் வருவன. ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும், "அவரே அழகியரே" என்று முடிவடைகின்றது. சான்றாக, மூன்றாம் பாடல் வருமாறு:

*"செங்கண் மேதிகள் சேடு எறிந்து தடம் படிதலின் சேல்*
*இனத்தொடு*
*பைங்கண் வாளைகள் பாய் பழனத் திருப்பனையூர்,*
*திங்கள் சூடியசெல்வனர், அடியார்தம் மேல்*
*வினைதீர்ப்பராய்விடில்*
*அங்கு இருந்து உறைவார் அவரே அழகியரே".*

எட்டாம் பாடலில், "பண் யாழ் முரலும் பழனத் திருப்பனையூர்" என்னும் குறிப்பில் பண் குரலிசையையும், யாழ் கருவி இசையையும் உணர்த்துவதாகக் கருதலாம்.

88. "நம்பினார்க்கு அருள் செய்யும்" எனத் தொடங்கும் பதிகம் திருவீழிமிழலைத் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக் காப்புப் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் இறுதி வரியும் "....வீழி கொண்டீர்! அடியேற்கும் அருளுதிரே" என்று முடிவடைகிறது. இப்பாடல்களில் சுந்தரர், திருவீழிமிழலையில் உறையும் சிவபெருமானின் பெருமைகளைப் பலவாறு கூறி இறைவன்

பலருக்கும் அருள்புரிந்த திறத்தைக் கூறி, அவ்வாறே அடியேனாகிய தமக்கும் அருள்புரிய வேண்டும் என்று வேண்டுகிறார். சான்றாக, ஏழாம் பாடல் வருமாறு:

*பழிந்த பார்த்தன், பகீரதன், பல பத்தர் சித்தர்க்குப் பண்டு நல்கினீர்!*
*திணிந்த மாடம் தொறும் செல்வம் மல்கு திரு மிழலை,*
*தணிந்த அந்தணர் சந்தி நாள்தொறும் அந்தி வான் இடு பூச்சிறப்பு அவை*
*அணிந்து, வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே"*

எட்டாம் பாடலில், "நீர் தமிழோடு இசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினீர்" என்னும் வரியில் திருஞான சம்பந்தருக்குக் காசு கொடுத்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

89. "பிழை உளன பொறுத்திடுவர்" எனத் தொடங்கும் பதிகம் திருவெண்பாக்கம் தலத்துப் பதிகமாகும். சீகாமரப் பண்ணிலமைந்தது. 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும்.

## இப்பதிகம் பாடப்பட்ட சூழல்

சுந்தரர் தம் கண் மறைந்த பிறகு மிகவும் வருந்தி ஒரு சில தலங்களுக்குச் சென்று பதிகங்கள் பாடி திருவெண்பாக்கம் அடைந்தார். அங்கிருந்த இறைவனை வணங்கி, "நீர் கோயிலில் இருக்கின்றீரா?" என்று வினவ, இறைவனும் ஒரு ஊன்றுகோல் கொடுத்தருளி, "நாம் உள்ளோம் நீர் போம்" என்று மொழிந்ததைக் கேட்டு இப்பதிகம் பாடினார்[17]. இந்நிகழ்ச்சியை ஒவ்வொரு பாடலிலும் அமைத்து, இறுதிவரியில், "உளோம் போகீர்! என்றானே!" என்று முடிக்கின்றார். பத்தாம் பாடலில் இறைவன் தமக்கு ஊன்றுகோல் அருளியதை அமைத்துக் காட்டியுள்ளார். இப்பாடல் வருமாறு:

"மான் திகழும் சங்கிலியைத் தந்து, வருபயன்கள் எல்லாம்
தோன்ற அருள் செய்த அளித்தாய்" என்று உரைக்க,
'உலகம் எலாம்
ஈன்றவனே! வெண்கோயில் இங்கு இருந்தாயோ?" என்ன,
ஊன்றுவது ஓர் கோல் அருளி, "உளோம்; போகீர்!"
என்றானே!"

90. பதிகம் 90 முதல் 93 வரையிலான பதிகங்கள் குறிஞ்சடிப் பண்ணில் அமைந்தவை. இவற்றின் சிறப்பியல்புகளை ஒவ்வொன்றாக ஈண்டுக் காண்போம்.

"மடித்தாடும் அடிமைக்கண்" எனத் தொடங்கும் பதிகம் கோயில் எனப்படும் சிதம்பரம் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. இப்பாடல்களில் சுந்தரர் மனதை முன்னிலைப்படுத்தி, மனமே! பாசவலையில் சிக்குண்டு தவிக்கும் நம்மைத் தடுத்தாட் கொள்ளும் இறைவன் புலியூர் சிற்றம்பலத்தில் உள்ளான். அவ்விறைவனை விடாது பற்றுக என்னும் பொருள்பட பாடுகின்றார். ஒவ்வொரு பாடலிலும் "தருமனார் தமர் செக்கில் இடும்போது தடுத்து ஆட்கொள்வான்" என்னும் வரி இடம்பெறுகிறது. பாடலின் இறுதிவரி, "புலியூர்ச் சிற்றம்பலத்து எம்பெருமானைப் பெற்றாம் அன்றே! சான்றாக 5-ஆம் பாடல் வருமாறு:

"கருமானின் உரி ஆடை, செஞ்சடைமேல் வெண்மதியக்
கண்ணியானை,
உரும் அன்னகூற்றத்தை உருண்டு ஓட உதைத்து உகந்து
உலவா இன்பம்
தருவானை, தருமனார்தமர் செக்கில் இடும் போது தடுத்து
ஆட்கொள்வான்,
பெருமானார்-புலியூர்ச் சிற்றம்பலத்து எம்பெருமானைப்
பெற்றாம் அன்றே"

ஏழாம் பாடலில் இராவணன் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. ஒன்பதாம் பாடலில், "மோடு உடைய சமணர்க்கும், முடை உடைய சாக்கியர்க்கும்" என்னும் வரியில் சமணர் சாக்கியரைக் குறிப்பிடுகின்றார்.

91. "பாட்டும் பாடி" எனத் தொடங்கும் பதிகம் திருஒற்றியூர்த் தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் இறுதிப் பாடல் திருக்கடைக் காப்பாகும். இப்பாடல்களில் சுந்தரர் இறைவனைப் பலவாறு புகழ்ந்து வருணித்து, அத்தகைய இறைவன் உறையும் இடம் ஒற்றியூரே என்று பாடுகிறார். சான்றாக ஆறாம் பாடல் வருமாறு:

*"படை ஆர் மழுவன், பால்வெண் நீற்றின்*
*விடை ஆர் கொடியான், வேதநாவன்*
*அடைவார் வினைகள் அறுப்பான், என்னை*
*உடையான் உறையும்-ஒற்றியூரே,"*

92. "எற்றால் மறக்கேன்" எனத் தொடங்கும் பதிகம். திருப்புக்கொளியூர் அவிநாசி தலத்துப் பதிகமாகும். குறிஞ்சிப் பண்ணில் அமைந்தது. 10 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் 10-ஆம் பாடல்கள் திருக்கடைக் காப்புப் பாடலாகும்.

## இப்பதிகம் எழுந்த சூழல்

சுந்தரர் திருவாரூரிலிருந்து சேரமானைக் காணும் நோக்கத்தில் மலைநாட்டிற்குச் செல்லும் வழியில் மேலை கொங்கு நாட்டிலுள்ள திருப்புக் கொளியூர் சென்றடைந்தார். அங்கு அந்தணர் வாழும் மாடவீதி அருகே செல்லும்போது ஒன்றுக்கொன்று எதிராயுள்ள இரண்டு வீடுகளில் ஒரு வீட்டில் மங்கல ஒலியும் மற்றொரு வீட்டில் அழுகையொலியுங் கேட்டன. அதைப்பற்றி சுந்தரர் அருகிலிருந்தோரிடம் கேட்டபொழுது, "அவ்வீடுகளிலிருந்து ஐந்து வயது சிறுவர்கள் இருவர், குளிக்கச் சென்ற குளத்தில் ஒருவனை முதலை

விழுங்கிற்று. மற்றவன் பிழைத்தனன். மீண்டவனுக்குப் பூணூற் சடங்கு நடைபெறுகின்றது" என்று கூறினார். பிள்ளையை இழந்தவர்கள் சுந்தரரின் திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சி தங்கள் இல்லத்திற்கு எழுந்தருளும்படி வேண்டினர். அப்போது நாயனார் மைந்தன் இழந்த துயரத்தையும் மறந்து என்னிடம் அன்பு வைத்த இவர்களின் சிறுவனை முதலை வாயிலிருந்து மீட்பித்த பின்னரே, சிவபெருமான் கழல் பணிவேன் என்று எழுந்து புதல்வனை முதலை விழுங்கிய பொய்கைக்குச் சென்று அதன் கரையில் நின்று மேற்கண்ட திருப்பதிகம் அருளினார்[18]. இதன் நான்காம் பாடலான, "உரைப்பாருரை யுகந்து" என்னும் பாடல் முடியுமுன்னர் சிறுவனை அறக்கடவுள் முதலை வாயிலிட அஃது அவனைக் கரையிற் கொணர்ந்து உமிழ்ந்தது. அனைவரும் பெருவியப்புற்றனர். சுந்தரர் உயிர்ப்பித்த புதல்வனையுமழைத்துக் கொண்டு அவிநாசிப் பெருமானைப் பணிந்து போற்றிப் பாடினார். இந்நிகழ்ச்சியை உள்ளடக்கமாகக் கொண்ட நான்காம் பாடல் வருமாறு:

> ***"உரைப்பார் உரை உகந்து, உள்க வல்லார் தங்கள் உச்சியாய்!***
> ***அரைக்கு ஆடு அரவா! ஆதியும் அந்தமும் ஆயினாய்!***
> ***புரைக்காடு சோலைப் புக்கொளியூர் அவிநாசியே!***
> ***கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு, காலனையே!"***

ஒவ்வொரு பாடலிலும் சுந்தரர் சிவபெருமானைப் பலவாறுப் புகழ்ந்து போற்றி பிறவாமையும், நரகம் புகாமையும் வேண்டுகின்றார்.

93. "நீரும் மலரும் நிலவும்" எனத் தொடங்கும் பதிகம் திருநறையூர்ச் சித்தீச்சுரம் தலத்துப் பதிகமாகும். குறிஞ்சிப் பண்ணில் அமைந்தது. 11 பாடல்கள் கொண்ட இப்பதிகத்தின் 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும்.

இப்பாடல்களில் சுந்தரர் சிவபெருமானைப் பலவாறு போற்றிப் புகழ்ந்து வருணிக்கிறார். அத்தகைய இறைவுடைய இடம் நறையூர்ச் சித்திச் சுரமே என்று பாடுகிறார். சான்றாக எட்டாம் பாடல் வருமாறு:

> ***"கரியின் உரியும் கலைமான மறியும்***
> ***எரியும் மழுவும் உடையான் இடம்ஆம்***
> ***புரியும் மறையோர் நிறைசொல் பொருள்கள்***
> ***தெரியும் நறையூர்ச் சித்தீச் சுரமே"***

94. "அழல்நீர் ஒழுகி" எனத் தொடங்கும் பதிகம் திருச்சோற்றுத்துறை தலத்துப் பதிகமாகும். கௌசிகப் பண்ணில் அமைந்தது. 10 பாடல்கள் கொண்டது. 10ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். சுந்தரர் இறைவனின் புகழைப் பலவாறு போற்றியும் அவன் உருவத்தை வருணித்தும், அத்தகைய இறைவன் உறையும் இடம் திருச்சோற்றுத்துறையே என்று பாடுகிறார். சான்றாக 5-ஆம் பாடல் வருமாறு:

> ***"உதையும், கூற்றுக்கு; ஒல்கா விதிக்கு***
> ***வதையும்; செய்த மைந்தன் இடம் ஆம்***
> ***திதையும் தாதம் தேனும் ஞிமிறும்***
> ***துதையும் பொன்னி-சோற்றுத்துறையே"***

95. "மீளா அடிமை உமக்கே" எனத் தொடங்கும் பதிகம் திருஆரூர் தலத்துப் பதிகமாகும். செந்துருத்திப் பண்ணில் அமைந்தது. 11 பாடல்கள் கொண்டது. இப்பாடல்களில் சுந்தரர் சிவபெருமான் தம்முடைய கண்களைப் பறித்ததோடல்லாமல், தமக்கு மற்றொரு கண்ணைத் தருவதைத் தாமதப்படுத்துகின்றாரே என்று தோழமை உணர்வுடன் இறைவனைக் கடிந்து கேட்கிறார். இறுதிப் பாடலாக "கார் ஊர் கண்டத்து" எனத் தொடங்கும் பாடலைப் பாடிய அளவில் இறைவன் சுந்தரருக்கு மற்றொரு

கண்ணையும் தந்து அருளினார். பின்னர் சுந்தரர் பரவசத்துடன் இறைவனைப் பன்முறை வணங்கிச் சென்றார். இறுதிப் பாடல் வருமாறு:

> ***"கார் ஊர் கண்டத்து எண்தோள் முக்கண் கலைகள் பல ஆகி***
> ***ஆரூரத்திரு மூலட்டானத்தே அடிப்பேர் ஆரூரன்,***
> ***பார் ஊர் அறிய, என்கண் கொண்டீர்; நீரே பழிப்பட்டீர்;***
> ***வார் ஊர் முலையாள் பாகம் கொண்டீர் வாழ்ந்து போதீரே!"***

96. "தூவாயா தொண்டு" எனத் தொடங்கும் பதிகம் பஞ்சமப் பண்ணில் அமைந்தது. திரு ஆரூர் பரவையுள் மண்டளி தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் சிவபெருமானைப் பலவாறு போற்றி, புகழ்ந்து வருணித்துப் பாடுகிறார். ஏழாம் பாடலில் தமக்குக் கண் கொண்டு காட்டி அருள வேண்டும் என்றும் வேண்டிப் பாடுகிறார். இப்பாடல் வருமாறு:

> ***"விண்டானே! மேலையார் மேலையார் மேல் ஆள***
> ***எண்தானே! எழுத்தொடு சொல் பொருள் எல்லாம் முன்***
> ***கண்டானே கண்தனைக் கொண்டிட்டுக் கட்டாயே!***
> ***அண்டானே பரவையுள் மண்டளி அம்மானே"***

ஒன்பதாம் பாடலில், சுந்தரர் தம்மைச் செடியேன் என்றும், செய்வினை நல்வன செய்யாத கடியேன் என்றும், கண்டதே காமுறும் கொடியேன் என்றும், கூறுமாறு உன் பணி கூறாத அடியேன் என்றும் தம்மை இழித்துக் கூறிக் கொள்கிறார்.

97. "ஆயன் ஆதிரையன்" எனத் தொடங்கும் பதிகம், பஞ்சமப் பண்ணில் அமைந்தது. திருநனிபள்ளி தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. 10-ஆம் பாடல்

திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் சிவபெருமானின் பண்பு நலன்களையெல்லாம் கூறி உருவத்தை வருணித்து, அத்தகைய பெருமான் விரும்பும் ஊர் நனிபள்ளியே என்று பாடுகிறார். சான்றாக நான்காம் பாடல் வருமாறு:

*"ஓடு உடையன், கலனா; உடை கோவணவன்(ன்); உமைஓர்*
*பாடு உடையன்; பலி தேர்ந்து உண்ணும் பண்பு உடையன்; பயிலக்*
*காடு உடையன்(ன்), இடமா; மலஏழும், கருங்கடல்சூழ்*
*நாடு உடை நம்பெருமான் நண்ணும் ஊர்-நனிபள்ளி அதே"*

ஏழாம் பாடலில் திருஞான சம்பந்தர்க்கு ஞான அருள் புரிந்தவன் என்று இறைவனைப் பாடுகிறார்.

98. "தண்ணியல் வெம்மையினான்" எனத் தொடங்கும் பதிகம் திருநன்னிலத்துப் பெருங்கோயில் தலத்துப் பதிகமாகும். 11-பாடல்கள் கொண்டது. 11-ஆம் திருக்கடைக்காப்புப் பாடாகும். இப்பாடல்களில் சுந்தரர் சிவபெருமானின் பண்பு நலன்களையும் அவனுடைய உருவ வருணணைகளையும் நயந்துப் பாடுகிறார். சான்றாக, ஆறாம் பாடல் வருமாறு:

*"வெண்பொடி மேனியினான், கருநீலமணி மிற்றான்*
*பெண்படி செஞ்சடையான், பிரமன் சிரம் பீடு அழித்தான்*
*பண்புஉடைநால் மறையோர் பயின்று ஏத்தி, பல்கால் வணங்கும்*
*நண்புஉடை நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே"*

99. "பிறை அணி வாள் நுதலாள்" எனத் தொடங்கும் பதிகம் திருநாகேச்சுரம் தலத்துப் பதிகமாகும். 11 பாடல்கள் கொண்டது. இப்பாடல்களில் சுந்தரர், சிவபெருமானின்

பெருமைகளையும் உருவ வருணைகளையும் வருணித்து இறைவனைப் போற்றுகின்றார். சான்றாக, ஐந்தாம் பாடல் வருமாறு:

*"அரைவிரி கோவணத்தோடு அரவு ஆர்த்து, ஒரு*
*நால்மறை நூல்*
*உரைபெருக(வ) உரைத்து, அன்று உகந்து(வ), அருள்*
*செய்ததுத் என்னே?*
*வரைதரு மா மணியும் வரைச் சந்து, அசிலோடும்,*
*திரை பொருதண்பழன திருநாகேச்சுரத்து அரனே"*

100. "தான் எனை முன் படைத்தான்" எனத் தொடங்கும் பதிகம் திருநொடித்தான் மலை தலத்துப் பதிகமாகும். 10 பாடல்கள் கொண்டது. சுந்தரர் தம்முடைய இறுதிப் பதிகமாக இப்பதிகத்தைப் பாடியுள்ளார்.

## இப்பதிகம் எழுந்த சூழல்

சுந்தரர் தம்முடைய நண்பராகிய சேர மன்னரின் வேண்டுகோளுக்கிணங்க வஞ்சி மாநகர் அடைந்து அங்கு சில நாட்கள் தங்கி இறைவன் திருப்பதிகளை வணங்கி இருந்தார். ஒருநாள் சேர மன்னர் நீராட சென்றிருந்தபோது சுந்தரர், திருக்கயிலைக்கு மீளும் நாள் வந்ததாகக் கண்டு திருவஞ்சைக்களத்துக் கோயிலைப் பணிந்த இறைவன் திருவடிகளைப் போற்றி, "தலைக்குக் தலைமாலை" என்னும் பதிகம் பாடி இவ்வுலகின் பாச வாழ்க்கையை அறுத்திட வேண்டுமென்று வேண்டினார். கயிலை நாதர் வெள்ளானை மீது சுந்தரரை ஏற்றிக்கொண்டு வருமாறு அயன் முதலிய தேவர்க்குக் கட்டளையிட, அவ்வாறே அவர்கள் திருவஞ்சைக் களத்துக் கோயிலின் முன் நின்ற நம்பி ஆரூரர்க்கு இறைவனின் கட்டளையை அறிவித்தனர். அவரும் அதனை ஏற்றுக்கொள்ள, விண்ணவர் அவரை வெள்ளை யானை மேலேற்றி ஐவகை நாதமொலிப்ப அழைத்துச் சென்றனர். இவ்வாறு தாம் யானைமீது சென்றபோது "தானெனை முன் படைத்தான்" என்னும் மேற்கண்ட பதிகம் பாடினார்[19].

இப்பாடல்களில் சுந்தரர், நொடித்தான் மலை உத்தமனானச் சிவபெருமான், இழிந்தவனாகிய தம்மையும் பொருட்படுத்தி வானோர்கள் எதிர்கொள்ள வெள்ளானை அஃருள்புரிந்த திறத்தைப் பலவாறு ஏத்திப் பாடுகின்றார். சான்றாக, நான்காம் பாடல் வருமாறு:

***வாழ்வை உகந்த நெஞ்சே! மடவார் தங்கள் வல்லினைப்பட்டு***
***ஆழமுகந்த என்னை அது மாற்றி, அமரர் எல்லாம்***
***சூழ அருள் புரிந்து(த்), தொண்டனேன் பரம் அல்லது ஒரு***
***வேழம் அருள் புரிந்தான்-நொடித்தான் மலை உத்தமனே"***

இப்பதிகத்தின் பத்தாம் பாடலில், இப்பாடல்கள் பத்தும் ஏழிசை, இன்தமிழால் இசைத்துப் பாடியன என்றும், இவற்றை திரு அஞ்சை களத்து அப்பர்க்கு அறிவிக்கும் பாடல்கள் என்றும் குறித்துள்ளார் இப்பாடல் வருமாறு:

***"ஊழி தொறு ஊழி முற்றும்(ம்) உயர்பொன் நொடித்தான் மலையை***
***சூழ் இசை இன் கரும்பின் சுவை நாவலை ஊரன் சொன்ன,***
***ஏழ் இசை இன்தமிழால் இசைந்து ஏத்திய பத்தினையும்,***
***ஆழிகடல்(ல்) அரையா! அஞ்சையப்பர்க்கு அறிவிப்பதே!"***

101. "பொன் ஆம் இதழி விரைமத்தம்" எனத் தொடங்கும் பதிகம், திருநாகைக் காரோணம் தலத்துப் பதிகமாகும். இப்பதிகம் பிற்சேர்க்கையாக, பதிப்பில் தரப்பட்டுள்ளது. காந்தாரப் பண்ணில் அமைந்தது. 11 பாடல்கள் கொண்டது. 11-ஆம் பாடல் திருக்கடைக்காப்புப் பாடலாகும். இப்பாடல்களில் சுந்தரர் திருநாகைக் காரோண தல வருணனையையும் சிவபெருமானின் பண்பு நலன்களை வஞ்சப்புகழ்ச்சியாகவும் அமைத்துப் பாடுகின்றார். சான்றாக நான்காம் பாடல் வருமாறு:

*மாண்டார் எலும்பும் கலும்பும் எலாம் மாலை ஆக*
*மகிழ்ந்து அருளி*
*பூண்தார் பொறி ஆடு அரவு ஆமை, புரம் மூன்று எரித்தீர்*
*பொருள் ஆக*
*தூண்டா விளக்கு மணிமாட வீதிதோறும் சுடர் உய்க்க*
*சேண்தார் புரிசைத் தென்நாகைத் திருக் காரோணத்து*
*இருப்பீரே!"*

சுந்தரரின் பெரும்பாலானப் பாடல்கள் சிவபெருமானின் உருவ வருணனையையும், அவ்வப்பதிகம் அமைந்த தல வருணனையும், சிவபெருமான் தன்னை ஆட்கொண்ட அருள் திறத்தையும், தோழமையுடன் கூடிய பக்தி உணர்வோடு வஞ்சப் புகழ்ச்சியாகச் சிவபெருமானின் அருளை வேண்டும் பாடல்களாகவும் திகழ்கின்றன.

சிலவகைப் பாடல்கள் மனதை முன்னிலைப்படுத்தி மக்களுக்கு அறிவுறுத்தும் பாங்கிலும் அகத்துறை அமைந்த பாடுபொருளிலும் அமைந்துள்ளன. இவற்றிற்கேற்ற வகையில் இப்பாடல்களனைத்தும் பக்திச் சுவையை வெளிப்படுத்தக் கூடிய பண்களான (இராகங்களான) நவரோசு, சங்கராபரணம், நாதநாமகிரியை, பந்துவராளி, கம்பீர நாட்டை, பௌளி, காம்போதி, ஆகிரி ஆகிய இராகங்களில் அமைந்துள்ளன. இதிலிருந்து பாடல்களின் பொருளுக்கேற்ற உணர்வுக்கேற்ற பண்அமைதி (அ) இசையமைதி சுந்தரர் பாடல்களில் மிகுதியாக இருப்பதைக் காணலாம். இத்தகைய கருத்து - இசைப் பொருத்தமே; பிற்கால இசைப் பாடல்கள் புனைந்த முத்துத் தாண்டவர், மாரிமுத்தாபிள்ளை, அருணாசலகவிராயர், இராமலிங்க சுவாமிகள் போன்ற இயலிசைப் புலவர்களுக்கு முன்னோடியாக அமைந்து செவ்விசைத்தரம் மேலோங்கிய இசைப் பாடல்களுக்கு வழிகோலின என்று கூறின் மிகையாகாது.

## குறிப்புகள்

1. வெள்ளைவாரணம், தா.ம. (ப.ஆ) 1082, **பெரியபுராணம்** என வழங்கும் திருத்தொண்டர் புராணம் (மூலம்) தடுத்தாட் கொண்ட புராணம், செய. 28-74, திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம்.
2. அங்கயற்கண்ணி, இ. 1989, **திருப்புகழ்ப் பாடல்களில் சந்தக் கூறுகள்** ப. 43
3. Shringy, R.K. and Premlatha Sharma (Editors and Trans.) 1978, Sangita Ratnkara, Vol.I, Varanasi, p.20, 21-22.
4. சுப்பிரமணியபிள்ளை, கா. 1980, **சுந்தரமூர்த்தி நாயனார் வரலாறு,** கழக வெளியீடு, சென்னை, ப. 65
5. மேற்படி நூல், பக். 61-62
6. மேற்படி நூல், ப. 70
7. மேற்படி நூல், ப. 79
8. மேற்படி நூல், ப. 66
9. வெள்ளைவாரணனார், க.1962, **பன்னிரு திருமுறை வரலாறு,** முதற்பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், ப.214
10. மேற்படி நூல், ப. 222
11. மேற்படி நூல், ப. 238
12. மேற்படி நூல், ப. 272
13. குருசாமி தேசிகர், சா. 1964, சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு **ஏழாம் திருமுறை,** தருமபுர ஆதீன வெளியீடு, ப. 63.
14. வெள்ளைவாரணனார், க.1962, **பன்னிரு திருமுறை வரலாறு** ப. 249
15. மேற்படி நூல், ப. 101
16. சுப்பிரமணிய பிள்ளை, கா, 1980, **சுந்தரமூர்த்தி நாயனார் வரலாறு** ப.68
17. மேற்படி நூல், ப. 101
18. மேற்படி நூல், பக். 138-39
19. மேற்படி நூல், ப. 140

# இயல் இரண்டு

## சுந்தரர் பதிகங்களின் பண்கள்

இனிமையான இசைத் தொடருடைய ஒலி உருவ அமைப்பைப் 'பண்' என்று கூறலாம். 'பண்ணுதல்' என்றால் இயற்றுதல் அல்லது 'செய்தல்' என்று பொருள். பணபடுத்தப்பட்ட இசையொலித் தொடர்கள் வடமொழியில் அமைந்த 'இராகம்' என்ற சொல்லோடு ஒத்தமைகிறது.

பண் என்பதற்குப் பொருளாகப் பஞ்சமரபு என்ற இசை இலக்கண நூலில்,

*"பாவோடணைத லிசையென்றார்-பண்ணென்ற*
*தோவாப் பெருந்தான மெட்டாலும் - பாவா*
*யெடுத்தல் முதலாவிரு நான்கும்*
*பண்ணிற் படுத்தமையாற் பண்ணென்று பார்"*

என்று தலை, மிடறு, நெஞ்சு, மூக்கு, இதழ், பல், நா, அண்ணம் முதலிய எட்டுத் தானங்களாலும், எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பித்தல், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு முதலிய எட்டுக் கிரியைகளாலும் பிறப்பித்து ஓசை படுத்தலாற் 'பண்' என்று பெயராயிற்று என்று பெயர்க் காரணம் கூறப்பட்டுள்ளது.

'இராகம்' என்ற சொல், மதங்கரின், ப்ருஹத்தேசி (5-ஆம் நூற்றாண்டு) என்ற வடமொழி நூலில் முதன்முதலில் காணப்படுகிறது. இவர், இராகம் என்பதன் விளக்கமாக, "அழகிய கமகங்களோடு கூடிய சுரக்கூட்டங்கள் என்றும், மக்கள் கேட்டு இன்புறும் தன்மையது" என்றும் கூறுகிறார். 'இராகம்' என்ற சொல் ஒரு சில பண்களின் பெயர்களில்

இணைப்பாகக் காணமுடிகிறது. சான்றாக, அராகம், தக்கராகம், பழந்தக்கராகம், நட்டராகம், மேகராகக் குறிஞ்சி முதலியன.

"பண்களாவன பாலை யாழ் முதலிய" நூற்றுமூன்று என்பார் திருக்குறளுக்கு உரைவகுத்த பரிமேலழகர். இந்த 103 பண்களின் பெயர்கள் சூடாமணி நிகண்டு, பிங்கல நிகண்டு முதலான நூல்களின் வாயிலாக நமக்குக் கிடைத்துள்ளன. இவை பண், பண்ணியற்றிறம், திறம், திறத்திறம் என்று நான்கு வகையாக வகைப்படுத்தப் பட்டுள்ளன. இவையே இன்று சம்பூர்ணம், ஷாடவம் ஔடவம், சுவராந்திரம் என்னும் வடமொழிப் பெயர்களால் அழைக்கப்படுகின்றன.

நூற்றுமூன்று பண்களிலும் பாடப்பட்ட தேவாரப் பாடல்கள் தற்போது நமக்குக் கிடைக்கவில்லை. தற்போது நமக்குக் கிடைத்துள்ளவை 23 பண்களே. பண்டைய இசையறிஞர்கள் ஆயிரக்கணக்கில் உருப்படிகள் இயற்றி இருப்பினும், அவையெல்லாம் 40 இராகங்களுக்குள்ளேயே அமைந்துவிட்டன. அவையும் ரக்தி இராகங்களே (உணர்வுள்ள, ஜீவனுள்ள இராகங்கள்). தற்போது நமக்குக் கிடைத்துள்ள தேவாரப் பண்களும் ரக்தி இராகங்களாகவே உள்ளமை குறிப்பிடத்தக்கது. தற்போதைய இசையிலும் 72 மேளகர்த்தா இராகங்கள் அடிப்படை இராகங்களாக இருந்தாலும், இவற்றில் 32 மேளகர்த்தா இராகங்களும் அதினின்றும் பிறந்த ஜன்னிய இராகங்களுமே பிரபலமாகப் பாடப்பட்டு வருகின்றன. மற்ற 40 மேளகர்த்தா இராகங்களும் 'விவாதி மேளங்கள்' என்று வழங்கப்பட்டு அவற்றைப் பாடுவதும் அரிதாகக் காணப்படுகின்றது. எனவே, இதிலிருந்து காலந்தோறும் பண்களைப் பாடுவதில் தேர்ச்சி பெற்றுப் பாடுவது என்பது ஓர் அரிய கலையாகவே மதித்து போற்றப்பட்டு வந்துள்ள திறம் வெளிப்படுகிறது.

இனி சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் பதிகங்களில் கையாண்டுள்ள பண்களை ஐந்து வகையாகப் பிரித்து ஆராயலாம்.

அ) சங்க நூல்களில் பல்வேறு குறிப்புகளில் இடம்பெற்றுள்ள பண்களும், சுந்தரர் பதிகங்களும்.

ஆ) காரைக்காலம்மையின் மூத்தத் திருப்பதிகப் பண்களும் சுந்தரர் பதிகங்களும்

இ) திருஞானசம்பந்தர் பாடியுள்ள பண்களில் சுந்தரர் பதிகங்கள்.

ஈ) திருநாவுக்கரசர் பாடியுள்ள பண்களில் சுந்தரர் பதிகங்கள்.

உ) சுந்தரர் மட்டுமே பாடியுள்ள பண்.

இவற்றுள் சங்க இலக்கியங்களில் பல்வேறு குறிப்புகளில் இடம் பெற்றுள்ள பண்களும், காரைக்காலம்மையின் மூத்த திருப்பதிகப் பண்களும் மட்டுமே அடிப்படையாகக் கொண்டு சுந்தரர் பதிகப் பண்ணிசை இவ்வியலில் ஆராயப்படுகிறது.

### *சங்க இலக்கியங்களில் பண்கள்*

சங்க காலத்தில் ஆம்பல் பண், காஞ்சிப் பண், காமரம், குறிஞ்சிப் பண், செவ்வழிப் பண், நைவளம், பஞ்சுரம், படுமலைப் பண், பாலைப்பண், மருதப்பண், விளரிப்பண் என்ற பதினோரு பண்கள் இருந்ததாகப் பல்வகையானச் சங்க இலக்கியக் குறிப்புக்களிலிருந்து அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களில் பண் வகுக்கப்பட்ட நூலானப் பரிபாடலுக்கு இசையமைத்தவர்கள் பாலையாழ், நோதிறம், காந்தாரம் என்னும் மூன்று பண்களில் அமைத்துள்ளனர்.[2]

காரைக்காலம்மையாரின் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டு நட்டபாடைப் பண்ணிலும், இந்தளப் பண்ணிலும் பாடப்பட்டுள்ளன.[3] மேற்கூறியவற்றுள் காமரம் (சீகாமரம்), நைவளம் (நட்டபாடை), காந்தாரம், குறிஞ்சி, இந்தளம், நோதிறம் (புறநீர்மை) ஆகிய பண்களில் சுந்தரர் பதிகங்கள் காணப்படுகின்றன.

மேற்கண்ட ஆறு பண்களிலமைந்த சுந்தரர் பாடல்களின் இசைக் கூறுகளைத் தனித்தனியே ஆராயலாம்.

### காமரம் (சீகாமரம்)

"காமரு தும்பி காமரஞ் செப்பும்" (சிறுபாண். அடி 77) என்னும் சிறுபாணாற்றுப்படை வரியில், காமரம், என்னும் இப்பண்ணைப் பற்றிய குறிப்புக் காட்டப்படுகிறது. இதனை நச்சினார்க்கினியர் "சீகாமரம்" என்று விளக்கிக் காட்டுகிறார்.[4] இஃது மருதப்பண்ணின் திறமான 'செய்திறம்' என்னும் பண்ணின் புறநிலையைச் சேர்ந்தது. இக்குறிப்பில் தும்பியின் ஒலிக்கு உவமையாக இப்பண் குறிப்பிடப்பட்டுள்ளது. "காமரு தும்பி" என்று சொல்லி இருப்பதால் இப்பண் காமநிலைக்கு உதவுவதாகக் கொள்வது பொருத்தம் என்பர் டாக்டர். ஏ.என். பெருமாள்.[5]

ஆண்டுதோறும் சென்னைத் தமிழிசைச் சங்கத்தில் நடைபெற்று வரும் பண் ஆராய்ச்சி மாநாடுகளில் சிகாமரப்பண் நாதநாமக்கிரியைக்கு நேரானது என்று முடிவெடுக்கப்பட்டுள்ளது.[6] எனவே நாதநாமக்கிரியை இராகத்திற்குரிய இலக்கணம் சீகாமரப் பண்ணிற்குப் பொருத்தமானது என்று கூறலாம்.

***சுந்தரர் சீகாமரப் பண்ணில் பாடியுள்ள பதிகங்கள் வருமாறு:***

***விடையின் மேல் வருவானை-திருவன் பார்த்தான் பனங்காட்டூர்***

*மாடமாளிகை - திருப்பனையூர்*
*நம்பினார்க்கு அருள் - திருவீழிமிழலை*
*பிழை உளன பொறுத்திடுவீர் - திருவெண்பாக்கம்*
(ஏழாம் திருமுறை 86, 87, 88,89)

திருமுறை கண்ட புராணத்தில், "காமரத்துக் கொன்றாகப் போற்றினார்" என்னும் குறிப்பிலிருந்து சுந்தரர் பதிகங்களில் காமரத்திற்கு ஒரு கட்டளை என்றறிய முடிகிறது.[7] இதனை சீகாமரப் பண்ணிலமைந்த மேற்கூறிய பதிகங்களில் முதல் வரிக்குச் சந்தக்குழிப்பு அமைத்தும், சீர் பிரித்துப் பார்த்தும் மறுபரிசீலனைச் செய்து ஆராயலாம்.

1. தனந்த னா தன தானா தானானா தன தானா
விடையின் மேல் வருவானை; வேதத்தின் பொருளானை
நிரை நேர் நேர் நிரை நேர்நேர் நேர்நேர்நேர் நிரைநேர்நேர்
புளி மாங் காய் புளி மாங்காய் தே மாங்காய் புளி மாங்காய்

இப்பாடலின் சந்த அமைப்பு: 6-6-6-6
சந்த அட்சரங்கள்: - 24
சீர் அமைப்பு மூவசைச்சீர் - 4
எழுத்துக்கள்: - 15
பாடலுக்குரிய தாளம்: ரூபகம்

2. தான தானன தான தந்தன தந்த தந்தன தந்த தந்தன
மாட மாளிகை கோபுரத்தொடு மண்டபம் வளரும்
வளர்பொழில்
நேர்நிரை நேர்நிரை நிரை நேர்நிரை நிரை
நேர்நிரைநிரை
கூவிளங் கனி கூவிளங் கனி கூ விளங் கனி கூ விளங்கனி

இப்பாடலின் சந்த அமைப்பு: -3-4-3-4-3-4-3-4
சந்த அட்சரங்கள்: -28
சீர் அமைப்பு: -4

எழுத்துக்கள்: 20
பாடலுக்குரிய தாளம்: - மிச்ர சாபு.

3. தந்த தான தைய தந்தன தான தத்தன
நம்பினார் கருள் செய்யும் அந்தணர் நால் மறைக்கிடம்
நேர்நிரை நிரை நேர் நி ரை நிரை நேர் நிரை நிரை
கூவிளங் கனி கூ விளங் கனி கூவிளங்கனி
தான தானை
ஆயவேள்வியுள்
நேர் நிரை நிரை
கூவிளங் கனி

இப்பாடலின் சந்த அமைப்பு: -3-4-3-4-3-4-3-4
சந்த அட்சரங்கள்: -28
சீர் அமைப்பு: மூவசைச்சீர் 4
எழுத்துக்கள்: 20
பாடலுக்குரிய தாளம்: - மிச்ரசாபு.

4. தன தனனந் தன த னனந் தந்தனனா தன தத்தா
பிழை உளன பொறுத் திடுவர் என்றடியேன் பிழைத் தக்கால்
நிரை நிரைநேர் நிரை நிரைநேர் நேர்நிரைநேர் நிரைநேர் நேர்
கரு விளங்காய் கரு விளங்காய் கூவிளங்காய் புளி மாங்காய்

இப்பாடலின் சந்த அமைப்பு: -6-6-6-6
சந்த அட்சரங்கள்: -24
சீர் அமைப்பு: மூவசைச்சீர் 4
எழுத்துக்கள்: - 18
பாடலுக்குரிய தாளம்: - ரூபகம்.

இவ்வாறு ஆராய்ந்ததில் பாடல்களின் ஒவ்வொரு வரியும் நான்கு மூவசைச் சீர்களைக் கொண்டமைந்துள்ளமை புலனாகும். இதன் அடிப்படையிலேயே திருமுறைகண்ட புராணத்தில் இப்பண்ணிற்கு உரிய கட்டளையாக ஒரு

கட்டளை என்றமைந்திருக்கலாம். ஆனால், சந்த முறைப்படி இரண்டு கட்டளைகள் வருகின்றன. முதற் பாடலும், நான்காம் பாடலும் ரூபக தாளத்தில் அமையுமாறும், இரண்டாம் நான்காம் பாடல்கள் சாபு தளத்தில் அமையுமாறும் உள்ளன.

ஆகவே திருமுறைகண்ட புராணத்தில் சுந்தரரின் காமரப் பண்ணிற்குக் குறிப்பிட்டுள்ள கட்டளைக்கும் சந்த முறைப்படி வருகின்ற கட்டளைக்கும் வேறுபாடு உள்ளதை அறிய முடிகிறது. சந்த அடிப்படையில் காமரப் பண்ணிற்கு இரண்டு கட்டளைகள் வருவதை இதன்மூலம் அறியலாம். சீகாமரப் பண்ணிலமைந்த சுந்தரர் பாடல்களில் ஒன்றுகூட சுரதாதளக் குறிப்புடன் நூல்களில் காணப்படவில்லை. ஆகவே, "பிழை உளன" என்னும் திருவெண்பாக்கம் தலத்துப் பதிகப் பாடலைச் சந்த முறைப்படி ரூபக தாளத்தில் இசையமைத்துக் காணலாம். இதற்குரிய சுரதாளக் குறிப்பு பின்வருமாறு:

பண்: காமரம் (சீகாமரம்) தாளம் : ரூபகம்
இராகம்: நாதநாமக்கிரியை
ஆரோசை நிசரிகமபதநி (15 ஆவது மேளகர்த்தா இராகமாகிய
அமரோசை நிதபமகரிசநி மாயாமாளவ கௌளையில்
பிறந்தது)

0 14 0 14
சரி மமமா மம மாதப பகமா கம பதபா தபபமநித தபபா
பிழை உளன பொறு திடு வர் என் றடியேன் பிழைத்தக் கால்
கமபதபா மா மகபம கரிகா சரிக ரிகம மகரீ பமகரிசா
பழி அதனைப் பா ரா. தே. படலம் எண்கண் மறைப்
பித்தாய்

(இவ்வாறே பின்வரும் வரிகளையும் பாட வேண்டும்)

குழை விரவு வடிகாதா கோயில் உளாயே என்ன
உழை உடையான் உள் இருந்து உளோம் போகீர் என்றானே

*நைவளம் (நட்டபாடை)*

"நைவளம் பழுநிய பாலை வல்லோன்" என்ற குறிஞ்சிப் பாட்டின் அடிக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர் இதனை நட்டராகம் என்று குறிப்பிட்டுள்ளார். 'நட்டராகப் முற்றுப் பெற்ற பாலையாழை இசைக்க வல்லவன்' என்பது அவருடைய விளக்கம் ஆனால் பஞ்சமரபு, பிங்கல நிகண்டு, முதலான நூல்களில் இஃது குறிஞ்சிப் பண்ணின் திறமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

> ***நைவளம் பழுநிய நயந்தெரி பாலை***
> ***கைவல் பாண்மகன் கடனறிந் தியங்க***
> (சிறுபாண்: - 36-38)

*என்ற வரிகளில் பாணன் நைவளப் பண்ணின் முறையறிந்து* இசைத்ததைக் கூறுகிறது. இவ்வாறே,

> ***"நைவளம் பூத்த நரம்பிசைச் சீர்பொய்வளம்***
> ***பூத்தன பாணா நின் பாட்டு"***
> (பரி. 18:20-21)

*என்ற வரிகள்* பாணன் யாழிசையுடன் நைவளம் பாடியதையே கம்பர், "நைவளம், நவிற்றுமொழி" என்று சீதையைக் குறிப்பிடுகின்றார். *சங்க* இலக்கியங்களிற் நைவளம் எனும் பெயரில் குறிப்பிடப்பட்ட இப்பண் நட்டபாடை என்ற பெயரில் பிங்கல நிகண்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.[9]

காரைக்காலம்மையார் இயற்றிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிங்களுள் ஒன்றான, "கொங்கைத் திரங்கி" எனத் தொடங்கும் பதிகம் நட்டபாடை பண்ணிலமைந்தது.[10]

ஆண்டுதோறும் சென்னைத் தமிழிசைச் சங்கத்தில் நடைபெற்று வரும் பண் ஆராய்ச்சி மாநாட்டில் நட்டபாடை பண்ணிற்கு நேரான இராகமாக கம்பீரநாட்டை என்று

முடிவெடுக்கப்பட்டுள்ளது.[11] எனவே கம்பீர நாட்டை இராகத்திற்குரிய இலக்கணம் நைவளப் பண்ணிற்குப் பொருத்தமானது என்று கூறலாம். நட்டபாடை பண்ணில் அமைந்த சுந்தரர் பதிகங்கள் வருமாறு:

*வாழ்வாவது மாயம் - திருக்கேதாரம்*
*மானும் மரை இனமும - திருப்பருப்பதம்*
*நத்தார் புடை ஞானன் - திருக்கேதீச்சுரம்*
*கொன்று செய்த - திருக்கழுக்குன்றம்*
(ஏழாம் திருமுறை 78, 79, 80, 81)

***கட்டளை***

**"..................ஓரிரண்டாம்**
**நன்றான சீர் நட்ட பாடைக்கு........"**

என்னும் திருமுறைகண்ட புராண வரிகளிலிருந்து சுந்தரர் பதிகங்கள் அடங்கிய நட்டபாடை பண்ணிற்கு இரண்டு கட்டளை என்றறிய முடிகிறது.12 இதனை நட்டபாடை பண்ணிலமைந்த மேற்கூறிய சுந்தரர் பதிகங்களின் முதல்வரிக்குச் சந்தக்குழிப்பு அமைத்தும், சீர் பிரித்தும் பார்த்தும் மறுபரிசீலனைச் செய்து ஆராயலாம்.

1. தா னாதன தானா தன தந்தானன தானா
வாழ் வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்
நேர்நேர்நிரை நேர்நேர் நிரை நேர்நேர்நிரை நேர்நேர்
தேமாங் கனி தேமாங் கனி தேமாங்னி தே மா

பாடலின் சந்த அமைப்பு: 4-2-4-2-6-4

சீர் அமைப்பு: மூ. ஈ. 1
எழுத்துக்கள்: - 14
பாடலுக்குரிய தாளம்: - ரூபகம் (இறுதிச் சீர் நீட்டல்)

2. தானந் தன தனனா தன தனனா தன தந்தா
மானும் மரை இனமும் மயில் இனமும் கலந் தெங்கும்
நேர்நேர் நிரைநிரை நேர்நிரை நிரைநேர் நிரை நேர்நேர்
தே மாங் கனி புளிமாங் கனி புளிமாங் கனி தே மா

இப்பாடலின் சந்த அமைப்பு: 4-2-4-2-4-2-4-2
சந்த அட்சரங்கள்: -22
சீர் அமைப்பு: மூ. 3, ஈ. 1
எழுத்துக்கள்: - 16
பாடலுக்குரிய தாளம்: - ரூபகம்

3. தத்தா தன தானா தன தானா தன தன னா
நித்தார் புடை ஞானன் பசு ஏறி நனை கவுள் வாய்
நேர்நேர் நிரை நேர்நேர் நிரை நேர் நேர் நிரை நிரை நேர்
தேமாங் கனி தேமாங் கனி தேமாங்கனி புளிமா

இப்பாடலின் சந்த அமைப்பு: 4-2-4-2-4-2-4
சந்த அட்சரங்கள்: -22
சீர் அமைப்பு: மூ. 3. ஈ. 1
எழுத்துக்கள்: - 15
பாடலுக்குரிய தாளம்: - ரூபகம் (இறுதிச் சீர் நீட்டல்)

4. தந்த தந்தன தான னா தன தை யனா
கொன்று செய்தகொ டுமை யால் பல சொல்லவே
நேர்நி ரை நிரை நேர் நிரை நிரை நேர் நிரை
கூவிளங் கனி கூவிளங் கனி கூ விளம்

இப்பாடலின் சந்த அமைப்பு: 3-4-3-4-3-2
சந்த அட்சரங்கள்: - 19
சீர் அமைப்பு: மூ-2-ஈ. 1
எழுத்துக்கள்: - 13
பாடலுக்குரிய தாளம்: - மிஸ்ரசாபு (இறுதிச் சீரில் நீட்டல்)

மேற்கண்டவற்றுள் முதல் மூன்று பதிகங்களில் மூவசை-3, ஈரசை-1 என்ற வகையிலும், நான்காம் பதிகம் மூவசை-2, ஈரசை-1 என்ற வகையிலும் அமைந்திருப்பதால் திருமுறைகண்ட புராணத்தில் இரண்டு கட்டளைகள் கொடுக்கப்பட்டுள்ளன எனக் கருதலாம். சந்த அமைப்பின்படி முதல் மூன்று பதிகங்கள் ரூபக தாளத்திலும், நான்காவது பதிகம் சாபு தாளத்திலும் ஆக இரண்டு கட்டளைகளில அமைந்திருக்கக் காணலாம்.

ஆக திருமுறைகண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள கட்டளையும், சந்த அமைப்பின் மூலம் பெறப்படுகிற கட்டளையும் சரியாக அமைந்துள்ளதை இதன் மூலம் அறியலாம்.

சுந்தரரின் நட்டபாடை பதிகங்களுள், "கொன்று செய்த" என்ற பாடல் கம்பீரநாட்டை இராகம், மிச்ரசாபு தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம் பெற்றுள்ளது[13]. இனி, "வாழ்வாவது மாயம்" என்னும் திருக்கேதாரத்தலத்துப் பதிகப் பாடலைச் சந்த முறைப்படி ரூபக தாளத்தில் அமைத்துக் காணலாம். இதற்குரிய சுரதாளக் குறிப்பு வருமாறு:

பண்: நட்டபாடை — தாளம்: ரூபகம்
இராகம்: கம்பீரநட்டை
ஆரோசை: சகமபநிச்
அமரோசை: ச்நிபமகச

| 0 14 | 0 14 |
|---|---|
| கமபா பம கமபா பம | கமகா கச கம பா |
| வாழ் வாவது மாயம் இது | மண் ணா வது திண் ணம் |
| கம பச்சச் நிக்ச்ச் பாமம | பநிபா பம கம காசா |
| பாழ்வோவது பிற விக்கடல் | பசி நோய்செய்த பறி தான் |

(இவ்வாறே பின்வரும் வரிகளையும் பாட வேண்டும்)

தாழதறம் செய்ம்மின் தடங் கண்ணான் மல ரோனும்
கீழ்மேல்உற நின்றான் திருக் கேதாரம் எனீரே
(திருக்கேதாரம் VII-78)

### காந்தாரம்

பரிபாடல் 18 முதல் 22 வரையிலான பாடல்கள் காந்தாரப் பண்ணில் இசையமைக்கப்பட்டுள்ளன. திருஞானசம்பந்தர் இப்பண்ணை, "புலனைந்தும் பொறி கலங்கி" எனத் தொடங்கும் திருவையாற்றுப் பதிகத்தில், "காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் பண்பாட" என்னும் வரியில் குறிப்பிட்டுள்ளார்[14].

ஆண்டுதோறும் சென்னைத் தமிழிசைச் சங்கத்தில் நடைபெறும் பண் ஆராய்ச்சி மாநாட்டு முடிவின்படி இப்பண்ணிற்கு நவரோசு இராகம் பொருத்தமானது என்றறிய முடிகிறது[15].

காந்தாரப் பண்ணில் சுந்தரர் பாடியுள்ள பதிகங்கள் வருமாறு:

1. யாழைப் பழித்தன்ன - திருமறைக்காடு
2. எனக்கு இனித்தினைத்தனை திரவலம்புரம்
3. கரையும் கடலும் மலையும் -. திருஆரூர்
4. மின்னும்மாமேகங்கள் திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்
5 மறைகள் ஆயின நான்கும் - திரு ஆனைக்கா.
6. பொன் அம் இதழி - திருநாகைக் காரோணம்

(ஏழாம் திருமறை 71, 72 73, 74, 75)

### கட்டளை

***"....இன்னிசை சேர் தக்கேசிப்***
***பேறிசை ஆறாக்கியதிற் காந்தாரம் பீரித்திரண்டாம்"***

என்னும் வரிகளிலிருந்து, காந்தாரப் பண்ணிற்கு இரண்டு கட்டளைகள் என்றறிய முடிகிறது[16]. இதனை இப்பதிகங்களில் முதற்பாடல் முதல் வரிக்குச் சந்தக்குழிப்பு அமைத்தும் சீர்பிரித்துக் காணுவதன் வாயிலாகவும் மறுபரிசீலனைச் செய்துக் காணலாம்.

1. தானத் தனதந்தத் தன தந்தந் தன தந்தா
   யாழைப் பழித்தன்ன மொழி மங்கை ஒரு பங்கன்
   நேர் நேர் நிரை நேர்நேர் நிரை நேர்நேர் நிரைநேர் நேர்
   தே மா புளி மாங்காய் புளி மாங்காய்

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-6-6-6
   சீர் அமைப்பு:- ஈரசை-1, மூசை-3 = 4
   சந்த அட்சரங்கள்: -22
   எழுத்துக்கள்: - 14
   பாடலுக்குரிய தாளம்: - ரூபகம் (இறுதி அட்சரம் நீட்டிப்பு).

2. தனத் தனத் தனத் தனத் தன தனந் தனந்தா
   எனக் கினி தினைத் தனை புகலிடம் அறிந்தேன்
   நிரை நிரை நிரை நிரை நிரை நிரை நிரை நேர்
   கரு விளம் கரு விளம் கரு விளம் புளி மா

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 3-3-3-3-5-5
   சீர் அமைப்பு:- ஈரசை-4
   சந்த அட்சரங்கள்: -22
   எழுத்துக்கள்: - 15
   பாடலுக்குரிய தாளம்: - ஆதி

3. தன னந் தனனந் தனனந் தானன தானன தானன தந்தா
   கரையும் கடலும் மலையும் காலையும் மாலையும் எல்லாம்
   நிரைநேர் நிரைநேர் நிரைநேர் நேர்நிரை நேர் நிரைநேர்நேர்
   புளிமா புளிமா புளிமா கூவிளம் கூவிளம் தேமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-4-4-4-4-4
சீர் அமைப்பு:- ஈரசை 6
சந்த அட்சரங்கள்: -24
எழுத்துக்கள்: - 17
பாடலுக்குரிய தாளம்: - ரூபகம் (2 ஆவர்த்தனங்கள்).

4. தன்னந் தானா தந்தந் தனந்த தனதனனா
மின்னும் மாமேகங்கள் பொழிந்து இழிந்தருவி
நேர் நேர் நேர்நேர் நேர்நேர் நிரைநேர் நிரைநிரை நேர்
தே மா தேமா தேமா புளிமா கருவிளங்காய்
தனதன தன தன தன தனந் தத்தா
வெடிபட கரை யொடும் திரை கொணர்ந் தெற்றும்
நிரை நிரை நிரை நிரை நிரை நிரை நேர் நேர்
கருவிளம் கரு விளம் கரு விளம் தே மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-4-4-4-6-4-4-4-4
சீர் அமைப்பு:- ஈ-4-மூ-1, ஈ-4 = 9
சந்த அட்சரங்கள்: -38
எழுத்துக்கள்: - 28
பாடலுக்குரிய தாளம்: - அங்கதாளம் (ஒரு ஆவர்த்தனம் ஆதி+ரூ+ஆதி).

5. தன னந் தானை தாந் தந் தத்தன தன தன தந்தா
மறைகள் ஆயின நான்கும் மற்றுள பொருள்களும் எல்லா
நிரை நேர் நேர் நிரை நேர் நேர் நேர் நிரை நிரை நிரை நேர் நேர்
புளி மா கூவிளம் தே மா கூவிளம் கரு விளம் தே மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-4-4-4-4-4
சீர் அமைப்பு:- ஈரசை-6
சந்த அட்சரங்கள்: -24
எழுத்துக்கள்: - 17
பாடலுக்குரிய தாளம்: - ($1_4$ 0 $1_4$ 0) அங்கதாளம் அல்லது ரூபகம்).

6. தந் தாந் தனனந் தன தத்தந் தந்தந் தந்தந் தனதனனா
பொன் ஆம் இதழி விரை மத்தம் பொங்கு கங்கைப் புரிசடைமேல்
நேர் நேர் நிரை நேர் நிரை நேர் நேர் நேர் நேர் நேர் நேர் நிரை - நிரை நேர்
தே மா புளிமா புளி மாங்காய் தே மா தேமா கருவிளங்காய்

சந்த அமைப்பு : 4-4-6-4-4-6
சீர் அமைப்பு:- ஈ2, மூ-1, ஈ2, மூ-1 = 6
சந்த அட்சரங்கள்: -28
எழுத்துக்கள்: - 28
பாடலுக்குரிய தாளம்: - அங்கதாளம் $1_4$ $1_3$ $1_4$ $1_3$

மேற்கண்ட ஆறு பாடல்களுள், ஐந்து வித தாள அமைப்புக்கள் உள்ளதைக் காணலாம். முதற்பாடலும், மூன்றாம் பாடலும் ரூபக தாளத்திலும், இரண்டாம் பாடல் ஆதி தாளத்திலும் இருக்கக் காணலாம். நான்காம் பாடல் அளவில் பெரியதாக உள்ளது. இப்பதிகமும், அடுத்துக் காணப்படும் இரண்டு பதிகங்களும் அங்க தாளத்தில் அமையக் காணலாம். ஆக, திருமுறைகண்ட புராணத்தில் சுந்தரரின் காந்தாரப் பண்ணிற்கு இரண்டு கட்டளை குறிப்பிடப்பட்டிருப்பினும், சந்த அமைப்பின் அடிப்படையில் பார்க்கும் போது, சுந்தரர் கையாண்ட காந்தாரப் பண்ணில் ஐந்து கட்டளைகள் அமைந்திருப்பதை இதன்மூலம் அறிந்துகொள்ளலாம். சீர் அமைப்பின் படி ஈரசைச் சீர்கள் தனித்து வருவதும், ஈரசை மூவசைச் சீர்கள் கலந்து வருவனவாகவும் இரண்டு கட்டளைகள் உள்ளன என அறியலாம் இதனடிப்படையிலேயே திருமுறைகண்ட புராணத்தில் இரண்டு கட்டளைகள் கொடுக்கப்பட்டிருப்பதாகக் கருதலாம்.

இவற்றுள், "மறைகள் ஆயின" என்னும் பாடல் நவரோசு இராகம், ஆதி தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம் பெற்றுள்ளது[17].

இனி, "எனக்கினித் தினைதனை" என்னும் திருவலம்புரம் தலத்துப் பதிகப் பாடலுக்குத் திச்ரநடை ஆதி தாளத்தில் இசையமைத்துக் காணலாம். இதன் சுரதாளக் குறிப்பு வருமாறு:

பண் காந்தாரம் தாளம்: ஆதி
இராகம்: நவரோசு

(29-ஆவது மேளகர்த்தாவான தீரசங்கராபரணத்தில் பிறந்தது)

ஆரோசை : பதநிசரிகம
அமரோசை: பமகரிசநிதப

| 4 | 0 | 0 |
|---|---|---|
| ; ககா மகா கரிகம கரிசா | ; நிசா ரிகா | சநிகரி சநிநீ |
| ; எனக் கினித் தினைத் த.னை | ; புக லிடம் | அறிந் தேன் |
| ; சரீக மா மகபம கரிசா | ; சரீகரீ | காமா ரிகா, |
| ; பனைக்கனி பழம் படும் | ; பரவையின் | கரைமேல் |
| ; மகா மபா கபா மகா | ; ரிகா மகா | கரிகம கரிசா |
| ; எனக் கினி யவன் தமர்க் | ; கினி யவன் | எழுமையும் |
| ; சரி. கரீ ரீகா கரிகா | ; கமா தபம | க ரிரீகா ; |
| ; மனக்கினி யவன் தமது | ; இடம் வலது | புர. மே. |

---

## குறிப்பு

இப்பாடலின் சந்த அமைப்புத் திச்ர நடையை உணர்த்தினாலும், இப்பாடலின் சீர் ஒரு அடி நான்கு ஈரசைச் சீர்களைக் கொண்டமைந்திருப்பதால் சதுரச்ர நடையே இதற்குரிய தாளமாக அமைகிறது. எனவே இப்பாடல் அனாகத எடுப்பு ஆதி தாளத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

### *குறிஞ்சி*

மலையும் மலையைச் சார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிலத்திற்குரிய பண் குறிஞ்சிப் பண்ணாகும்.

"வில் யாழிசைக்கும் விரலெறி குறிஞ்சி" எனவரும் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிலும், (182)

"நறுங்கா ரடுக்கத்துக் குறிஞ்சி பாடி" எனவரும் மலைபடுகடாம் குறிப்பிலும், (359)

"நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி" எனவரும் திருமுருகாற்றுப்படை குறிப்பிலும், (239)

"பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடி" எனவரும் அகநானூறு குறிப்பிலும், (102)

"உருகெழு மரபில் குறிஞ்சி பாடி எனவரும் நற்றிணை குறிப்பிலும் (256)

(சிலம்பு. 24:18)

"குறிஞ்சி பாடுமி னறும்புகை யெடுமின்" / எனவரும் சிலப்பதிகாரக் குறிப்பிலும் இப்பண் இடம் பெற்றுள்ளது.

ஆண்டுதோறும் சென்னையில் நடைபெறும் தமிழிசைச் சங்கத்தின் பண் ஆராய்ச்சி மாநாட்டில் இப்பண்ணிற்கு நேரான இராகமாக அரிகாம்போதி என்று முடிவெடுக்கப்பட்டுள்ளது.[18] சில ஓதுவார்கள் இதனைக் குறிஞ்சி இராகத்திலும் பாடுகின்றனர். எனவே அரிகாம்போதி மற்றும் குறிஞ்சி இராகத்தின் இலக்கணம் இப்பண்ணிற்கும் பொருந்தும்.

குறிஞ்சிப் பண்ணில் சுந்தரர் பாடியுள்ள பதிகங்கள் வருமாறு :

1. மடித்தாடும் அடிமைக்கண் - கோயில்

2. பாட்டும் பாடி - திரு ஒற்றியூர்
3. எற்றால் மறக்கேன் - திருப்புக்கொளியூர் அவிநாசி
4. நீரும் மலரும் நிலவும் திருநரையூர்ச் சித்தீச்சுரம்.

(ஏழாம் திருமுறை 90, 91, 92, 93)

### கட்டளை

"உற்ற இசைக் குறிஞ்சிக்கோர் இரண்டாக வருத்தமைத்து" என்னும் திருமுறைகண்ட புராண குறிப்பிலிருந்து சுந்தரர் பதிகங்கள் அடங்கிய பண்ணிற்கு இரண்டு கட்டளைகள் என்றறிய முடிகிறது[19]. இதனை இப்பதிகங்களின் முதல் வரிக்குச் சந்தக் குழிப்பு அமைத்தும் சீர் பிரித்துப் பார்த்தும் மறுபரிசீலனைச் செய்து ஆய்வு செய்யலாம்.

1. தனத் தானா தனனத் தத் தந்தனா தனனா தானானா தானா
   மடித் தாடும் அடிமைக் கண் அன்றியே மனனே நீ வாழும் நாளும்
   நிரை நேர்நேர் நிரைநேர் நேர் நேர்நிரை நிரைநேர்நேர் நேர்நேர் நேர்நேர்
   புளி மாங்காய் புளி மாங்காய் கூவிளம் புளிமாதே மாங்காய் தேமா

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு 7-6-5-4-6-4
   சீர் அமைப்பு மூ-2, ஈ2-மூ-1-ஈ1 = 6
   சந்த அட்சரங்கள்: - 32
   எழுத்துக்கள்: -19
   பாடலுக்குரிய தாளம்:- அங்கதாளம்

2. தாத்தந் தானா தனனத் தனனா
   பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
   நேர்நேர் நேர்நேர் நிரைநேர் நிரைநேர்
   தே மா தே மா புளி மா புளி மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-4-4-4
சீர் அமைப்பு: ஈரசை - 4
சந்த அட்சரங்கள்:- 16
எழுத்துக்கள்: - 10
பாடலுக்குரிய தாளம்: - ஆதி

3. தத் தா தனத் தா தனனத் தத் தந் தன தான னா
எற் றால் மறக் கேன் எழுமைக்கும்எம் பெரு மானையே
நேர் நேர்நிரை நேர் நிரைநேர் நேர்நேர் நிரை நேர்நிரை
தே மா புளி மா புளிமாங்காய் கூவிளம் கூவிளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-4-6-4-5
சீர் அமைப்பு:- ஈ-2, மூ-1, ஈ-2 = 5
சந்த அட்சரங்கள்:- 23
எழுத்துக்கள்: - 15
பாடலுக்குரிய தாளம்:- ($1_4$ $1_3$ $1_4$)- அங்கதாளம்

4. தானந் தனனா தனனந் தன னா
நீரும் மலரும் நிலவும் சடைமேல்
நேர் நேர் நிரை நேர் நிரைநேர் நிரை நேர்
தே மா புளிமா புளிமா புளி மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-4-4-4
சீர் அமைப்பு:- ஈரசை-4
சந்த அட்சரங்கள்:- 16
எழுத்துக்கள்: - 11
பாடலுக்குரிய தாளம்:- ஆதி

இதில் இரண்டாம் பாடலும் நான்காம் பாடலும் ஒரே வித அமைப்பிலும், முதற்பாடலும், மூன்றாம் பாடலும் வெவ்வேறு வித அமைப்பிலும் இருக்கக் காணலாம். சீர் அமைப்பின் அடிப்படையிலும் முதற்பாடல் 6 சீர்களைக் கொண்டும், 2,4 ஆம் பாடல்கள் 4 சீர்களிலும், 3-ஆம் 5

சீர்களைக் கொண்டும் அமைந்திருக்கக் காணலாம். ஆக மூன்று கட்டளைகள் அமைந்திருப்பதாகக் கருதலாம். எனவே திருமுறை கண்ட புராணத்தில் கொடுக்கப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கைக்கும், சந்த-சீர் அடிப்படையில் வருகின்ற கட்டளை எண்ணிக்கைக்கும், வேறுபாடு இருப்பதை இதன்மூலம் அறிய முடிகிறது.

மேற்கண்டவற்றுள், "மடித்தாடும்" என்ற பாடல் மட்டுமே அரிகாம்போதி - இராகம் - திச்ரதிரிபுடை தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம்பெற்றுள்ளது.[20] இனி, சந்த அடிப்படையில் நீரும் மலரும் நிலவும் எனத் தொடங்கும் திருநறையூர் சித்தீசுரப் பதிகப் பாடலை இசையமைத்துக் காணலாம். இப்பாடலுக்குரிய சுரதாளக் குறிப்புகள் வருமாறு:

பண்: குறிஞ்சி                    தாளம்: ஆதி
இராகம்: அரிகாம்போதி
(28-ஆவது மேளகர்த்தா இராகம்)
ஆரோசை : சரிகமபதநிச்
அமரோசை : ச்நிதபமகரிச

| 14 | 0 | 0 |
|---|---|---|
| ; பதா பாம கா மா பா | ; தநி தாபா | ம கபம ததபம |
| நீ ரும்ம லரும் | ; நில வும் | ச டை மேல் |
| கா மா மகரீ கா மா பா | ; பதா நிச்ா | நீ தா பா ; |
| ஊ ரும் அ ர வம் | ; உடை யான் | இ டம் ஆம் |
| ; பாபதநிச் ச்ா ச்ா ச்ா; | ; ரிகா ; ம்கா | க்ரி ம்ம் க்ரிசா |
| வா ரும் அரு வி | மணி பொன் | கொ ழித் து. |
| ; பத நிச்ரிச் நீ தா பா; | ; பமகரி ம க | ரிச தாநீ சா |
| சே ரும். நறை யூர் | சித்தீச் .. | . சு ர மே |

**இந்தளம்**

இப்பண் சங்க இலக்கியங்களிற் காணப்படவில்லை. காரைக்காலம்மையார் இயற்றிய திருவாலங்காட்டு திருப்பதிகங்கள் இரண்டனுள் ஒன்று இப்பண்ணில் அமைந்தது[21].

ஆண்டுதோறும் சென்னைத் தமிழிசைச் சங்கத்தில் நடைபெற்று வரும் பண் ஆராய்ச்சி மாநாட்டு முடிவின்படி, இஃது நாதநாமக்ரியை (அ) மாயாமாளவ கௌளை இராகத்திற்கு நேரானது என்றறிய முடிகிறது[22].

சுந்தரர் பாடிய முதற்பதிகமானப் "பித்தா பிறைசூடி" எனத் தொடங்கும் பாடல் இந்தளப் பண்ணிலமைந்தது என்பது குறிப்பிடத்தகுந்தது. கருநாடக இசையின் ஆரம்பப் பாட வரிசைகளும் இப்பண்ணிற்கு நேரான இராகமான மாயா மாளவ கௌளையில் அமைந்துள்ளன என்பதும் இங்கு சிந்திக்கத்தக்கவை.

இந்தளப் பண்ணின் இலக்கணம் நாதநாமகிரியை (அ) மாயா மாளவ கௌளை இராக இலக்கணத்துடன் தொடர்புடையவை என்று கூறலாம்.

இந்தளப் பண்ணிலமைந்த சுந்தரர் பாடல்கள் வருமாறு:

1. பித்தா பிறைசூடி - திருவெண்ணெய் நல்லூர்
2. கோத்திட்டையும் - திருப்பரங்குன்றம்
3. கல்வாய் அகிலும் - திருநெல்வாயில் அரத்துறை
4. தலைக்கு தலைமாலை - திருஅஞ்சைக்களம்
5. நெய்யும் பாலும் தயிரும் - திரு காந்தளின்
6. படம் கொள் நாகம் - திருவெண்காடு
7. மத்த யானை ஏறி - திரு எதிர் கொள் பாடி
8. இறைகளோடு - திருஆரூர்
9. மலைக்கும் மகள் - திருஅரிசிற் கரைப் புத்தூர்

10. தேன் நெய் புரிந்து - திருக்கச்சி அனேகதங்கா
11. திருஉடையார் - திருப்பூவனம்
12. வீழக்காலனை - திருநாட்டுத் தொகை

*கட்டளை*

"........ஈண்டிசை சேர் இந்தளத்துக் கிரண்டாக எடுத்துரைத்து" எனவரும் திருமுறைகண்ட புராணக் குறிப்பிலிருந்து இந்தளப் பண்ணிற்கு இரண்டு கட்டளைகள் என்றறிய முடிகிறது[23]. இதனை இப்பண்ணிலமைந்த பதிகங்களின் முதற்பாடல் முதல் வரிக்குச் சந்தக் குழிப்புகள் அமைத்தும், சீர்பிரித்துப் பார்த்தும் மறுபரிசீலனைச் செய்து ஆய்வு செய்யலாம்.

1. தத்தா தன தானா தன தானா தன தானா
பித்தா பிறைசூடி பெரு மானே அருளானா
நேர் நேர் நிரைநேர்நேர் நிரைநேர்நேர் நிரை நேர்நேர்
தே மா புளிமாங்காய் புளி மாங்காய் புளி மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-6-6-6
சீர் அமைப்பு:- ஈ-1, மூ-3, 3 = 4
சந்த அட்சரங்கள்:- 22
எழுத்துக்கள்: - 14
பாடலுக்குரிய தாளம்:- ரூபகம் (இறுதிச்சீர் நீட்டிப்பு)

2. தாத் தத் தன தானன தான தந்தா
கோத் திட்டையும் கோவலும் கோவில் கொண்டீர்
நேர்நேர் நிரை நேர் நிரை நேர் நி ரை நேர்
தே மாங் கனி கூவிளம் கூ வி ளங் காய்

தன தந்தன தந்தன தந்த தந்தா
உமை கொண்டுழல் கின்றதோர் கொல்லைச் சில்லை
நிரை நேர் நிரை நேர் நிரை நிரை நேர் நேர்
புளி மாங் கனி கூவிளம் கூ விளம் புளி மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 6-4-3-4-6-4-3-4
சீர் அமைப்பு:- மூ-1, ஈ-1, மூ-1, ஈ1 மூ-1 = 6
சந்த அட்சரங்கள்:- 34
எழுத்துக்கள் - 23
பாடலுக்குரிய தாளம்:- திச்ர மட்யம் (2 ஆவர்த்தனம்)
இறுதிச்சீர் நீட்டிப்பு

3. தந்தா தனனா தனனா தனனா
கல்வாய் அகிலும் கதிர்மா மணியும்
நேர் நேர் நிரை நேர் நிரை நேர் நிரை நேர்
தேமா புளி மா ப்ளி மாபுளிமா

தன தந் தனனந் தனனா தன னா
கலந் துந்தி வரும் நிவவின் கரை மேல்
நிரை நேர் நிரைநேர் நிரைநேர் நிரை நேர்
புளி மா புளிமா புளிமா புளி மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-4-4-4/4-4-4-4
சீர் அமைப்பு:- ஈரசை-4-, ஈ4, = 8
சந்த அட்சரங்கள்:- 32
எழுத்துக்கள்: - 23
பாடலுக்குரிய தாளம்:- ஆதி (2 ஆவர்த்தனம்)

4 தன தத் தன தானா தன த ன னா
தலைக்குத் தலை மாலை அணிந்த தென்னே
நிரை நேர் நிரை நேர்நேர் நிரை நி ரை நேர்
புளிமா புளிமாங்காய் கரு விளங்காய்

தன னா தந்தந் தானா தனத்தன னா
சடை மேல் கங்கை வெள்ளம் தரித்த தென்னே
நிரை நேர் நேர்நேர் நேர்நேர் நிரை நி ரை நேர்
புளி மா தே மா தே மா கரு விளங் காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-6-6/4-4-4-6
சீர் அமைப்பு:- ஈ1, மூ-2, ஈ 3, மூ-1 = 7
சந்த அட்சரங்கள்:- 34
எழுத்துக்கள்: - 24
பாடலுக்குரிய தாளம்:- அங்கதாளம் (கண்டஜம்பை + ஆதி)

5. தய்ய தான தனன தந்த தத்த தான தைய
நெய்யும் பாலும் தயிரும் கொண்டு நித்தல் பூசை செய்ய
நேர்நி ரைநேர் நிரைநிரைநேர் நிரை நேர்நேர் நேர் நி
கூ வி ளங்காய் கரு விளங்காய் புளி மாங்காய் கூவி
தத் தா
லுற் றார்
ரை நேர்
ளங் காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 3-3-3-3/3-3-3-3
சீர் அமைப்பு:- மூவகைச் சீர் - 4
சந்த அட்சரங்கள்:- 24
எழுத்துக்கள்: - 17
பாடலுக்குரிய தாளம்:- ஆதி (திச்ர நடை)

6. தனன தான தான தாத்த தான தைய தனன தாத்தா
படங்கொள் நாகம் சென்னி சேர்த்தி பாய் புலித்தோல்
அரையில் வீக்கி
நிரை நேர் நேர்நேர் நேர் நி ரைநேர் நேர் நிரைநேர்
புளிமா தேமா கூ வி ளங்காய் கூ விளங்காய்
புளிமா தேமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 3-3-3-3/3-3-3-3
சீர் அமைப்பு:- ஈ2, மூ-2, ஈ-2 = 6
சந்த அட்சரங்கள்:- 24
எழுத்துக்கள்: - 18
பாடலுக்குரிய தாளம்:- ஆதி (திச்ர நடை)

7. தத்த தான தான தந்த தான தனதானா
மத்த யானை ஏறி மன்னர் சூழ வருவீர்காள்
நேர்நிரைநேர் நேர்நேர்நேர்நேர் நேர்நேர் நிரை நேர்நேர்
கூ விளங்காய் தே மா தேமா தேமா புளி மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 3-3-3-3-3-3
சீர் அமைப்பு:- மூ-1, ஈ-3-மூ-1 = 5
சந்த அட்சரங்கள்:- 21
எழுத்துக்கள்: - 14
பாடலுக்குரிய தாளம் - (ஆதி திச்ர நடை)

8. தனன தான தனன தந்த தந்த தான தனன தான
இறைக ளோடு இசைந்த இன்பம் இன்பத்தோடு இசைந்த வாழ்வு
நிரை நிரைநேர் நி ரைநிரைநேர் நேர்நி ரைநேர் நிரை நிரை நேர்
கரு விளங்காய் கருவி ளங்காய் கூவிளங்காய் கரு விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 3-3-3-3-3-3-3-3
சீர் அமைப்பு:- மூ-4
சந்த அட்சரங்கள்:- 24
எழுத்துக்கள்: -- 19
பாடலுக்குரிய தாளம் - ஆதி (திச்ர நடை)

9.
| | | | | | |
|---|---|---|---|---|---|
| தன | தத் | தன | தந்தந் | தன | தனனா |
| மலைக்கும் | (ம்) | மகள் | அஞ்ச(ம்) | மத | கரியை |
| நிரைடே | நர் | நிரை | நேர்நேர் | நிரை | நிரை நேர் |
| புளி | மாங் | கனி.. | தே மா | கரு | விளங்காய் |

| | | | |
|---|---|---|---|
| தனனா | தனனா | தனதந் | தன னா |
| உரித்தீர் | எரித்தீர் | வருமுப் | புரங்கள் |
| நிரைநேர் | நிரைநேர் | நிரைநேர் | நிரைநேர் |
| புளி மா | புளிமா | புளி மா | புளி மா |

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 6-4-6/4-4-4-4
சீர் அமைப்பு:- மூ-1 ஈ-1 மூ-1 ஈ-4 = 7
சந்த அட்சரங்கள்:- 32
எழுத்துக்கள்: - 24
பாடலுக்குரிய தாளம் - திச்ர மட்யம்

10. தா னந் தன தன தந் தன
தேன் நெய் புரிந்து ழல் செஞ்சடை
நேர் நேர் நிரை நிரை நேர் நிரை
தே மா கரு விளம் கூ விளம்

தந் தன தானன தன தன தந் தன னா
எம் பெரு மானது இடம் திகழ் ஐங் கணைஅக்
நேர்நிரை நேர்நிரை நிரை நிரை நேர் நிரைநேர்
கூவிளம் கூவிளம் கரு விளம் கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-4-4/4-4-4-6
சீர் அமைப்பு:- ஈ3, ஈ3 மூ-1 = 7
சந்த அட்சரங்கள்:- 30
எழுத்துக்கள்: - 23
பாடலுக்குரிய தாளம் - அங்கதாளம்

11. தன தன னா தனனா தன தானா
திரு உடையார் திருமால் அயனாலும்
நிரை நிரைநேர் நிரைநேர் நிரைநேர்நேர்
கரு விளங்காய் புளிமா புளிமாங்காய்

சந்த அமைப்பு 6-4-6
சீர் அமைப்பு:- மூ-1, ஈ-1 மூ-1 = 3
சந்த அட்சரங்கள்:- 16
எழுத்துக்கள்: - 12
பாடலுக்குரிய தாளம் - திச்ர மட்யம் |3 0 |3

12. தானத் தானன தா 'னன தாந்தன தந்தனா
வீழக் காலனை கால் கொடு பாயந்தவி லங்கலான்
நேர்நேர் நேர்நிரை நேர்நிரை நேர்நிரை நிரை நேர்
தே மா கூவிளம் கூவிளம் கூவிளம் புளி மா

சந்த அமைப்பு 4-4-4-4-4
சீர் அமைப்பு:- ஈ 5
சந்த அட்சரங்கள்:- 20
எழுத்துக்கள்: - 14
பாடலுக்குரிய தாளம் - சதுரச்ரமட்யம் |4 0 |4

இதில் முதற்பாடல் ரூபகத் தாள அமைப்பிற்கும் 2, 4, 9, 11 ஆம் பாடல்கள் சித்ர தம மார்க்கத்தில் 3-2-3 என்னும் எட்டு அட்சர கால அமைப்பிற்கும், மூன்றாம் பாடல் ஆதி தாள அமைப்பிற்கும், 5,6,7,8 ஆம் பாடல்கள் திச்ர நடை ஆதி தாள அமைப்பிற்கும், பொருந்தி இருப்பதைக் காணலாம். பத்தாம் பாடலான, "தேன் நெய் புரிந்துழல்" என்ற பாடலில் அமைப்பில் சித்ரதம மார்க்கத்தில் 4-2-4-2-3 என்றவாறு 30 அட்சர காலத்தைக் கொண்டமைகின்றது. இதில் சந்த அமைப்புப்படி சதுரச்ரலகு திருதம் முதல்வரிக்கும் ஒரு சதுரச்ரலகு திருதம், திச்ரலகு இரண்டாவது வரிக்கும் அமையுமாறு உள்ளது. 12-ஆம் பாடல் சதுரச்ர மட்டிய தாள அமைப்பிற்குப் பொருந்த உள்ளது.

ஆக, சந்த அமைப்புப்படி, ஆறு கட்டளைகள் இப்பண்ணிற்கு அமைகின்றது. எனவே திருமுறைகண்ட புராணத்தில் கொடுக்கப்பட்டுள்ள கட்டளைக்கும், இதற்கும் வேறுபாடு இருப்பதை இதன் மூலம் அறியலாம்.

சுந்தரர் பாடியுள்ள முதற் பாடலானப் "பித்தா பிறைசூடி" என்ற பாடல் பதிப்புகளில் இந்தளப் பண்ணில் குறிப்பிடப்பட்டிருப்பினும், இப்பாடல் மரபு வழியாக சுரடி இராகத்திலமைந்த மெட்டில் ஓதுவார்களாலும், இசைக்

கலைஞர்களாலும் பரவலாகப் பாடப்பட்டு வந்துள்ளது. இம்மெட்டுச் சுரதாளக் குறிப்புக்களுடனும் பேராசிரியர் சாம்பமூர்த்தி பதிப்பித்துள்ள தமிழ்ப் பாட்டுக்கள் என்ற நூலில் இடம்பெற்றுள்ளது[24]. இப்பாடல், இந்தளப் பண் மாயா மாளவ கௌளை - ரூபக தாளத்தில் எம்.எம். தண்டபாணி தேசிகர் பதிப்பித்துள்ள தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் கொடுக்கப்பட்டுள்ளன[26].

இனி, திருவுடையார் என்ற திருப்பூவண தலப்பதிகப் பாடலுக்குச் சுரதாளக் குறிப்பு அமைத்துக் காணலாம்.

| \|3 | 0 | \|3 |
|---|---|---|
| சரி மக மா | மமமா | மம கம தபமக |
| திரு வுடை யார் | திருமால் | அயனா லும்.. |
| கம பத பா | பதபா | பம தா பா |
| உரு வுடை யார் | உமையா | ளைஓர் பாகம் |
| மாமக மாமா கமபத | பதபத மகரீ | தபமக மகரீரீ |
| ப.ரி வுடை யார் | அடைவார் | வினை தீர்க்கும் |
| சாசா தாபா தாமா | பதபதமகரீ | சாசா சநிரீசா |
| புரி வுடை யார் | உறைபூ .. | வணம் ஈ தோ |

## நேர்திறம் (புறநீர்மை)

சங்க கால இலக்கியங்களுள் ஒன்றானப் பரிபாடலின் 13 முதல் 17 வரையிலான ஐந்து பாடல்கள் நோதிறப் பண்ணில் இசையமைக்கப்பட்டுள்ளன[27]. இப்பண் நேர்திறமாக இருக்கலாம் என்பது சான்றோர்களின் கருத்து. 103 பண்களில் ஒன்றான நேர்திறத்திற்குரிய மாற்றுப் பெயர் புறநீர்மை.

சென்னைத் தமிழிசைச் சங்கத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் ஆராய்ச்சி மாநாட்டில் புறநீர்மைக்கு நேரான இராகமாக பௌளி இராகச் சாயலுடன் அந்தர காந்தாரத்துடன் கூடிய பூபாளம் என்று முடிவெடுக்கப் பட்டுள்ளது[28]. எனவே பூபாள இராக இலக்கணம் புறநீர்மைக்குரியது.

நேர்திறப் பண்ணிலமைந்த சுந்தரர் பதிகங்கள் வருமாறு:

1. அந்தியும் நண்பகலும் - திருஆரூர்
2. தொண்டர் அடித்தொழலும் - திருக்கானப்பேரர்
3. வடிவுடை மழுவேந்தி திருக்கூடலையாற்றூர்

(ஏழாம் திருமுறை 8,3,8,4,85)

### கட்டளை

"குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை" எனவரும் திருமுறைகண்ட புராணக் குறிப்பிலிருந்து புறநீர்மைப் பண்ணிற்கு இரண்டு கட்டளைகள் உரியவை என்றறியலாம்[29]. இதனை இப்பண்ணிலமைந்த பதிகங்களின் முதற்பாடல், முதற்வரிக்குச் சீர்பிரித்தும், சந்தக்குழிப்பு அமைத்து மறுபரிசீலனைச் செய்து ஆராயலாம்.

1. தந்தன தந் தனனா தந்த தனந் தந்தா
   அந்தியும் நண்பகலும் அஞ்சு பதம் சொல்லி
   நேர் நிரை நேர் நிரைநேர் நேர்நிரைநேர் நேர்நேர்
   கூவிளம் கூ விளங்காய் கூ விளங்காய்

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-6-6-4
   சீர் அமைப்பு:- ஈ 1, மூ-2, ஈ.1 = 4
   சந்த அட்சரங்கள்:- 20
   எழுத்துக்கள்: - 13
   பாடலுக்குரிய தாளம் - ஆதி (1 ஆவர்த்தனம்)

2. தந்தன தத் தனனா தானன தைந் தனனா
தொண்டர் (ர) அடித் தொழலும் சோதி இளம் பிறையும்
நேர்நி ரை நேர் நிரைநேர் நேர்நிரைநேர் நிரைநேர்
கூவி ளம் கூ விளங்காய் கூ விளம் கூ விளங்காய்

தானன தந் தனனா தானன தான தனா
சூதன மென் முலையாள் பாகமும் ஆகி வரும்
நேர் நிரை நேர் நிரைநேர் நேர்நிரை நேர் நிரைநேர்
கூவிளம் கூ விளங்காய் கூவிளம் கூவிளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-6-4-6-4-6-4-6
சீர் அமைப்பு:- ஈ1, மூ-1, ஈ1 மூ.1 ஈ1 மூ-1 ஈ-1 மூ.1 = 8
சந்த அட்சரங்கள்:- 40
எழுத்துக்கள்: - 28
பாடலுக்குரிய தாளம் - ஆதி (2 ஆவர்த்தனம்)

3. தன தன தன தாந்தந் தனதன தன தாத்தத்
வடி வுடை மழு வேந்தி மதகரி உரி போர்த்து
நிரை நிரை நிரை நேர்நேர் நிரை நிரை நிரை நேர்நேர்
கரு விளம் புளி மாங்காய் கரு விளம் புளி மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 4-6-4-6
சீர் அமைப்பு:- ஈ 1, மூ-1, ஈ.1, மூ-1 = 4
சந்த அட்சரங்கள்:- 20
எழுத்துக்கள்: - 16
பாடலுக்குரிய தாளம் - சாபு

மேற்கண்டவற்றுள் முதற் பாடலும், மூன்றாம் பாடலும் சாபு தாள அமைப்பிற்கும், இரண்டாம் பாடல் ஆதி தாள அமைப்பிற்கும் பொருந்தி இருக்கக் காணலாம். ஆக, திருமுறைக்கண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள கட்டளைக்கும், சந்த சீர் அமைப்பு ஆய்வின் மூலம் கிடைக்கும் கட்டளைக்கும் ஒற்றுமை காணமுடிகிறது.

எனவே சுந்தரர் கையாண்ட புறநீர்மைப் பண்ணிற்கு இரண்டு கட்டளைகளே என்பது உறுதிப்படுத்தப்படுகிறது.

மேற்கண்டவற்றுள் "அந்தியும் நண்பகலும்", "வடிவுடை மழுவேந்தி" என்னும் இரு பாடல்களும் பௌளி இராகம் மிச்ரசாபு தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம்பெற்றுள்ளன[30]. இவ்விரு பாடல்களும் ஓதுவார்களால் பரவலாகப் பாடப்பட்டு வரும் பாடல்களாகும். இனி, "தொண்டர் அடித்தொழலும்" என்னும் திருக்கானப்பேர்தலத்துப் பதிகப் பாடல் அதன் சந்த அமைப்புப்படி இசையமைத்துச் சுரதாளக் குறிப்பு இங்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

பண் : புறநீர்மை — தாளம் : ஆதி
இராகம் : பூபாளம்
ஆரோசை : சரிகபதச்
அமரோசை : ச்தபகரிச

| 4 | 0 | 0 |
|---|---|---|
| ; கா, ரிகா பாபா தாபா | கபா தபா | பகதப கபகரி |
| தொண்டர் அடித்தொழலும் | சோ.திஇ | ள-ம்-பிறையும் |
| சா-கபாதபா பகதப கபகரி | சா.சரீககா | பா பா தா பா |
| .சூ. தன மென்மு லையாள் | .பா.கமும் | ஆகிவரும் |
| ; கா. பதா ச்ாசா ச்ாச்ா | ; ச்ா, ச்சா | ச்ா, ச்சா தத |
| ; புண் டரி கப் ப ரிசாம் | ; மேனியும் | வா னவர்கள் |
| பா பதாச்சா ச்ாச்ா தாதா | பா கபா தபா | பகதப கபகரி |
| .பூ.சல் இடக் கடல் நஞ்சா | சு உண்டக | ருத்த மரும் |

(இவ்வாறே மற்ற அடிகளையும் பாட வேண்டும்)

***கொண்டல் எனத் திகழும் கண்டமும் எண் தோளும்***
***கோல நறுஞ் சடைமேல் வண்ணமும் கண்குளிரக்***
***கண்டு தொழப் பெறுவது என்று கொலோ அடியேன்***
***கார் வயல் சூழ் கானப் பேர் உறை காளையையே***

### *முடிவுரை*

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இயற்றியுள்ள 100 தேவாரப் பதிகங்களுள், காமரம், நைவளம், காந்தாரம், குறிஞ்சி, இந்தளம், புறநீர்மை, ஆகிய ஆறு பண்களில் அமைந்த 33 பதிகங்களின் இசை இவ்வியலில் ஆராயப்பட்டன. ஒவ்வொரு பதிகத்தில் முதற்பாடல் முதல் வரிக்குச் சந்தக்குழிப்பு அமைக்கப்பட்டுள்ளன. சீர்பிரித்தும் காட்டப்பட்டுள்ளன. இவற்றை ஆராயந்ததில் பாடலில் சந்த அமைப்புப்படி வருகின்ற கட்டளைக்கும், திருமுறைகண்ட புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கட்டளைக்கும் ஒரு சில பண்களில் வேறுபாடு இருப்பதை அறியமுடிகிறது. இவ்வியலில் ஆராயப்பட்ட மேற்கூறிய ஆறு பண்களில் கண்ட வேறுபாட்டினைப் பின்வருமாறு பட்டியலிட்டுக் காட்டலாம்.

| வ. எண் | பண்கள் | திருமுறைகண்ட புராணம் | இவ்ஆய்வில் பெற்றவை |
|---|---|---|---|
| 1. | காமரம் | ஒன்று | இரண்டு |
| 2. | நைவளம் | இரண்டு | இரண்டு |
| 3. | காந்தாரம் | இரண்டு | நான்கு |
| 4. | குறிஞ்சி | இரண்டு | மூன்று |
| 5. | இந்தளம் | இரண்டு | நான்கு |
| 6. | புறநீர்மை | இரண்டு | இரண்டு |

இது வரையில் நூல்களில் சுரதாளக் குறிப்புடன் வெளிவராததும் இவ்வியலில் ஆராயப்பட்ட மேற்கூறிய ஆறு பண்களில் அமைந்ததுமானக் கீழ்க்கண்ட ஆறு பாடல்களுக்கு

அவற்றின் சந்த-சீர் அமைப்பிற்கேற்றவாறு இசையமைத்துச் சுரதாளக் குறிப்பும் தரப்பட்டுள்ளன.

1. பிழை உளன - காமரம் - ரூபகம்
2. வாழ்வாவது மாயம் - நைவளம் (நட்டபாடை) - ரூபகம்
3. எனக்கினித் திளைத்தனை - காந்தாரம் - ஆதி
4. நீரும் மலரும் நிலவும் - குறிஞ்சி - ஆதி
5. திருவுடையர் - இந்தளம் - திச்ரமட்டியம்
6. தொண்டர் அடித்தொழலும் புறநீர்மை - ஆதி

## குறிப்புகள்

1. பெருமாள், ஏ.என். **தமிழர் இசை**, ப: 79.
2. சோமசுந்தரனார், பொ.வே. (ப.ஆ.) **பரிபாடல் மூலமும் உரையும்**, கழக வெளியீடு, சென்னை. 1975.
3. இராமசாமி, சு.அ. (ப.அ) **காரைக்காலம்மையார் அருளிச் செய்த திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகங்கள், பதினோராந்திருமுறை**, கழக வெளியீடு, சென்னை 1971.
4. **பத்துப்பாட்டு மூலமும் உரையும்**, தமிழ்ப் பல்கலைக்கழக நிழற்பட பதிப்பு, தஞ்சாவூர், 1985, ப. 157.
5. பெருமாள், ஏ.என். **தமிழர் இசை**, ப. 69.
6. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்**, ப. 325.
7. திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடம் வெளியீடு எண் 26, **திருமுறை கண்ட புராணம் செய்யுள் 42, வரி.4.**
8. Tamil Lexicon, Vol.IV, p.2363
9. **பிங்கலநிகண்டு**, கழகவெளியீடு, சென்னை.
10. **திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள், பதினோராந் திருமுறை**, கழக வெளியீடு, சென்னை, 1971.
11. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளினன் தொகுப்பும்**, ப. 325.
12. **திருமுறைகண்ட புராணம்**, செய்யுள் 42, வரி.2.
13. மூவர் திருமுறைப்
பாடல்கள், ப. 97.
14. முதல் திருமுறை 130:6.
15. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்**, ப. 329.
16. **திருமுறை கண்ட புராணம்**, செய்யுள் 41,
17. **மூவர் திருமுறைப் பாடல்கள்**, ப. 98.
18. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்** ப. 327.
19. **திருமுறை கண்ட புராணம்**, செய்.43, வரி-1.
20. **மூவர் திருமுறைப் பாடல்கள்**, 106.

21. திருவாலங்காட்டு மூத்திருப்பதிகங்கள், பதினோராந்திருமுறை, கழக வெளியீடு, சென்னை, 1971.
22. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும் ப.3.
23. திருமுறை கண்ட புராணம், செய் 40,
24. Sambamurti, P. Selections from Tamil Composers, p.7.
25. தண்டபாணி தேசிகர், தேவார திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ் பாடல்கள், ப. 3
26. மூவர் திருமுறைப் பாடல்கள் பக். 113-15.
27. சோமசுந்தரனார், பொ.வே. (ப.ஆ) பரிபாடல் மூலமும் உரையும், கழக வெளியீடு, சென்னை, 1975.
28. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும் ப.326
29. திருமுறைகண்ட புராணம், செய். 42 வரி. 3
30. மூவர் திருமுறைப் பாடல்கள், ப. 91

# இயல் மூன்று

# சுந்தரர் கையாண்டுள்ள பண்களும் பதிகங்களும்

இவ்வியலில் திருஞானசம்பந்தர் மற்றும் திருநாவுக்கரசர் ஆகியோர் பாடியுள்ள பண்களில் அமைந்த சுந்தரரின் பதிக இசை ஆராயப்படுகிறது. மேலும் சுந்தரர் மட்டுமே பாடியுள்ள பண்ணில் அமைந்த பதிகமும் அதன் சிறப்பம்சமும் இதிலடங்கும்.

திருஞானசம்பந்தர் பாடியுள்ள பண்களுள் பின்வருவனவற்றில் சுந்தரரும் பாடியுள்ளார்.

1. காமரம்
2. காந்தாரம்
3. குறிஞ்சி
4. இந்தளம்
5. நைவளம்
6. நேர் திறம்
7. தக்கராகம்
8. பஞ்சமம்
9. பழம்பஞ்சுரம்
10. நட்டராகம்
11. தக்கேசி
12. கொல்லி
13. காந்தார பஞ்சமம்
14. பியந்தைக்காந்தாரம்
15. கொல்லிக் கௌவாணம்

இவற்றுள் காமரம், காந்தாரம், குறிஞ்சி, இந்தளம், நைவளம், நேர்திறம் முதலிய ஆறு பண்களும் அவற்றில் அமைந்த பதிகங்களின் இசையமைதியும் முன் இயலில் ஆராயப்பட்டுள்ளன.

இனி சுந்தரர் கையாண்ட மற்ற பண்களையும் அவற்றிலமைந்த பதிகங்களையும் விரிவாகக் காணலாம்.

## *தக்கராகம்*

103 பண்முறையில் 'அராகம்' என்று கூறப்படுவது இப்பண்ணேயாகும். பிங்கலநிகண்டில் பாலைப் பெரும் பண்ணின் 'அராகம்' என்னும் திறத்தின் அகநிலையாய் இருப்பது தக்கராகம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'அராகம்' என்னும் பண்ணிற்கு அமைந்த மற்றொரு பெயர் தக்கராகமாகும். இஃது பண்ணியற்றிற வகையைச் சேர்ந்தது. ஆறிசைகளைக் கொண்டுள்ளது.[2]

தமிழ் இசைச் சங்கத்தின் பண் ஆராய்ச்சிக் கூட்ட முடிவுகளிலிருந்து தக்கராகப் பண் காம்போதி இராகத்திற்கு நேரானது என்று அறியமுடிகிறது.[3]

தக்கராகப் பண்ணில் சுந்தரர் பாடியுள்ள பதிகங்கள் வருமாறு:

1. மலை ஆர் அருவி - திருத்துறையூர்
2. வைத்தனன் தனக்கே - திருப்பாச்சிலாச்சிரமம்
3. பூண் நாண் ஆவது - திருநாட்டியத்தான்குடி
4. குரும்பை முலை - திருக்கலய நல்லூர்

## *கட்டளை*

"…. நீண்ட தக்கராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார்" எனவரும் திருமுறை கண்ட புராணக் குறிப்பிலிருந்து சுந்தரர் கையாண்ட தக்கராகப் பண்ணிற்கு இரண்டு கட்டளைகள் என்றறிய முடிகிறது.[4] இதனை இப் பண்ணிலமைந்த பதிகங்களின் முதற்பாடல் முதல் வரிக்குச் சந்தக் குழிப்பு அமைத்தும் சீர்பிரித்தும் மறுபரிசீலனைச் செய்து ஆய்வு செய்யலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | தனனா | தனனத் | தனனா | தன | தந்தந் |
| | மலையார் | அருவித் | திரள்மா | மணி | உந்தி |
| | நிரைநேர் | நிரைநேர் | நிரைநேர் | நிரை | நேர்நேர் |
| | புளி மா | புளி மா | புளி மா | புளி | மாங்காய் |

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-4-6
சீர் அமைப்பு : ஈ-3, மூ-1 மொத்தம் 4
சந்த அட்சரங்கள் : - 18
எழுத்துக்கள் : - 13
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அனாகத எடுப்பு)

2.

| | | | | |
|---|---|---|---|---|
| தையன | தனனா | தன | தன | தானா |
| வைத்தனன் | தனக்கே | தலையும் | என் | நாவும் |
| நேர் நிரை | நிரைநேர் | நிரை | நிரை | நேர்நேர் |
| கூவிளம் | புளிமா | கரு | விளம் | தேமா |

| | | | |
|---|---|---|---|
| தந்தன | தந்தந் | தந் | தந்தா |
| நெஞ்சமும் | வஞ்சம் | ஒன் | றின்றி |
| நேர்நிரை | நேர்நேர் | நேர் | நேர்நேர் |
| கூ விளம் | தேமா | தே | மாங்காய் |

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-4-4 / 4-4-6
சீர் அமைப்பு : ஈரசை 4-ஈ-2, மூ-1 - கட்டளை 7
சந்த அட்சரங்கள் : 30
எழுத்துக்கள் : 20
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அகனாகத எடுப்பு)

3. தானா தானன தனத ன தந்தா
பூணான் ஆவதோர் அரவங் கண் டஞ்சேன்
நேர்நேர் நேர்நிரை நிரைநிரை நேர்நேர்
தேமா கூவிளம் கரு விளம் தேமா
தன னா தானா தந்தன னா
புறங் காட் டாடல் கண்டிக ழேன்
நிரை நேர் நேர்நேர் நேர் நிரை நேர்
புளி மா தேமா கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு 4-4-4/4-4-6
சீர் அமைப்பு : ஈரசை - 4, ஈ - 2, மூ - 1 = 7

சந்த அட்சரங்கள் : - 30
எழுத்துக்கள் : - 20
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அனாகத எடுப்பு)

4. தன த னன தன தனன தந்த தன தந்தா
குரும்பை முலை மலர்க் குழலி கொண்டதவம் கண்டு
நிரை நிரைநேர் நிரை நிரைநேர் நேர் நிரைநேர் நேர்நேர்
கரு விளங்காய் கரு விளங்காய் கூ விளங்காய் தேமா

தன தனன தந் தனன தன தன தந் தனனா
குறிப்பினொடும் சென்றவள் தன் குணத்தினைநன் கறிந்து
நிரை நிரைநேர் நேர் நிரைநேர் நிரைநிரைநேர் நிரைநேர்
கரு விளங்காய் கூ விளங்காய் கருவிளங்காய் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 5-5-5-4/5-5-6-4
சீர் அமைப்பு : மூ-3, ஈ-1, மூ-3, ஈ-1 = 8
சந்த அட்சரங்கள் : 39
எழுத்துக்கள் : 33
பாடலுக்குரிய தாளம் : கண்டசாபு

மேற்கண்டவற்றுள் முதல் மூன்று பாடல்களின் அமைப்பு ஆதி தாளத்தில் அமையுமாறும், நான்காவது பாடல் கண்டசாபு தாளத்தில் அமையுமாறும் உள்ளது. திருமுறை கண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கையும் சந்த-சீர் அமைப்பின் மூலம் பெறப்படுகின்ற கட்டளை எண்ணிக்கையும் ஒன்றாக இருப்பதை இதன்மூலம் அறிய முடிகிறது. ஆகவே தக்கராகத்திற்கு இரண்டு கட்டளைகள் என்பது உறுதிபடுத்தப்படுகிறது.

மேற்கண்ட பதிகங்களுள், "குருன்பைமுலை", "பூணான் ஆவதோர்" ஆகிய இரண்டு பாடல்கள் சுரதாளக் குறிப்புடன் மூவா திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் வெளிவந்துள்ளன[5]. இதில் இப்பாடல்கள் அவற்றின் சந்த-

சீர் அடிப்படையிலேயே முறையே கண்டசாபு மற்றும் ஆதி தாளத்தில் இடம்பெற்றுள்ளன.

இனி மலையார் அருவி எனத் தொடங்கும் பாடல் ஆதிதாளத்தில் சுரதாளக் குறிப்புடன் இங்கு தரப்படுகிறது.

*பண்: தக்கராகம்* *தாளம்: ஆதி*

இராகம்: காம்போதி
(28 ஆவது மேளகர்த்தாவான
அரிகாம்போதியில் பிறந்தது)

ஆரோசை : ச ரி க ம ப த ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

| 4 | 0 | 0 |
|---|---|---|
| : பதாச்ா, சநிதா நீபா | : தத நீ பா | பதமக பதச்ா |
| .மலைஆர் அரு வித் | . திரள் மா | ம.ணி உந்தி |
| : பதாச்ாச் சநிதா தநிபா | தா.பதா மாக | பாதா ச்ா; |
| குலைஆரக் கொணர்ந்தெற்றி | யோர்.பெண்ணை | வ:ட.பால் |
| : மகா பதா ச்ா: ரிக்ம்க் | க்ரி. ரிக்ாம்க்ா | க்ரிக்ம் க்ரிச்ா |
| . கலைஆர் அல் குல்... | ..கன் னியர் | ஆ டும் துறை |
| ச்ா பதாக்ரீ ச்நிரிச் நிதபா | : பதா மாக | மகாபதா ச்ா |
| யூர் தலைவா உனை வேண்டிக் | கொள் வேன் | தவநெறியே |

## பஞ்சமம்

பிங்கலநிகண்டில் இப்பண் பெயர் குறிப்பிடப் பட்டுள்ளது.[6] 103 பண்களில் பாலைப் பெரும்பண்ணின் திறங்களுள் ஒன்றாகப் பஞ்சமம் என்னும் பண் குறிப்பிடப் பட்டுள்ளது. இப்பண் பண்ணியற்றிற வகையைச் சேர்ந்தது.[7]

*"பஞ்சமம் பாடியாடும் தெள்ளியார்*
*கள்ளந் தீர்ப்பார்"*

எனவரும் திருநாவுக்கரசர் குறிப்பிலிருந்து பஞ்சமப்பண் தெளிவை உண்டாக்கும் எனத் தெரிகிறது.8

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் பண் ஆராய்ச்சி மாநாட்டில் பஞ்சமப் பண்ணிற்கு நேரான இராகமாக ஆகிரி இராகம் என்று முடிவெடுக்கப்பட்டுள்ளது[9]. எனவே ஆகிரி இராக இலக்கணம் பஞ்சமப் பண்ணிற்குப் பொருத்தமானது என்று கூறலாம். பஞ்சமப் பண்ணில், சுந்தரர் பாடியுள்ள பதிகங்கள் வருமாறு:

1. தூவாயா தொண்டு திருஆரூர்ப்பரவையுள் மண்டளி
2. ஆதியன் ஆதிரையன் திருநனிபள்ளி
3. தண்இயல் வெம்மை திருநன்னிலத்துப் பெருங்கோயில்
4. பிறை அணிவாள் நுதலாள் திருநாகேச்சுரம்
5. தானெனை முன்படைத்தான் திருநொடித்தான்மலை

## கட்டளை

*. . . . தூயஇசை பஞ்சமத்துக்*
*கற்ற இசை ஒன்றாக்கி அரனருளால் விரித் தமைத்தார்*

என்னும் திருமுறைகண்ட புராண வரிகளிலிருந்து சுந்தரர் கையாண்ட பஞ்சமப் பண்ணிற்கு ஒரு கட்டளை என்று அறிய முடிகிறது.[10] இதனை, இப்பண்ணிலமைந்த பதிகங்களின் முதற்பாடல் முதல்வரிக்குச் சந்தக்குழிப்பு அமைத்தும், சீர்பிரித்தும் மறுபரிசீலனைச் செய்து ஆய்வு செய்யலாம்.

1. தானானா தானா தந் தானன தந் தந்தந்
   தூவாயா தொண்டு செய் வார்படு துக்கங்கள்
   நேர்நேர்நேர் நேர்நேர் நேர் நேர்நிரை நேர்நேர்நேர்
   தேமாங்காய் தேமா தே மாங்கனி தே மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : -6-4-6-6
சீர் அமைப்பு: மூ-1, ஈ-1, மூ-2 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 12
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (4 ஆவர்த்தனம்)

2. தானன தானனனா தன தானன தத் தனனா
ஆதியன் ஆதிரையன் அயன்மாலறி தற் கரிய
நேர் நிரை நேர்நிரைநேர் நிரைநேர்நிரை நேர்நிரைநேர்
கூவிளம் கூ விளங்காய் புளிமாங்கனி கூவிளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: மூ-3, ஈ-1, = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (4 ஆவர்த்தனம்)

3. தந்தன தந் தனனா தனனத யன தானனனா
தண்ணியல் வெம்மையினான் தலையில்கடை தோறும்பலி
நேர் நிரை நேர் நிரைநேர்நிரைநேர்நிரை நேர் நிரைநேர்
கூவிளம் கூவிளங்காய் புளிமாங்கனி கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

4. தன தன தாந்தன னா தன தானன தாந்தனனா
பிறையணி வாள்நுதலாள் உமை யாளவள் பேழ்கணிக்க
நிரை நிரை நேர் நிரைநேர் நிரை நேர்நிரை நேர் நிரைநேர்
கருவிளம் கூவிளங்காய் புளி மாங்கனி கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (4 ஆவர்த்தனம்)

5. தானன தந் தனத்தா தனதனந்ததந் தந்தனனா
தானெனை முன் படைத்தான் அதுஅறிந்துதன் பொன்னடிக்கே
நேர் நிரை நேர் நிரைநேர் நிரைநிரைநிரை நேர்நிரைநேர்
கூவிளம் கூ விளங்காய் கரு விளங்கனி கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-7-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 23
எழுத்துக்கள் : 17
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

மேற்கண்ட பாடல்கள் அனைத்தும் ரூபகதாள அமைப்பிற்கு பொருத்தமாகத் திகழ்கின்றன. எனவே திருமுறைகண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள கட்டளைக்கும் பாடல்களின் சந்த சீர் அமைப்பு ஆய்விலிருந்து பெறப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கைக்குப் பொருத்தம் இருப்பதை அறியலாம்.

இவற்றுள், "ஆதியன் ஆதிரையன்" என்னும் பாடல் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலிலும், "தானெனை முன் படைத்தான்" என்ற பாடல் தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள் என்ற நூலிலும் சுரதாளக் குறிப்புடன் இடம் பெற்றுள்ளன.[11] இவை மரபுவழி ஓதுவார்களால் பாடப் பெற்றுவரும் பாடல்களாகத் திகழ்கின்றன.

இனி, "தூரவாயா தொண்டு" எனத் தொடங்கும் திருஆரூர் பரவையுள் மண்டளி என்னும் தலத்துப் பதிகம் சுரதாளக் குறிப்புடன் இங்கு தரப்படுகிறது.

பண் : பஞ்சமம் தாளம் : ரூபகம்
இராகம் : ஆகிரி
(14-வது மேளகர்த்தாவாகிய
வகுளாபரணத்தில் பிறந்தது.)
ஆரோசை : ச ரி ச க ம ப த நி ச்
அமரோசை : ச் நி தா ப மா கா ரி ச

| | | | |
|---|---|---|---|
| 4 | 0/4 | 0/4 | 0/4 |
| சா, மா, பா, தச்ா | நீ;தாபா;பா | பதாநிநீ ச்ாச்ர்ரீநீ | ச்ா;;;;; |
| தூரவா யாதொண் | டு.. செய் | வார்படு துக்கங் | கள்..... |
| நீ, தபாநீ, ச்சா | நிச்ரிச்ச்ாரிநி,தபா | பா, பமாமா;மா | கமபம கமகரிரீ |
| கா வா யா கண் | டு....கொண் | டார் ஐவர்காக்கி | லும்..... |

(பின்வருவனவற்றை இதே முறையில் பாடவேண்டும்.)

| | | |
|---|---|---|
| நாவாயால் உன்னையே | நல்லன சொல்லுவேற் | கு |
| ஆவா என் பரவையுள் | மண்டளி அம்மா | னே. |

## *பழம்பஞ்சுரம்*

103 பண் வகைகளில் குறிஞ்சிப் பெரும்பண்ணின் திறவகைகளுள் ஒன்றான பஞ்சுரம் என்ற பெயரில் இப்பண் பிங்கலநிகண்டில் குறிப்பிடப்பட்டுள்ளது[12].

ஆறிசைகளைக் கொண்ட பண்ணியற்றிற வகையைச் சேர்ந்த இப்பண் அரும் பாலையிற் பிறந்ததாகக் கூறப்படுகிறது. பஞ்சமரபில் இப்பண் ஒலிக்குரியதாகவும், வன்மைக்குரியதாகவும், இரண்டாம் சாமத்திற் பாடுவதற்கேற்றதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது[13].

பழம்பஞ்சுரப் பண்ணிலமைந்த பாடல்களை ஓதுவார்கள் பாடும் முறையினைக் கொண்டு தற்போது இஃது சங்கராபரண இராகத்தை ஒத்தது என்று சென்னை தமிழிசைச் சங்கத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் தேவாரப் பண்ணாராய்ச்சி மாநாட்டில் முடிவாகியுள்ளது[14].

பழம் பஞ்சுரப்பண்ணில் சுந்தரர் பாடியுள்ள பதிகங்கள் வருமாறு

| | | |
|---|---|---|
| 1. காட்டூர் கடலே | - | ஊர்த்தொகை |
| 2. மற்று பற்றெனை | - | திருப்பாண்டிக் கொடுமுடி |
| 3. கொடுகு வெஞ்சிலை | - | திருமுருகன் பூண்டி |
| 4. சித்தம் நீ நினை | - | திருப்புனவாயில் |
| 5. பத்திமையும் அடிமை | - | திருஆரூர் |
| 6. முத்தாமுத்தி தரவல்ல | - | திருஆலங்காடு |
| 7. மருஆர் கொன்றை | - | திருக்கடவூர் மயானம் |

***கட்டளை***

"...... மிகுந்த பழம் பஞ்சுரத்துக்(கு) ஏறும் வகை இரண்டாக்கி" எனவரும் திருமுறைகண்ட புராண குறிப்பிலிருந்து பழம் பஞ்சுரத்திற்கு இரண்டு கட்டளைகள் உள்ளன என அறியலாம்.[15] இதனை இப்பதிகங்களிலமைந்த முதற்பாடல் முதல் வரிக்குச் சந்தக் குழிப்புகள் அமைத்தும், சீர் பிரித்துப் பார்த்தும் மறுபரிசீலனைச் செய்து ஆய்வு செய்யலாம்.

1. தாத்தா தனனா தனனா தனனா தானத் தானானா
   காட்டூர் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
   நேர்நேர் நிரைநேர்நிரைநேர் நிரைநேர் நேர்நேர்நேர் நேர் நேர்
   தேமா புளிமா புளிமா புளிமா தேமா தேமாங்காய்

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-4-4-4-6
   சீர் அமைப்பு: ஈ-5, மூ-1 = 6

சந்த அட்சரங்கள் : 26
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அனாகத எடுப்பு)

2. தத்த தத் தன தந்த தந்தன தானனா தன தானனா
மற்று பற் றெனக் கின்றி நின்திரு பாதமே மனம் பாவித்தேன்
நேர்நி ரை நிரை நேர்நி ரைநிரை நேர்நிரை நிரை
நேர்நேர்நேர்
கூவிளங் கனி கூவிளங்கனி கூவிளங் கனி தேமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-3-4-3-4-5
சீர் அமைப்பு: மூவசை-4
சந்த அட்சரங்கள் : 26
எழுத்துக்கள் : 18
பாடலுக்குரிய தாளம் : மிச்ரசாபு (4 ஆவர்த்தனம்)

3. தனன தந் தன தனன தானன தனன தானந் தானா
கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவ லாமை சொல்லி
நிரைநி ரை நிரை நிரைநி ரைநிரை நிரைநி ரைநேர் நேர்நேர்
கரு வி ளங் கனி கருவிளங் கனி கரு விளங்காய் தேமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-3-4-3-4-4
சீர் அமைப்பு: மூவசை-4, ஈ-1 = 4
சந்த அட்சரங்கள் : 25
எழுத்துக்கள் : 19
பாடலுக்குரிய தாளம் : மிச்ரசாபு (4 ஆவர்த்தனம்)

4. தத்த தானன த(ந்)தன தா னன தானனா
சித்தம் நீ நினை என்னொடு சூள் அறு வைகலும்
நேர் நிரை நிரை நேர்நிரை நேர் நிரை நேர் நிரை
கூவிளங் கனி கூவிளம் கூவிளம் கூவிளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-3-4-5
சீர் அமைப்பு: மூவசை-1, ஈ-3 = 4
சந்த அட்சரங்கள் : 19
எழுத்துக்கள் : 14
பாடலுக்குரிய தாளம் : மிச்ரசாபு (3 ஆவர்த்தனம்)

5. தத்ததை யா தனன தையா தைய தானா தான னா
பத்திமை யும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்
நேர்நிரை நேர் நிரைநிரைநேர் நேர்நிரைநேர் நேர்நேர்நேர்
கூவிளங்காய் கரு விளங்காய் கூவிளங்காய் தேமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-3-4-3-3-5
சீர் அமைப்பு: மூவசை-4
சந்த அட்சரங்கள் : 25
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : மிச்ரசாபு

6. தத்தா தான தனதையா தன தந் தன னா தன தந்தா
முத்தா முத்தி தரவல்ல முகிழ் மென் முலையாள் உமைபங்கா
நேர்நேர் நிரை நிரைநேர்நேர் நிரை நேர் நிரைநேர் நிரை நேர் நேர்
தேமாங் கனி புளிமாங்காய் புளி மா புளி மா புளிமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 6-5-4-4-6
சீர் அமைப்பு: மூவசை-2, ஈ-2, மூ-1, = 5
சந்த அட்சரங்கள் : 25
எழுத்துக்கள் : 18
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

7. தனனா தத்தா தன தானா தானத்தத்தத் தன தானா
மருஆர் கொன்றை மதி சூடி மாணிக்கத்தின் மலைபோல

நிரைநேர் நேர்நேர் நிரைநேர்நேர் நேர்நேர்நேர்நேர்
நிரைநேர்நேர்
புளிமா தே மா புளிமாங்காய் தே மா தேமா புளிமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-6-8-6
சீர் அமைப்பு: ஈ-2, மூ-1, ஈ-2, மூ-1, = 6
சந்த அட்சரங்கள் : 28
எழுத்துக்கள் : 17
பாடலுக்குரிய தாளம் : ஆதி

மேற்கண்டவற்றுள் முதற்பாடலும், 7ம் பாடலும் ஆதி தாளத்தில் அமையுமாறும், ஆறாம் பாடல் ரூபகத் தாளத்திற்கும் மற்ற பாடல்கள் மிச்ரசாபு தாளத்திற்குப் பொருத்தமாகவும் அமைந்திருப்பதைக் காணலாம். எனவே திருமுறைகண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கையும், மேற்கண்ட சந்த-சீர் அமைப்பின் மூலம் பெறப்படுகின்ற கட்டளை எண்ணிக்கையும் சிறிது வேறுபடுவதை அறியலாம். சந்த-சீர் அமைப்பின்படி 3 கட்டளைகள் வருகின்றன.

மேற்கண்டவற்றுள், "மற்றுப் பற்றெனக்கு" என்னும் பாடல் சங்கராபரணம் ஆதி தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலிலும், இதே பாடல் தோடி-ரூபக தாளத்தில் பேராசிரியர் சாம்பமூர்த்தி பதிப்பித்த நூலிலும் இடம்பெற்றுள்ளது. இப்பாடலைத் தவிர, "கொடுகு வெஞ்சிலை" என்ற பாடல் சங்கராபரணம்-மிச்ரசாபு தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் இடம் பெற்றுள்ளது. பத்திமையும் அடிமையையும் எனத் தொடங்கும் திருஆரூர் பதிகப் பாடல் தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள் என்ற நூலிலும், இதே பதிகத்தின் பத்தாம் பாடலான, "ஏழிசையாய் இசைப் பயனாய்" எனத் தொடங்கும் பாடல் சங்கராபரணம் திச்ர-

திரிபுடை தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் இடம் பெற்றுள்ளது[16].

இனி, "மருஆர் கொன்றை" எனத் தொடங்கும் பாடலைச் சுரதாளக் குறிப்புடன் அமைத்துக் காணலாம்.

பண் : பழம் பஞ்சுரம் தாளம் : ஆதி
இராகம் : சங்கராபரணம்
(29வது மேள இராகம்)

ஆரோசை : சரி$_2$ க$_2$ ம$_1$ பத$_2$ நி$_2$ ச
அமரோசை : ச்நித பமகரிச

| 4 | 0 | 0 |
|---|---|---|
| ;கமாகரீ சாசா சாச | ; சசா கரீ | சாசநி தநிபா |
| .மருஆர் கொன்.றை | .மதி கு. | டி. . . . . |
| ; சாசாபா பபமக காமரி | ; கமா பதப | பா ; ; ; |
| . மா.ணிக் கத்.தின். | . மலை போ. | ல . . . |
| ; தபமகமா பாதா நீச்ா | ; ச்ா, ரிச்ா | ச்ாதா நீச்ா |
| . வருவார் விடை மேல் | . மா தொடு | மகிழ்ந் து |
| ; பா, க்ரீ ச்நிதப தநிச்ரி | ; ச்ா நிதபம | காமப கரிசா |
| .பூ. தப் ப...டை.... | .கு . . . . | ழ . . . . . . |

(மற்ற அடிகளையும் இதே முறையில் பாட வேண்டும்.)

திருமால் பிரமன் இந்திரற்கும் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமான் அடிகளே

## நட்டராகம்

இப்பண் 103 பண்களுள் குறிஞ்சியாழ்த் திறன் வகைகளுள் ஒன்றாகக் குறிப்பிடப்பட்டுள்ளது[17]. செவ்வழிப் பாலையில் பிறந்த இப்பண் பண்ணியற்றிற வகையைச்

சேர்ந்தது. இஃது வெளிப்படும் பண்களுள் ஒன்றாகவும், தமிழ்ப் பெயர் நெறிக்குரியதாகவும், இரண்டாம் சாமத்திற் பாடுதற்கேற்றதாகவும் பஞ்சமரபில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் தேவாரப் பண்ணாராய்ச்சி மாநாடுகளில் இப்பண் காமவர்த்தினி இராகத்தின் நேரான இராகமாக முடிவாகியுள்ளது[19]. எனவே காமவர்த்தினி இராக இலக்கணம் இப்பண்ணிற்குப் பொருத்தமாகும்.

நட்டராகப் பண்ணிலமைந்த சுந்தரர் பாடல்கள் வருமாறு:

1. கோவலன் நான்முகன் - திருநாவலூர்
2. மூப்பதும் இல்லை - திருவேள்விக்குடி
3. அற்றவனார் - திருநின்றியூர்
4. நீள நினைந்தடியேன் - திருக்கோளிலி
5. நொந்தா ஒண்சுடரே - திருக்கச்சிமேற்றளி
6. முன்னவன் எங்கள் பிரான் - திருப்பழமண்ணிப் படிக்கரை
7. செடியேன் தீவினையில் - திருக்கழிப்பாலை
8. பொன் ஆர் மேனியனே - திருமழபாடி
9. பொன் செய்த மேனியினீர் - திருமுதுகுன்றம்
10. செண்டு ஆடும் விடையாய் - திருக்காளத்தி
11. விடைஆரும் கொடியாய் - திருக்கற்குடி
12. பொடிஆர் மேனியனே - திருக்கடவூர் வீரட்டம்
13. இத்தனை யாமாற்றை - திருக்குருகாவூர் வெள்ளடை
14. சிம்மாந்து சிம்புளித்து - திருக்கருப்பறியலூர்

### *கட்டளை*

"கூறிரிய நட்ட ராகத்திரண்டு" எனவரும் திருமுறை கண்ட புராணக் குறிப்பிலிருந்து நட்டராகத்திற்கு இரண்டு கட்டளைகள் என்றறிய முடிகிறது[20]. இதனை நட்டராகப் பண்ணிலமைந்த பதிகங்களின் முதற்பாடல் முதல் வரிக்கு

சந்தக்குழிப்பு அமைத்தும், சீர் பிரித்தும் மறுபரிசீலனைச் செய்து ஆய்வு செய்யலாம்.

1. தானன தாந்தன தானன தானந் தத் தானந்தானா
   கோவலன் நான்முகன் வானவர் கோனும் குற் றேவல் செய்ய
   நேர் நிரை நேர் நிரைநேர்நிரை நேர்நி ரை நேர்நிரைநேர்
   கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-4-4-6-5
   சீர் அமைப்பு: ஈ-4, மூ-1, = 5
   சந்த அட்சரங்கள் : 26
   எழுத்துக்கள் : 16
   பாடலுக்குரிய தாளம் : திச்ர ஏகம் (அ) ரூபகம் (திச்ரகதி) (3 ஆவர்த்தனம்)

2. தாத்தன தானந் தனத்தன தானந் தன(த்) தனனா
   மூப்பதும் இல்லை பிறப்பதும் இல்லை இறப் பதில்லை
   நேர் நிரை நேர்நேர் நிரை நிரை நேர்நேர்நிரை நிரை நேர்
   கூவிளம் தேமா கருவிளம் தேமா கரு விளங்காய்

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-4-4-6
   சீர் அமைப்பு: ஈ-4, மூ-1, = 5
   சந்த அட்சரங்கள் : 22
   எழுத்துக்கள் : 16
   பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

3. தத்தன னா தனனா தனனா தானன தந்தன னா
   அற்றவ னார் அடியார் தமக்கு ஆயிழை பங்கினர் ஆம்
   நேர்நிரைநேர் நிரைநேர் நிரைநேர் நேர்நிரை நேர்நிரைநேர்
   கூவிளம் கூவிளம் கூ விளங்காய் கூவிளம் கூ விளங்காய்.

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-4-4-6
சீர் அமைப்பு: ஈ-2, மூ-1, ஈ-1, மூ-1, = 5
சந்த அட்சரங்கள் : 24
எழுத்துக்கள் : 17
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

4. தான தனந் தனனா தன தத்தன தா னன னா
நீள நினைந்தடியேன் உமை நித்தலும் கை தொழுவேன்
நேர்நேர் நிரை நிரைநேர்நிரை நேர்நிரைநேர் நிரைநேர்
தே மா கரு விளங்காய் புளி மாங்கனி கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-3-4-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3, = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

5. தந்தா தந் தனனா தனனா தனந் தனனா
நொந்தா ஒண் சுடரே நுனையே நினைந் திருந்தேன்
நேர்நேர் நேர் நிரைநேர் நிரைநேர் நிரை நிரைநேர்
தே மா கூ விளங்காய் புளி மா கரு விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-4-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-1, ஈ-1, மூ-1 = 4
சந்த அட்சரங்கள் : 20
எழுத்துக்கள் : 14
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

6. தந்தன தந்தனனா தன தாந்தன தான தனா
முன்னவன் எங்கள்பிரான் முதல் காண்பரி தாய பிரான்
நேர் நிரை நேர்நிரைநேர் நிரைநேர்நிரை நேர் நிரைநேர்
கூவிளம் கூவிளங்காய் புளி மாங்கனி கூ விளங்காய்.

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

7. தன னா தா னனனா தன்தானத் தந்தானா
செடியேன் தீவினையில் தடுமாறக் கண்டாலும்
நிரைநேர் நேர்நிரைநேர் நிரைநேர்நேர் நேர்நேர்நேர்
புளிமா கூ விளங்காய் புளிமாங்காய் தே மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 14
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

8. தன் னா தா னன னா தன த் தான தனத் தனனா
பொன் னார் மேனிய னே புலித் தோலை அரைக்கசைத்து
நேர் நேர் நேர்நிரைநேர் நிரை நேர்நேர் நிரை நிரைநேர்
தே மா கூ விளங்காய் புளி மாங்காய் கரு விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-5-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 21
எழுத்துக்கள் : 15
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ரம்)

9. தன் ன(ந)ன தானன னா தன தான தன தன னா
பொன் செய்த மேனியி னீர் புலித்தோலை
அரைக்கசைத்து
நேர் நிரை நேர் நிரைநேர் நிரைநேர்நேர் நிரைநிரைநேர்
கூ விளம் கூ விளங்காய் புளிமாங்காய் கருவிளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-5-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 21
எழுத்துக்கள் : 15
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ரம்)

10. தந் தானந் தன னா தனனா தந் தன தனனா
செண்டாடும் விடையாய் சிவனே என் செழுஞ் சுடரே
நேர்நேர்நேர் நிரை நேர் நிரைநேர்நேர் நிரைநிரைநேர்
தே மாங்காய் புளி மா புளிமாங்காய் கரு விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 6-4-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-1, மூ-2 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 15
பாடலுக்குரிய தாளம் : ரூபக தாளம் (திச்ரம்)

11. தன தா தந் தன னா தன தா னன தந் தனனா
விடை ஆரும் கொடியாய் வெறிஆர் மலர்க்
கொன்றையினாய்
நிரை நேர் நேர்நிரைநேர் நிரைநேர் நிரை நேர் நிரைநேர்
புளி மா கூ விளங்காய் புளிமாங் கனி கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

12. தன னா தான னனா தன தாந் தன தா தனனா
பொடிஆர் மேனியனே புரி நூல் ஒரு பால் பொருந்த
நிரைநேர் நேர்நிரைநேர் நிரைநேர்நிரை நேர் நிரைநேர்
புளி மா கூவிளங்காய் புளி மாங் கனி கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 16
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் (திச்ர நடை)

13. தத்தன தானானா தனந்தனா தந் தன னா
இத்தனை யாமாற்றை அறிந்திலேன் எம்பெருமான்
நேர் நிரை நேர்நேர்நேர் நிரைநிரை நேர்நிரைநேர்
கூவிளம் தேமாங்காய் கருவிளம் கூ விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-3 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 14
பாடலுக்குரிய தாளம் : ரூபகம் திச்ரநடை ( 4 ஆவர்த்தனம்)

14. தந்தான தந்தனனை தந்ததன தத்தனன
சிம்மாந்து சிம்புளித்து சிந்தையினில் வைத்துகந்து
நேர்நேர்நேர் நேர்நிரைநேர் நேர்நிரைநேர் நேர்நிரைநேர்
தேமாங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்

| | |
|---|---|
| தனனா | தானா |
| திறம்பா | வண்ணம் |
| நிரை நேர் | நேர் நேர் |
| புளிமா | தே மா |

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 5-5-5-5-4-4
சீர் அமைப்பு: மூ-4, ஈ-2
சந்த அட்சரங்கள் : 28
எழுத்துக்கள் : 20
பாடலுக்குரிய தாளம் : கண்டசாபு

"ஊன் ஆய்உயிர் புகல் ஆய்" எனத் தொடங்கும் பதிகம் தேவாரப் பண்முறை பதிப்பில் பண்நட்டபாடை பதிகங்களுக்குப் பின்னர் நட்டராகப் பண் என்ற குறிப்புடன் தரப்பட்டுள்ளது. அப்பதிகத்தின் சந்தக் குழிப்பும் சீர் அமைப்பும் வருமாறு.

15. தா னா தன தன னா தன தன னா தன தனனா
ஊன் ஆய் உயிர் புகல்ஆய் அகலிடம் ஆய்
நேர் நேர் நிரை நிரைநேர் நிரைநிரைநேர் நிரைநிரைநேர்
தே மா கரு விளங்காய் கரு விளங்காய் கரு விளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6-6
சீர் அமைப்பு: ஈ-3, மூ-1 = 4
சந்த அட்சரங்கள் : 22
எழுத்துக்கள் : 17
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

மேற்கண்ட பதிகங்களுள் 1 முதல் 13 வரையிலானப் பதிகங்கள் மற்றும் 15ஆம் பதிகம் ரூபகத் தாளத்தில் பாடுவதற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளன. சந்த அடிப்படையில் எட்டு அட்சரங்கள் 12 அட்சரங்கள் நிரவி திச்ர நடையில் பாடுவதற்கேற்ற வகையில் அமைந்திருப்பது இப்பதிகங்களின் சிறப்பம்சமாகும். 14ஆம் பதிகமான "சிம்மாந்து சிம்புளித்து" எனத் தொடங்கும் பதிகம் கண்டசாபுதாளத்திற்குப் பொருந்தியுள்ளது. ஆக, திருமுறைகண்ட புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கையும், பதிகங்களின் சந்தசீர் அமைப்பின் அடிப்படையில் பெறப்படுகின்ற கட்டளை எண்ணிக்கையும் ஒத்து அமைந்திருப்பதை இதன்மூலம் அறியலாம்.

இனி "சிம்மாந்து சிம்புளித்து" எனத் தொடங்கும் திருக்கருப்பறியலூர்த் தலத்துப் பதிகப் பாடல் சுரதாளக்குறிப்புடன் ஈண்டு தரப்படுகிறது.

பண் : நட்டராகம் தாளம் : கண்டசாபு

இராகம் : காமவர்த்தனி

(51வது மேளகர்த்தா இராகம்)

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்

அமரோசை : ச் நி த ப ம க ரி ச

| 5 | 5 | 4 |
|---|---|---|
| ;கா மா ; பா | பா ; பா தா பா | ; பா தா நீதா |
| .சிம் மாந் து | சிம் பு ளி த்து | .சிந்தை யினில் |
| பம கரி கம பாபா | ; த பா தா, நீ | ச்சா ; ; ; ; |
| வைத் துகந் து | . திறம் பா வண் | ணம் . . . . |
| ;ச்ரீ ச்சா, நீ | நீச்சா ரீ ச்சா ச்சா | ; த நீச் ச்சாரீ |
| .கைம் மாவின் | உரி வைபோர்த் | துமைவெருவ |
| ச்சா;ச்சா;நிச்ரிச் | ரீ தநீச்சா நிதா | பமகரி கமகா..ரீ |
| கண்டா னை.... | .கருப் பறிய | லூர் . . . . |

(இவ்வாறே மற்ற அடிகளையும் பாட வேண்டும்)

கொய்ம்மாவின் மலர்ச்சோலை குயில்பாட
மயில்ஆடும் கொகுடிக்கோ யில்
எம்மானை மனத்தினால் நினைந்தபோது அவர் நமக்கு
இனிய ஆறே.

மேற்கண்ட பாடல்களுள் "முன்னவன் எங்கள் பிரான்" என்ற பாடலும், "பொன்னார் மேனியனே" என்ற பாடலும் காமவர்த்தினி இராகம் ரூபகத் தாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் கொடுக்கப்பட்டுள்ளன. "பொன்னார் மேனியனே" என்ற பாடல் சங்கராபரணம், ரூபகத் தாளத்தில் பேராசிரியர் சாம்பமூர்த்தி பதிப்பித்த நூலில் சுரதாளக் குறிப்புடன் தரப்பட்டுள்ளது. "இத்தனை யாமாற்றை" என்ற பாடல் பந்துவராளி இராகம், கண்டசாபு தாளத்தில் தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் கொடுக்கப்பட்டுள்ளது.[21]

### தக்கேசி

103 பண்களுள், இப்பண் "நீவிர்" என்னும் பெயரில் காணப்படுகின்றது. மருதயாழ்த் திறங்களுள் ஒன்று[22] கோடிப் பாலையில் பிறந்தது. பண்ணியற்றிற வகையைச் சேர்ந்தது. பஞ்சமரபில், இப்பண், "வெளிப்படும் பண்களுள் ஒன்று" எனவும், "ஆரியம், தமிழ் ஆகிய இருபாற்குமுரியது" எனவும், "தக்கேசியொப்பது காம்போதி" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது[23].

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெற்று வரும் தேவாரப் பண்ணாராய்ச்சி மாநாடுகளிலும் இப்பண் தற்போதைய காம்போதி இராகத்திற்கு நேரானது என்று முடிவாகியுள்ளது[24]. எனவே காம்போதி இராக இலக்கணம் இப்பண்ணிற்குப் பொருத்தமாகும்.

தக்கேசிப் பண்ணில் அமைந்த சுந்தரர் பாடல்கள் வருமாறு

| | | |
|---|---|---|
| 1. அழுக்கு மெய் கொடு | - | திருஒற்றியூர் |
| 2. அந்தனாளன் உன் | - | திருப்புன்கூர் |
| 3. ஊர்வது ஓர் விடை | - | திருநீடுர் |
| 4. தலைக்கலன் தலைமேல் | - | திருவாழ்கொளிபுத்தூர் |
| 5. சாதலும் பிறத்தலும் | - | திருக்கழுமலம் |
| 6. பொன்னும் மெய்ப்பொருளும் | - | திருஆரூர் |
| 7. கழுதை குங்குமம் தான் | - | திருஇடைமருதூர் |
| 8. ஆலம் தான் உகந்து | - | திருக்கச்சி ஏகம்பம் |
| 9. புற்றில் வாள் அரவு | - | திருக்கோலக்கா |
| 10. மெய்யை முற்றப் பொடி | - | நம்பி என்ற திருப்பதிகம் |
| 11. நீறு தாங்கிய | - | திருத்தினை நகர் |
| 12. திருவும் வண்மையும் | - | திருநின்றியூர் |
| 13. மறையவன் ஒருமாணி | - | திருஆவடுதுறை |
| 14. ஊன் அங்கத்து | - | திருவலிவலம் |

15. செம்பொன்மேனி - திருநள்ளாறு
16. திருவும் மெய்ப் பொருளும் - வடதிருமுல்லைவாயில்
17. கங்கைவார் சடையாய் - திருஆவடுதுறை

## கட்டளை

"... இன்னிசை சேர் தக்கேசிப் பேரிசை யாறாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம்" எனவரும் திருமுறைகண்ட புராணக் குறிப்பிலிருந்து பண் தக்கேசிக்கு நான்கு கட்டளைகள் என்றறிய முடிகிறது[25]. இதனைத் தக்கேசிப் பண்ணிலமைந்த பதிகங்களின் முதற் பாடல் முதல் வரிக்கு சந்தக் குழிப்பு அமைத்தும், சீர் பிரித்துக் காண்பதன் மூலமும் மறுபரிசீலனைச் செய்து ஆராயலாம்.

1. தன(த்)த தை யன தனதன தன னா
அழுக்கு மெய் கொடுன்திருவடி அடைந் தேன்
நிரைநேர் நேர் நிரை நிரைநிரைநிரை நேர்
புளிமா கூ விளம் கருவிளம் புளி மா

தனன தா னன தானன தந் தானா
அதுவும் நான் படப் பாலது ஒன் றானால்
நிரைநேர்நேர் நிரை நேர்நிரை நேர் நேர்நேர்
புளிமா கூ விளம் கூவிளம் தே மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-4-4/3-4-4-6
சீர் அமைப்பு: ஈ-4, ஈ-3, மூ-1, = 8
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 25
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அனாகத எடுப்பு)2 ஆவர்த்தனம்

2. தந்த் தா ன ன தன தன தனனா
அந்த ணாளன் உன் அடைக் கலம் புகுத
நேர்நேர் நேர் நிரை நிரை நிரை நிரைநேர்
தே மா கூ விளம் கரு விளம் புளிமா

தனனத் தாத்தன தானன தானா
அவரைக் காப்பது காரணம் ஆக
நிரைநேர் நேர்நிரை நேர்நிரை நேர்நேர்
புளிமா கூவிளம் கூவிளம் தேமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-4-4/3-4-4-4
சீர் அமைப்பு: ஈ-8
சந்த அட்சரங்கள் : 30
எழுத்துக்கள் : 23
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அனாகத எடுப்பு)

3. தா ன தா னன தந்தன தானா
ஊர் வ தோர் விடை ஒன்றுடை யானை
நேர் நேர் நேர் நிரை நேர்நிரை நேர்நேர்
தே மா கூ விளம் கூவிளம் தேமா

தந் தன தனத் தந் தன தானா
ஒண் நுதல் தனிக்கண் நுதலா னை
நேர் நிரை நிரை நேர் நிரை நேர் நேர்
கூவிளம் புளிமா புளிமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-4-4/4-4-6
சீர் அமைப்பு: ஈ-4, ஈ-2, மூ-1, = 7
சந்த அட்சரங்கள் : 29
எழுத்துக்கள் : 20
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அனாகத எடுப்பு)

4. தன தன தன னா தன(த்) தானா
தலைக் கலன் தலை மேல் தரித் தானை
நிரை நிரை நிரை நேர் நிரை நேர் நேர்
கரு விளம் புளி மா புளி மாங்காய்

தந்தந் தந்தந் தனத்தத் தன தானா
தன்னை என்னை நினைக்கத் தருவானை

நேர் நேர் நேர்நேர் நிரைநேர் நிரைநேர்நேர்
தேமா தேமா புளிமா புளிமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-6/4-4-4-6
சீர் அமைப்பு: ஈ-2, ஈ-3, மூ-3, மூ-1 = 7
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 22
பாடலுக்குரிய தாளம் : ஆதி (அனாகத எடுப்பு)

5. தானனந் தனத்தன தன தன தனத்தா
சாதலும் பிறத்தலும் தவிர்த் தெனைவகுத்து
நேர் நிரை நிரை நிரை நிரை நிரை நிரைநேர்
கூவிளம் கருவிளம் கரு விளம் புளி மா

தந் தனந் தந்த தந் தனதன தனனா
தன் அருள் தந்த எம் தலைவனை மலையின்
நேர் நிரை நேர் நிரை நிரைநிரை நிரைநேர்
கூ விளம் கூவிளம் கருவிளம் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-4-4/4-4-4-4
சீர் அமைப்பு: ஈ-8
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 27
பாடலுக்குரிய தாளம் : ஆதி

6. தந்தந் தந் தனனந் தன தா னா
பொன்னும் மெய்ப் பொருளும் தருவானை
நேர்நேர் நேர் நிரைநேர் நிரைநேர்நேர்
தே மா கூ விளங்காய் புளிமாங்காய்

தானனந் தனனந் தன தானா
போகமும் திருவும் புணர்ப்பானை
நேர் நிரை நிரைநேர் நிரைநேர்நேர்
கூவிளம் புளிமா புளிமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6/4-4-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-2,, ஈ-2,, மூ-1, = 6
சந்த அட்சரங்கள் : 30
எழுத்துக்கள் : 20
பாடலுக்குரிய தாளம் : ஆதி

7.

| | | | |
|---|---|---|---|
| தனனந் | தந்தனந் | தாதனந் | தத் தா |
| கழுதை | குங்குமந் | தான்சுமந் | தெய்த்தாற் |
| நிரைநேர் | நேர்நிரை | நேர்நிரை | நேர் நேர் |
| தையத் | தானன | தத்தன | தானத் |
| கைப்பர் | பாழ்புக | மற்றது | போலப் |
| நேர்நேர் | நேர்நிரை | நேர்நிரை | நேர்நேர் |

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-5-5-4/4-4-4-4
சீர் அமைப்பு: ஈ-4, ஈ-4, = 8
சந்த அட்சரங்கள் : 3[illegible]
எழுத்துக்கள் : 21
பாடலுக்குரிய தாளம் : ஆதி

8.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தானந் | தா | தனனந் | தனன | தந் | தானா |
| ஆலம் | தான் | உகந்து | அமுது | செய் | தானை |
| நேர்நேர் | நேர் | நிரைநேர் | நிரைநிரை | | நேர்நேர் |
| தே மா | கூ | விளங்காய் | கருவிளம் | | தே மா |

தானன தனனந் தன தானா
ஆதியை அமரர் தொழு தேத்தும்
நேர் நிரை நிரைநேர் நிரை நேர்நேர்
கூவிளம் புளிமா புளி மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 6-4-4-4/4-4-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-1, ஈ-2; ஈ-2, மூ-1, = 7
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 22
பாடலுக்குரிய தாளம் : ஆதி

9. தத்த தாதனன தாத்தன தானா
புற்றில் வாளரவு ஆர்த்தபி ரானை
நேர்நேர் நேர்நிரை நேர்நேர்நிரை நேர்நேர்
தே மா கூவிளங்காய் கூவிளம் தேமா

தான தானனா தானன தனனா
பூத நாதனை பாதமே தொழுவார்
நேர் நிரை நிரை நேர் நிரை நிரை நேர்
கூவிளங் கனி கூவிளம் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-5-4-4/3-5-4-4
சீர் அமைப்பு: ஈ-1, மூ-1, ஈ-2, மூ-1, ஈ-2 = 7
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 22
பாடலுக்குரிய தாளம் : ஆதி

10. தந்தந் தத்தந் தனதான தா னந்தா
மெய்யை முற்றப் பொடிபூசி யோர் நம்பி
நேர்நேர் நேர்நேர் நிரைநேர் நி ரை நேர்நேர்
தே மா தே மா புளிமாங்க னி தே மா

தானந் தாந்தந் தனதான னா தந்தா
வேதம் நான்கும் விரித்தோதியோர் நம்பி
நேர்நேர் நேர்நேர் நிரைநேர்நி ரை நேர்நேர்
தேமா தேமா புளிமாங் கனி தே மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-5-6/4-4-5-6
சீர் அமைப்பு: ஈ-2, மூ-1, ஈ-1, ஈ-2, மூ-1, ஈ-1 = 8
சந்த அட்சரங்கள் : 38
எழுத்துக்கள் : 22
பாடலுக்குரிய தாளம் : ஆதி

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-4-4/3-4-4-4
சீர் அமைப்பு: ஈ-4, ஈ-4, = 8
சந்த அட்சரங்கள் : 30
எழுத்துக்கள் : 23
பாடலுக்குரிய தாளம் : ஆதி

12. தனன தந்தன தந்தன தனனா
திருவும் வண்மையும் திண்திறல் அரசும்
நிரை நேர் நேர் நிரை நேர் நிரை நிரைநேர்
புளிமா கூ விளம் கூவிளம் புளிமா

தன தனா தந்த தந் தன தானா
சிலந்தியார் செய்த செய் பணி கண்டு
நிரை நிரை நிரை நேர் நிரை நேர்நேர்
கரு விளங் கனி கூ விளம் தே மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-4-4/5-3-4-4
சீர் அமைப்பு: ஈ-4, மூ-1, மூ-1, ஈ-2 = 7
சந்த அட்சரங்கள் : 31
எழுத்துக்கள் : 23
பாடலுக்குரிய தாளம் : ஆதி

13. தன தன தன தானா தந்தனனா
மறையவன் ஒருமாணி வந்தடைய
நிரை நிரை நிரைநேர்நேர் நேர்நிரைநேர்
கருவிளம் புளிமாங்காய் கூவிளங்காய்

தானனா தனந் தானன தனத்த
வாரமாய் அவன் ஆருயிர் நிறுத்த
நேர் நிரை நிரை நேர்நிரை நிரை நேர்
கூவிளங் கனி கூவிளம் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6/5-7-4
சீர் அமைப்பு: ஈ-1, மூ-2, மூ-1, ஈ-2 = 6
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 23
பாடலுக்குரிய தாளம் : ஆதி

14. தாந் தந் தத்தந் தனத்தா தன தந்தா
ஊன் அங்கத்து உயிர்ப்பாய் உலகெல்லாம்
நேர் நிரைநேர் நிரைநேர் நிரைநேர்நேர்
கூ விளங்காய் புளி மா புளி மாங்காய்

தாத்தாந் தத்தன தான தந் தானா
ஓங்கா ரத்துரு ஆகி நின்றானை
நேர்நேர் நேர்நிரை நேர்நி ரைநேர்நேர்
தேமா கூவிளம் கூவிளம் தேமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-4-6/4-4-3-6
சீர் அமைப்பு: மூ-1, ஈ-1, மூ-1, ஈ-4 = 7
சந்த அட்சரங்கள் : 35
எழுத்துக்கள் : 21
பாடலுக்குரிய தாளம் : ஆதி

15. தந் தந் தானந் தந் தான தன தானா
செம் பொன் மேனி வெண் நீறு அணிவானை
நேர்நிரை நிரைநேர் நேர்நேர்நேர் நிரைநேர்நேர்
கூ விளங்காய் தே மாங்காய் புளிமாங்காய்

தனன தந்தன தானன தானா
கரிய கண்டனை மால்அயன் காணா
நிரை நிரை நிரை நேர் நிரை நேர்நேர்
கரு விளங் கனி கூ விளம் தே மா

15. தந் தந் தானந் தந் தான தன தானா
செம் பொன் மேனி வெண் நீறு அணிவானை
நேர்நிரை நிரைநேர் நேர்நேர்நேர் நிரைநேர்நேர்
கூ விளங்காய் தே மாங்காய் புளிமாங்காய்

தனன தந்தன தானன தானா
கரிய கண்டனை மால்அயன் காணா
நிரை நிரை நிரை நேர் நிரை நேர்நேர்
கரு விளங் கனி கூ விளம் தே மா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-4-5-6/3-4-4-4
சீர் அமைப்பு: மூ-3, மூ-1, ஈ-2, = 6
சந்த அட்சரங்கள் : 34
எழுத்துக்கள் : 22
பாடலுக்குரிய தாளம் : ஆதி

16. தனனந் தந் தனனந் தந்தன தன னா
திருவும் மெய்ப் பொருளும் செல்வமும் எனக்கு
நிரை நேர் நேர் நிரை நேர் நேர் நிரை நிரை நேர்
புளி மா கூ விளங் காய் கூ விளம் புளி மா

தான தந் தனன தந் தா னா
சீருடைக் கழல்கள் என் றெண்ணி
நேர் நிரை நிரை நேர் நேர் நேர் நேர்
கூவிளம் புளிமா தே மாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-4-4/5-3-6
சீர் அமைப்பு: ஈ-1, மூ-1, ஈ-2, ஈ-2, மூ-1 = 7
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 22
பாடலுக்குரிய தாளம் : ஆதி

17. தந்தந் தா தன னா தன தானா
கங்கை வார்சடையாய் கணநாதா
நேர் நேர் நேர் நிரை நேர் நிரை நேர் நேர்
தே மா கூ விளங்காய் புளிமாங்காய்

தான தான னா தானனத் தனனா
கால காலனே காமனுக் கனலே
நேர் நேர் நிரை நேர் நிரை நேர் நேர்
தேமா கூவிளம் கூவிளம் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-6/3-5-4-4
சீர் அமைப்பு: ஈ-1, மூ-2, ஈ-4, = 7
சந்த அட்சரங்கள் : 32
எழுத்துக்கள் : 21
பாடலுக்குரிய தாளம் : ஆதி

மேற்கூறப்பட்டுள்ள பாடல்கள் அனைத்தும் அனாகத எடுப்பு ஆதிதாளத்தில் அமையப் பெற்றுள்ளன. சந்த அட்சரங்கள் நீட்டி (அ) குறுக்கி ஆதி தாளத்தில் பாடுவதற்கேற்ற வகையில் அமைந்துள்ளன. எனவே திருமுறைகண்ட புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கட்டளையும் சந்த-சீர் அமைப்பு ஆய்வின் மூலம் பெறப்படுகிற கட்டளைக்கும் வேறுபாடு இருப்பதை அறியலாம். மேற்கண்ட ஆய்வு மூலம் தக்கேசிப் பண்ணிற்கு ஒரே ஒரு கட்டளை மட்டுமே வருவதை அறியமுடிகிறது.

மேற்கண்டவற்றுள், "அந்தணாளன் உன்" எனத் தொடங்கும் பாடலும், திருஆவடுதுறைப் பதிகமான "கங்கைவார்" எனத் தொடங்கும் பதிகத்தில் ஒன்பதாம் பாடலும் (VII : 70-9) "வானநாடனே" என்னும் பாடலும் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம் பெற்றுள்ளன.[26] இனி, "ஊர்வதோர்

விடை" எனத் தொடங்கும் திருநீடூர்த் தலப் பதிகப் பாடல் சுரதாளக் குறிப்புடன் ஈண்டு தரப்படுகிறது.

பண்: தக்கேசி தாளம்:- ஆதி
இராகம்:- காம்போதி
(28 ஆவது மேளகர்த்தாவாகிய
அரிகாம்போதியில் பிறந்தது)
ஆரோசை : ச ரி க ம ப த ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

| \|4 | 0 | 0 |
|---|---|---|
| ; பாதாச்ா நீ நீதா | ; தா, தநித | பா தாச்ா ; |
| ; ஊர்வ தோர் விடை | ; ஒன் றுடை | யா னை |
| ; தநீதபா பமநித பபமக | மா. பதா ச்ா நி | ரிச் நித பா; |
| ; ஒன்றுதல் த. னிக் கன். | நுதலா | ....னை |
| ; ச்ா.*நிபா-பாதாச்ாச்ா | ; ரிக்ாம்கா | க்ம்க்ரிச்ா; |
| ; கார்அது ஆர்கறைமா | ; மிடற் றா | ... னை |
| ; பதா கீரீ ச்நிரிச் நிதபா | ; பதா மகா | பாதாச்ா ; |
| ; கரு தலார் புரம் .... | .மூன் றெரித் | தா. னை |

(இவ்வாறே மற்ற அடிகளையும் பாடவும்)

*நீரில் வாளை, வரால், குதி கொள்ளும்*
*நிறை புனல் கழனிச் செல்வம் நீடூர்ப்*
*பார் உளார் பரவித் தொழ நின்ற*
*பரமனை பணியா விடல் ஆமே.*

## *கொல்லி*

பிங்கல நிகண்டில் மருதயாழ்த் திறன் வகைகளுள் ஒன்றாக இப்பண் குறிப்பிடப்பட்டுள்ளது.[27] 103 பண்களுள், பாலைப் பெரும் பண்ணின் திறங்களுள் ஒன்றானக் குறுங்கலி என்னும் பண்ணின் பெருகு வகையைச் சேர்ந்தது. இஃது

அரும்பாலையில் பிறந்தது. ஆறிசை (பண்ணியற்றிற) வகையைச் சேர்ந்தது. இப்பண் கொல்லிக் குறிஞ்சி என்ற பெயரிலும் வழங்கப்படுகிறது. பஞ்சமரபில் இப்பண் ஆரியப் பெயர், தமிழ்ப் பெயர் ஆகிய இவ்விரு பாற்குமுரியது என்றும், மூன்றாம் சாமத்துப் பண்களுள் ஒன்றாகவும் குறிப்பிடப் பட்டுள்ளது.[28]

சென்னைத் தமிழிசைச் சங்க ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவின்படி, இப்பண்ணிற்கு நேரான இராகமாக நவரோசு என்று முடிவாகி உள்ளது.[29] எனவே நவரோசு இராக இலக்கணம் இதற்குப் பொருந்தும் என்று கூறலாம்.

கொல்லி பண்ணில் அமைந்த சுந்தரர் பதிகங்கள் வருமாறு:

1. முந்தை ஊர்முதுகுன்றம் - திரு இடையாற்றுத்தொகை
2. கடிதாய்க் கடல்காற்று - திருக்கோடிக்குழகர்
3. பாறு தாங்கிய காடரோ - -
4. தம்மையே புகழ்ந்து - திருப்புகலூர்
5. அங்கம் ஓதியோர் - திருப்புறம்பயம்
6. கார் உலாவிய - திருப்பைஞ்ஞீலி
7. குருகுபாய - திருஆரூர்

### கட்டளை

"....கொல்லிக்கு வேறு வகை மூன்றாக" எனவரும் திருமுறைகண்ட புராணக் குறிப்பு வாயிலாக கொல்லிக்கு மூன்று கட்டளைகள் என்றறிய முடிகிறது.[30] இதனைக் கொல்லிப் பண்ணிலமைந்த சுந்தரர் பதிகங்களின் முதற் பாடல் முதல் வரிக்குச் சந்தக்குழிப்பு அமைத்தும், சீர் பிரித்துக் காண்பதன் வாயிலாகவும் மறுபரிசீலனைச் செய்து ஆராயலாம்.

2. தன னா தன தாத்த தந் தந்த தன னா
கடி ட்ராய் கடல் காற்று வந்தெற்ற கரைமேல்
நிரைநேர் நிரை நேர்நேர் நேர்நேர்நேர் நிரைநேர்
புளிமா புளிமாங்காய் தேமாங்காய் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-6-5-4
சீர் அமைப்பு: ஈ-1, மூ-2, ஈ-1, = 4
சந்த அட்சரங்கள் : 18
எழுத்துக்கள் : 13
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்.

3. தான தாந்தன தான னா தன தன தனா தன தான னா
பானு தாங்கிய காடரோ படு தலையரோ மலைப் பானவலூர்
நேர்நிரை நிரை நேர்நிரை நிரை நிரைநிரை நிரை நேர்நிரை
கூவிளங்கனி கூவிளங் கனி கருவிளங் கனி கூ விளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-5-2-5-2-5
சீர் அமைப்பு: மூ-3, ஈ-1, = 4
சந்த அட்சரங்கள் : 26
எழுத்துக்கள் : 19
பாடலுக்குரிய தாளம் : மிச்ரசாபு

4. தந்தந்தா தன தத்தத் தானன தானனா தந்தந்
தம்மையே புகழ்ந் திச்சை பேசினும் சார்வினும் தொண்டர்
நேர்நிரை நிரை நேர்நி ரைநிரை நேர்நிரை நிரை
கூ விளங் கனி கூவிளங் கனி கூ விளங் கனி
தனதனா
தருகிலா
நிரைநிரை
கருவிளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 6-6-4-5-4-5
சீர் அமைப்பு: மூ-3, ஈ-1, = 4

சந்த அட்சரங்கள் : 30
எழுத்துக்கள் : 19
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

5. தந்தந் தானனா தான தாத்தன தந்தந் தாந்தந்தந்
அங்கம் ஓதியோர் ஆறைமேற்றளி நின்றும் போந்துவந்து
நேர்நி ரைநிரை நேர்நிரைநிரை நேர்நேர் நேர்நிரைநேர்
கூ வி ளங்கனி கூ விளங் கனி தேமா கூவிளங்காய்
தந்தந்தா
இன்னம்பர்
நேர்நேர்நேர்
தேமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-5-3-4-4-4-4-6
சீர் அமைப்பு: மூ-2, ஈ-1, மூ-2-5
சந்த அட்சரங்கள் : 34
எழுத்துக்கள் : 19
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

6. தான தானன தந்த தந்தன தந்த தந் தன தான தந்தந்
கார் உலாவிய தஞ்சை உண்டிருள் கண்ட வெண்தலை
யோடு கொண்டு
நேர்நிரைநிரை நேர்நி ரைநிரை நேர்நி ரைநிரைநேர்நி ரைநேர்
கூவிளங்கனி கூ விளங்கனி கூவிளங்கனி கூவிளங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-3-4-3-4-3-4
சீர் அமைப்பு: மூ-4,
சந்த அட்சரங்கள் : 28
எழுத்துக்கள் : 19
பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

7. தனன தானா தனந் தனதன தன(ந்)த தானா
குருகு பாய கொழுங் கரும்புகள் நெரிந்த சாறு

6. தான தானன தந்த தந்தன தந்த தந் தன தான தந்தந்
   கார் உலாவிய தஞ்சை உண்டிருள் கண்ட வெண்தலை
   யோடு கொண்டு
   நேர்நிரைநிரை நேர்நி ரைநிரை நேர்நி ரைநிரைநேர்நி ரைநேர்
   கூவிளங்கனி கூ விளங்கனி கூவிளங்கனி கூவிளங்காய்

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 4-3-4-3-4-3-4
   சீர் அமைப்பு: மூ-4,
   சந்த அட்சரங்கள் : 28
   எழுத்துக்கள் : 19
   பாடலுக்குரிய தாளம் : ரூபகம்

7. தனன தானா தனந் தனதன தன(ந்)த தானா
   குருகு பாய கொழுங் கரும்புகள் நெரிந்த சாறு
   நிரைநிரைநேர் நிரை நிரை நிரை நிரைநேர் நேர்நேர்
   கருவிளங்காய் கரு விளங் கனி புளிமா தேமா

   இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு : 3-4-3-4-3-4
   சீர் அமைப்பு: மூ-2, ஈ-2
   சந்த அட்சரங்கள் : 21
   எழுத்துக்கள் : 16
   பாடலுக்குரிய தாளம் : மிச்ரசாபு

மேற்கண்ட ஆய்வின் மூலம், மூன்றாவது, ஏழாவது ஆகிய இரண்டு பாடல்கள் மிச்ரசாபு தாளத்திற்கும், ஏனைய ரூபக தாளத்திற்கும் பொருந்தி அமைவதைக் காணலாம். சீர் அமைப்பினைக் காணும்போது, ஐந்தாவது பாடல் ஐந்து சீர்களைக் கொண்டும், ஏனைய நான்கு கொண்டும் விளங்குகின்றன. ஆக இரண்டு கட்டளைகளே வருகின்றன. இஃது திருமுறை கண்ட புராணத்தில் கொல்லிப் பண்ணிற்குக் கூறப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கையினின்றும் (மூன்று கட்டளைகள்) மாற்றம் கொண்டு விளங்குவதை இதன் மூலம் அறியலாம்.

மேற்கண்டவற்றுள் சுரதாளக் குறிப்புடன் ஒரு பாடல்கூட நூல்களில் இதுவரை வெளிவரவில்லை. இருப்பினும், "தம்மையே, புகழ்ந்திச்சை" எனத் தொடங்கும் பாடல் ஓதுவார்களால் பரவலாகப் பாடப்பட்டு வருகின்றன. இதனடிப்படையில் இப்பாடல் சுரதாளக் குறிப்புடன் ஈண்டு தரப்படுகிறது.

பண்: கொல்லி தாளம்: ரூபகம்

இராகம் : நவரோசு

ஆரோசை ப த நி ச் ரி க ம ப

அமரோசை ப ம க ரி ச நி த ப

| 04 | 04 |
|---|---|
| காபம் மமகரிசாசா | கநிதநி சா ; நிதநிப |
| தம்மை யே.. புகழ்ந் | திச் சை பே சி.னும் |
| பதாசசா ; கரிகா | சரிகம கா ; ; ; |
| சாரிவினும் ; தொண்டர் | தருகி லார் ... |
| மாகா மாபா பாபா | காமப மமகரி சாசா |
| பொய்மை யாளரைப் | பாடா த.. எந்தைப் |
| நிசீரீ ரீரீ ரீசரி | ககமப கரீச சா ; |
| புதலூர் பாடுமின் | பு. ல. வீர் காள். . . |

(இவ்வாறே மற்ற அடிகளையும் பாடவேண்டும்)

இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலூம் இடர் கெடலும் ஆம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவு
இல்லையே.

### காந்தாரப் பஞ்சமம்

103 பண்களுள், உறழ்ப்பு என்னும் பெயரில் இப்பண் பிங்கல நிகண்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.[31] பாலைப் பெரும் பண்ணின் திறங்களுள் ஒன்று உறுப்பு. இதன் அகநிலை காந்தாரப் பஞ்சமம் ஆகும். இதற்குரிய மற்ற பெயர்கள்

உறுப்புப் பஞ்சமம், உறழ்ப்புக் காந்தாரப் பஞ்சமம், பஞ்சமம் ஆகும். அரும் பாலையிற் பிறந்த இப்பண் பண்ணியற்றிற ஆறிசை வகையைச் சேர்ந்தது. இது ஆரியப் பெயர், தமிழ்ப் பெயர் ஆகிய இரு நெறிக்குமுரியது.[32]

ஆண்டுதோறும் சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் நடைபெற்றுவரும் பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவின்படி பண் காந்தாரப் பஞ்சமம், கேதார கௌளை இராகத்திற்கு நேரானது என்றறிகிறோம்.[33] எனவே, கேதார கௌளை இராக இலக்கணம் இப்பண்ணிற்குப் பொருந்தும்.

காந்தாரப் பஞ்சமப் பண்ணில் சுந்தரர் பாடிய பதிகங்களுள் ஒன்று மட்டுமே பதிப்பில் வெளிவந்துள்ளது. அப்பதிகம் வருமாறு :

பரவும் பரிசொன்றறியேன் - திருஐயாறு

### கட்டளை

"ஒன்றாகும் காந்தாரப் பஞ்சமத்துக்கு" எனவரும் திருமுறைகண்ட புராணக் குறிப்பின்படி, காந்தாரப் பஞ்சமப் பண்ணிற்கு ஒரு கட்டளை உரியது என்றறியலாம்.[34] இதற்குரிய சந்த-சீர் அமைப்புகள் வருமாறு:

பண்: காந்தார பஞ்சமம் கட்டளை : ஒன்று

1. தன னந் தன தந் தன னா னா தந்தா தந்தந் தந்தந் தனனானா
   பரவும் பரி சொன் றறியேன்நான் பண்டே உம்மைப் பயிலாதேன்
   நிரைநேர் நிரைநேர் நிரைநேர்நேர் நேர்நேர்நேர்நேர் நிரைநேர்நேர்
   புளி மா புளி மா புளிமாங்காய் தேமா தேமா புளிமாங்காய்

சந்த அமைப்பு : 4-4-6-4-4-6
சீர் அமைப்பு: ஈ-2, மூ-1, ஈ-2, மூ-1 = 6
சந்த அட்சரங்கள் : 28
எழுத்துக்கள் : 18
பாடலுக்குரிய தாளம் : ஆதி

இப்பாடல் இவ்வாறே ஆதிதாளத்தில் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம் பெற்றுள்ளது.[35]

## பியந்தைக் காந்தாரம்

103 பண்களுள் பியந்தைக் காந்தாரம் என்ற பெயரில் பண் காணப்படவில்லை. பியந்தை என்ற பண் செவ்வழித் திறங்களுள் ஒன்றாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது பெயர் திறம் என்ற மற்றொரு பெயரையும் கொண்டு திகழ்கின்றன.[36] செவ்வழிப் பாலையில் பிறந்தது. பண்ணியற்றிற வகையைச் சேர்ந்தது. இப்பண், பஞ்சமரபில் மென்மைக்குரியதாகவும், ஏழாம் சாமத்தில் பாடுவதற்கேற்றதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.[37]

சென்னைத் தமிழிசைச் சங்க ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவின்படி இப்பண் நவரோசு இராகத்திற்கு நேரானது என்றறியலாம்[38] ஆகவே நவரோக இராக இலக்கணம் இப்பண்ணிற்குப் பொருந்தும் என்று கூறலாம்.

## கட்டளை

பியந்தைக் காந்தாரப் பண்ணில் சுந்தரர் பாடிய பியந்தைக் காந்தாரமோ குறிப்பிடாமல் காந்தாரத்திற்கு ஒன்று என்று கட்டளை குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பதிகத்தின் முதற்பாடலுக்குரிய சந்த, சீர் அமைப்புகள் வருமாறு:

## பண்: பியந்தைக் காந்தாரம்

1. தன தனா தன தானந் தன தன தனதனதான
   பொருவனார் புரிநூலர் புணர்முலை உமையவளோடு
   நிரை நிரை நிரைநேர்நேர் நிரைநிரை நிரைநிரை நேர்நேர்
   கரு விளம் புளிமாங்காய் கருவிளம் கருவிளம் தேமா

   சந்த அமைப்பு : 5-6-6-5-
   சீர் அமைப்பு: ஈ-1, மூ-1, ஈ-3, 5
   சந்த அட்சரங்கள் : 22
   எழுத்துக்கள் : 18
   பாடலுக்குரிய தாளம் : கண்டசாபு

இப்பாடல் நூல்களில் சுரதாளக் குறிப்புடன் இதுவரையில் வெளிவரவில்லை. எனவே இப்பாடலுக்குரிய சுரதாளக் குறிப்பு ஈண்டு தரப்படுகிறது.

பண் : பியந்தைக் காந்தாரம் தாளம் : கண்டசாபு
இராகம் : நவரோசு
ஆரோசை பதநிசரிகமப
அமரோசை பமகரிசநிதப

|5 |5 |5 |5

கக மகா ; கரி சாச தநிச்சா சசகரிச
பொருவனார் புரி நூலர் புணர்முலை உமையவளோ
மகா ; ; ; ;
டு . . . .
மகமபப - மகரிகம நிசரிரீ ரீசரீ
மருவனார் மருவார்பால் வருவதும் இல்லைநம்
கமாரீ - சா ; ,
அடிகள்

(பின்வரும் மற்ற அடிகளையும் இவ்வாறே பாடவேண்டும்)

திருவனார் பணிந்தேத்தும் திகழ்திரு வாஞ்சியத்து உறையும்
ஒருவனார் அடியாரை ஊழ்வினை நலிய ஒட்டாரே.

### கௌசிகம்

103 பண்களுள் இப்பண், "செய்திறம்" என்னும் பெயரில் காணப்படுகிறது.[39] மருத யாழ்த் திறங்களுள் ஒன்று. படுமலைப் பாலையிற் பிறந்தது. பண்ணியற்றிற வகையைச் சேர்ந்தது. இஃது வெளிப்படும் பண்களுள் ஒன்றாகவும், வன்மைக்குரியதாகவும், முதற் சாமத்தில் பாடக்கூடியதாகவும் பஞ்சமரபில் குறிப்பிடப்பட்டுள்ளது.[40]

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெற்று வரும் பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவன்படி இப்பண்ணிற்கு நேரான இராகம் பைரவியாகும்.[41] எனவே பைரவி இராக இலக்கணம் இப்பண்ணிற்கும் பொருந்தும்.

சுந்தரர் இப்பண்ணில் பாடியுள்ள ஒரேயொரு பதிகம் மட்டுமே பதிப்பில் வெளிவந்துள்ளது. அப்பதிகம் வருமாறு:

அழல்நீர் ஒழுகி திருச்சோற்றுத்துறை

### கட்டளை

"....கவுசிகப்பாற் றுற்றவிசை யிரண் டாக்கி" என்றிருப்பதால் சுந்தரர் பாடிய கவுசிகத்திற்கு இரண்டு கட்டளைகள் என்றறியலாம்.[42] ஆனால் ஒரேயொரு பதிகம் மட்டுமே பதிப்பில் காணப்படுவதால் இதனை ஒரு கட்டளையாகவோ கொள்ள வேண்டியுள்ளது.

இப்பதிகத்தின் முதற் பாடல் முதல் வரிக்குரிய சந்த அமைப்பும் சீர் அமைப்பும் வருமாறு :

பண்: கௌசிகம் கட்டளை :

| | | | |
|---|---|---|---|
| தனனா | தனன | தனன | தனனா |
| அழல்நீர் | ஒழுகி | யனைய | சடையும் |
| நிரைநேர் | நிரைநேர் | நிரைநேர் | நிரைநேர் |
| புளிமா | புளிமா | புளிமா | புளிமா |

சந்த அமைப்பு : 4-3-3-4
சீர் அமைப்பு: ஈ-4,
சந்த அட்சரங்கள் : 14
எழுத்துக்கள் : 12
பாடலுக்குரிய தாளம் : ஆதி

இப்பாடல் சுரதாளக் குறிப்புடன் நூல்களில் காணப்படாமையால் ஈண்டுத் தரப்படுகிறது.

பண் : கவுசிகம் தாளம் : ஆதி
இராகம் : பைரவி
(20 ஆவது மேளகர்த்தாவான நடபைரவியில் பிறந்தது.)

ஆரோசை : சரிகமபதநிச்
அமரோசை : ச்நிதபமகரிச

| \|4 | 0 | 0 |
|---|---|---|
| ; க்ரீசா, சநிரிச் நிதபா | ; பதாபமா | பதநீ தநிச்ா; |
| ; அழல் நீர் ஒ.ழு.கி.. | . யனை ய. | சடையும்.. |
| ; கீரிச்ா, ச்நிரிச் நிதபா | ; மபாச் நித | பமநித பமகரி |
| ; உழைஈ உரி.யும். | ; உடையான். | இடம். ஆம்.. |
| ; சாமபாதீநீ ச்ா ; ச்ா | ; க்ரீச்சா | நிதநீ ச்ாச்ா |
| ; கூழைநீர் முத் தும் | . கனக.க் | குவை யும். |
| ; ச்ரீச்ா, ச்நிரிச் க்ரிச்நி | ; தபா-பதாபதா | பதநீ தநிச்ா |
| ; சுழல்நீர் பொன்னி... | ...சோற்றுத் | துறை யே.. |

### கொல்லிக் கௌவாணம்

103 பண் வகைகளில் கொல்லிக் கௌவாணம் என்னும் பெயருடைய பண் குறிப்பிடப்படவில்லை. கொல்லி என்று தனியாகவும், கவ்வாணம் என்று தனியாகவும் குறிப்பிடப்பட்டுள்ளன.[43] கவ்வாணம் என்பது ஆறிசைகளைக் கொண்ட பண்ணியற்றிற வகையைச் சேர்ந்ததாகும். இது படுமலைக் கவ்வாணம் என்ற பெயரையும் கொண்டு திகழ்கின்றது. எனவே 103 பண் வரிசையில் உள்ள தொடர்பு மேலும் ஆராயத்தகுந்தது.

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெற்று வரும் பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவின்படி இப்பண் நவரோசு இராகத்திற்கு நேரானது.[44] எனவே, நவரோசு இராக இலக்கணம் இப்பண்ணிற்குப் பொருத்தமாகும்.

கொல்லிக் கௌவாணப் பண்ணில் சுந்தரர் பாடியுள்ள பதிகங்கள் வருமாறு:

1. தம்மானை அறியாத - திரு அதிகைத் திருவீரட்டானம்
2. தில்லைவாழ் அந்தணர்
3. வள் வாய மதிமிளிரும் திருக்கானாட்டு முள்ளூர்
4. முதுவாய் ஓரி கதற - திருக்கச்சூர் ஆலக்கோயில்
5. எறிக்கும் கதிர்வேய் திருவெஞ்சமாக்கடல்
6. நஞ்சி இடை இன்றுநாளை - திருமுதுகுன்றம்
7. முடிப்பது கங்கையும் - பொது
8. காண்டனன் காண்டன்ன - திருஆமாத்தூர்
9. பத்து ஊர் புக்கு - திருநகைக் காரோணம்

### கட்டளை

யாழ் நூலில் பியந்தைக் காந்தாரத்திற்கு மூன்று கட்டளைகள் கூறப்பட்டுள்ளன.[45] இப்பண்ணிலமைந்த பதிகங்களின் முதற்பாடல் முதல் வரிக்குச் சந்தக் குழிப்பும், சீர் அமைப்பும் செய்து காணலாம்.

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 6-6-5-4/6-6-6-4
சீர் அமைப்பு: மூ-2, ஈ-2, மூ-3, ஈ-1, 8
சந்த அட்சரங்கள்: -43
எழுத்துக்கள்: -28
பாடலுக்குரிய தாளம்: - ரூபகம்

2. தந்தனா தந்தனதந் தனதான தன னா
தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
நேர்நிரை நேர்நிரைநேர் நிரைநேர் நேர் நிரைநேர்
கூவிளம் கூவிளங்காய் புளிமாங்காய் புளிமா

தனதான தந்தத்தத் தனதனா தன னா
திருநீல கண்டத்துக் குயவனார் கடியேன்
நிரைநேர்நேர்நேர்நேர்நேர் நிரைநிரை நிரைநேர்
புளிமாங்காய் தேமாங்காய் கருவிளம் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: -5-6-5-4/5-6-5-4
சீர் அமைப்பு ஈ-1, மூ-2, ஈ-1, மூ-2, ஈ-2 8
சந்த அட்சரங்கள்: -40
எழுத்துக்கள்: - 28
பாடலுக்குரிய தாளம்:- கண்டசாபு

3. தத் தான தன தன னந் தன தன ன தானா
வள் வாய மதிமிளி ரும் வளர் சடை ய் னானை
நேர் நேர் நேர்நிரை நிரைநேர் நிரை நிரைநேர் நேர்நேர்
தேமாங்காய் கருவிளங்காய் கருவிளங்காய் தேமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு: 5-6-5-4/5-5-6-4
சீர் அமைப்பு மூ-3, ஈ-1, மூ-3, ஈ-1 8
சந்த அட்சரங்கள்:- 40
எழுத்துக்கள்: -30
பாடலுக்குரிய தாளம்:- கண்டசாபு

4. தனனா தானதனன தன தாத் தன தந் தானந் தனதானா
முதுவாய் ஓரிகதற முதுகாட் டெரிகொண் டாடல் முயல்வானே
நிரைநேர்நேர்நேர்நிரைநேர் நிரைநேர் நிரைநேர் நேர்நேர் நிரைநேர்நேர்
புளிமா தேமா புளிமா புளிமா புளிமா தேமா புளிமாங்காய்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-6-4-4-6-
சீர் அமைப்பு ஈ-6, மூ-1 7
சந்த அட்சரங்கள்: -28
எழுத்துக்கள்: -20
பாடலுக்குரிய தாளம்:- மிச்ரசாபு

5. தன(த்)தந் தன னா தன தத் தனனா
எறிக்கும் கதிர்வேய் உதிர்முத் தமொடு
நிரைநேர் நிரைநேர் நிரைநேர் நிரைநேர்
புளிமா புளிமா புளிமா புளிமா

தானந் தன தந் தத் தான தானா
ஏலம் (இ) லவங்கம் தக்கோலம் இஞ்சி
நேர்நேர் நிரைநேர் நேர்நேர்நேர் நேர்நேர்
தேமா புளிமா தே மாங்காய் தேமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு :- 4-4-4-4/4-4-5-4
சீர் அமைப்பு ஈ-4, ஈ-4, 8
சந்த அட்சரங்கள்:- 33
எழுத்துக்கள்:- 22
பாடலுக்குரிய தாளம்:- ஆதி

6. தந்தந் தன தந்த தான தந்தந்தந் தத்தனா
நஞ்சி இடை இன்று நாளை என்றும்மை நச்சுவார்
நேர்நேர் நிரை நிரை நேர்நேர் நேர்நிரை நேர்நிரை
தே மா கரு விளம் தே மா கூவிளம் கூவிளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு :- 4-4-4-4/4-4-5-4
சீர் அமைப்பு ஈ-4, ஈ-4, 8
சந்த அட்சரங்கள்:- 33
எழுத்துக்கள்:- 22
பாடலுக்குரிய தாளம்:- ஆதி

6. தந்தந் தன தந்த தான தந்தந்தந் தத்தனா
நஞ்சி இடை இன்று நாளை என்றும்மை நச்சுவார்
நேர்நேர் நிரை நிரை நேர்நேர் நேர்நிரை நேர்நிரை
தே மா கரு விளம் தே மா கூவிளம் கூவிளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 4-4-4-6-5
சீர் அமைப்பு: -ஈ-5
சந்த அட்சரங்கள்:-23
எழுத்துக்கள்:- 14
பாடலுக்குரிய தாளம்:- சாபு

7. தனத்தன தந் தனந் தந் தனந் தந்தன தானன
முடிப்பது கங்கையும் திங்களும் பெற்றது மூளயில்
நிரைநிரை நேர்நிரை நேர்நிரை நேர்நிரை நேர்நிரை
கரு விளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 5-5-5-4-5
சீர் அமைப்பு:- ஈ-58
சந்த அட்சரங்கள்:- 24
எழுத்துக்கள்:- 16
பாடலுக்குரிய தாளம்:- கண்டசாபு

8. தாந் தனந் தாந் தனந் தானனந் தானந் தனத்தனா
காண்டனன் காண் டனன் காரிகை யாள்தன் கருத்தனாய்
நேர் நிரை நேர் நிரை நேர்நிரை நேர்நி ரைநேர்நிரை
கூ விளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம்

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 5-5-5-5-5
சீர் அமைப்பு:- ஈ-5
சந்த அட்சரங்கள்:- 25
எழுத்துக்கள்:- 15
பாடலுக்குரிய தாளம்:- கண்டசாபு

9. தத் தா தத் தன தந்தந் தன தனதந் தானா
பத்தூர் புக் கிரந்துண்டு பல பதிகம் பாடி
நேர்நேர் நேர் நிரைநேர்நேர் நிரை நிரைநேர் நேர்நேர்
கூவிளங்காய் புளி மாங்காய் புளி மாங்காய் புளிமா

தானன தத் தன தானத் தன தானத் தனனா
பாவையரைக் கிறி பேசிப் படி றாடித் திரிவீர்
நேர்நிரைநேர் நிரை நேர்நேர் நிரைநேர்நேர் நிரைநேர்
கூவிளங்காய் புளி மாங்காய் புளி மாங்காய் புளிமா

இப்பாடலுக்குரிய சந்த அமைப்பு:- 6-6-5-4/6-6-6-4
சீர் அமைப்பு:- மூ-3, ஈ-1, மூ-3, ஈ-1 8
சந்த அட்சரங்கள்:- 44
எழுத்துக்கள்:- 29
பாடலுக்குரிய தாளம்:- ரூபகம்

மேற்கண்டவற்றுள் 1,9 ஆம் பாடல்கள் ரூபகத் தாளத்திற்கும், 2,3,7,8ஆம் பாடல்கள் கண்டசாபு தாளத்திற்கும், 46-ஆம் பாடல் மிச்ரசாபு தாளத்திற்கும் மிச்ரசாபு தாளத்திற்கும், 5-ஆம் பாடல் ஆதி தாளத்திற்கும் பொருத்தமாக இருப்பதை அறிய முடிகிறது. இவற்றின் சீர் அமைப்பு அடிப்படையிலும் நான்குவித அமைப்புகள் உள்ளன. ஆக இப்பாடல்கள் நான்கு கட்டளைகளில் அமைந்திருப்பதை அறிய முடிகிறது. இஃது யாழ்நூலில் கண்டவற்றிலிருந்தும் மாற்றம் கொண்டுள்ளது.

மேற்கண்டவற்றுள் "முதுவாய் ஓரி" என்னும் பாடல் மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம்பெற்றுள்ளது.[46] இனி "தம்மானை அறியாத" என்னும் பாடலுக்குச் சுரதாளக் குறிப்பு அமைத்து ஈண்டு தரப்படுகிறது.

பண்: கொல்லிக் கௌவாணம் தாளம் : ரூபகம்
இராகம் : நவரோசு
ஆரோசை பதநிரிகமப
அமரோசை : பமகரிசநிதப

| 0\|4 | 0\|4 |
|---|---|
| ; கா மகரிச கா | சாசா சா; நிதநிப |
| ; தம் மா.. னை | அ றி யாத ... |
| தா; நீசா; ரீ | காமா கா ; ; ; |
| சா தியார் | உள ரே. . . . |
| ; மக மாபா பா ; | மாகா மதபம கரிசநி |
| ; சடை மேல் கொள் | பிறை யா.. னை.. |
| ; சசா ரிகா ரிரீசரி | காமப கரிசா சா; |
| விடை மேற் கொள். | விகிர்தன். |

(பின்வரும் அடிகளையும் இவ்வாறே பாட வேண்டும்.)

***கைம்மாவின் உரியானை கரிகாட்டில் ஆடல்***
***உடையானை, விடையானை, கூறை கொண்ட கண்டத்து***
***அம்மான்தன் அடிக் கொண்டு என் முடிமேல் வைத்திடும் என்னும்***
***ஆசையால் வாழ்கின்ற அறிவு இலா நாயேன்***
***எம்மானை, எறி கெடில வட வீரட்டானத்து***
***உறைவானை, இறைபோதும் இகழ்வன் போல் யானே.***

இனி திருஞானசம்பந்தர் பாடியுள்ள பண்களுள் சுந்தரர் பாடல்கள் இடம்பெறாத பண்கள் வருமாறு:

செவ்வழி, மேகராகக்குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி. சாதாரி, பழந்தக்கராகம், அந்தாளிக்குறிஞ்சி.

இந்தப் பண்களின் விவரத்தினைத் தேவார இசை - தொகுதி ஒன்றில் காணலாம்.

## திருநாவுக்கரசர் கையாண்டுள்ள பண்களில் சுந்தரர் பாடல்கள்

திருநாவுக்கரசர் திருப்பதிகங்களில் பின்வரும் பத்துப் பண்கள் இடம்பெற்றுள்ளன. அவையாவன:

கொல்லி, காந்தாரம், பியந்தைக் காந்தாரம், சாதாரி, காந்தாரப் பஞ்சமம், பழந்தக்கராகம், பழம்பஞ்சுரம், இந்தளம், சீகாமரம், குறிஞ்சி.

இவற்றுள் சாதாரி, பழந்தக்கராகம் ஆகிய இரண்டு பண்களைத் தவிர மற்ற பண்களில் சுந்தரர் பாடல்கள் காணக்கிடைக்கின்றன. அப்பாடல்களின் இசை குறித்த ஆய்வினை முன்னர் கண்ட பகுதிகளிற் காணலாம்.

சாதாரி, பழந்தக்கராகம் ஆகியவற்றுள் சாதாரிப் பண்ணிற்குப் பொருத்தமான இராகமாக பந்தவராளி இராகம் குறிப்பிடப்பட்டுள்ளது. பந்துவராளி இராகத்திற்கு நேரான மற்றொரு பண்ணான நட்டராகப் பண்ணில் சுந்தரர் பாடல்கள் காணப்படுகின்றன.

சுந்தரர் பாடியுள்ள பின்வரும் பண்களில் திருநாவுக்கரசர் பாடல்கள் காணப்படவில்லை. நைவளம், நேர்திறம், தக்கராகம், பஞ்சமம், நட்டராகம், தக்கேசி, கொல்லிக் கௌவாணம். இவற்றுள் நட்டராகப் பண்ணிற்கும்

சாதாரரிப் பண்ணிற்கும் ஒரே இராகம் குறிப்பிடப் பட்டுள்ளமை ஈண்டு சுட்டத்தகுந்தது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரும் பாடாத, சுந்தரர் மட்டுமே ஒரேயொரு பதிகம் பாடியுள்ள பண் செந்துருத்தியாகும். இதனைப் பின்வரும் பகுதியிற் காணலாம்.

## *செந்துருத்தி*

103 பண்களுள் செந்நிறம் என்று வழங்கப்படுகிறது[47] குறிஞ்சிப் பண்ணின் திறங்களுள் ஒன்று செம்பாலையில் பிறந்த இப்பண் திற (ஐந்திசை) வகையைச் சேர்ந்தது. இது ஒலிப்புஞ்சமம், செந்துருத்தி, மத்தியமாரி என்னும் பதியாயப் பெயர்களைக் கொண்டது. செந்துருத்தி பண் வெளிப்படும் பண்களுள் ஒன்றாகவும், ஒலிக்குரியதாகவும், வன்மைக்குரியாதாகவும் ஆரியப் பெயர் நெறிக்குரியதாகவும் பஞ்சமரபில் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இதில், "செந்துருத்தி என்பது செந்திறம்" என்றும், முதற் சாமத்துப் பண்களுள் ஒன்றாகவும், இதற்குரிய தெய்வம் பிரமன் என்றும், முதலெட்டு மங்கலப் பண்களுள் ஒன்றாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.[48]

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் ஆண்டுதோறும் நடைபெறும் பண்ணாராய்ச்சி மாநாட்டு முடிவின்படி இப்பண்ணுக்கு நேரான இராகம் தற்போதைய மத்தியமாவதி ஆகும்.[49] எனவே மத்தியமாவதி இராகம் இப்பண்ணிற்குப் பொருத்தமானதாகும்.

தேவார மூவருள் சுந்தரர் மட்டுமே ஒரேயொரு பதிகம் இப்பண்ணில் பாடியுள்ளார். இவர் பாடியுள்ள பதிகம் வருமாறு:

மீளா அடிமை உமக்கே - திரு ஆரூர்

## *கட்டளை*

"பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கி. . ." என்றதால் செந்துருத்திப் பண்ணிற்குப் ஒரு கட்டளை என்றறிய

முடிகிறது 50 இனி இப்பண்ணிற்குரிய சந்த-சீர் அமைதியினைக் காணலாம்.

பண்: செந்துருத்தி கட்டளை: ஒன்று

தானா தன னா தனத்தா தானா தனனா தாந் தானா
மீளா அடிமை உமக்கே ஆளாய் பிறரை வேண்டாதே
நேர்நேர் நிரைநேர் நிரைநேர் நேர்நேர் நிரைநேர் நேர்நேர்நேர்
தே மா புளிமா புளிமா தே மா புளிமா தே மாங்காய்

சந்த அமைப்பு: -4-4-4-4-6
சீர் அமைப்பு: ஈ-5, மூ-1 = 6
.சந்த அட்சரங்கள்: - 26
எழுத்துக்கள்: -16
பாடலுக்குரிய தாளம்: - ஆதி

மேற்கண்ட ஆய்வின் மூலம் செந்துருத்திக்குரிய ஒரு கட்டளை ஆதி தாளத்தில் அமைந்தது என்றறியலாம்.

இப்பதிகத்தின் இரண்டாம் பாடலான "விற்றுக் கொள்வீர்" மூவர் திருமுறைப் பாடல்கள் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் காணப்படுகிறது. முதற்பாடல், "தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ் பாடல்கள்" என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம்பெற்றுள்ளது.[51] ஓதுவார்களாலும் பரவலாக இப்பாடல் பாடப்பட்டு வருகின்றது.

## முடிவுரை

திருஞானசம்பந்தர் மற்றும் திருநாவுக்கரசர் பாடிய பண்களில் அமைந்த சுந்தரரின் பாடல் இசை இவ்வியலில் ஆராயப்பட்டது. இதில் தக்கராகம், பஞ்சமம், பழம் பஞ்சுரம், நட்டராகம், தக்கேசி, கொல்லி, காந்தாரப் பஞ்சமம், பியந்தைக் காந்தாரம், கொல்லிக் கௌவாணம் ஆகிய ஒன்பது பண்களில் அமைந்த 68/ பதிக இசை அடங்கியுள்ளது.

தேவார மூவருள், சுந்தரர் மட்டுமே பாடியுள்ள பண்ணானச் செந்துருத்திப் பண்ணில் அமைந்த பதிகமும் அதில் ஆராயப்பட்டது. ஒவ்வொரு பதிகத்தின் முதற்பாடல் முதல்வரிக்குச் சந்தக்குழிப்பும், சீர்பிரித்துப் பார்த்தும் ஆராய்ந்ததில் திருமுறைகண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள கட்டளை எண்ணிக்கைக்கும், பாடல்களின் சந்த-சீர் அமைப்புப்படி வருகின்ற கட்டளை எண்ணிக்கைக்கும் சில பண்களில் வேறுபாடு இருப்பதை அறியமுடிகிறது. இவ்வேறு பாட்டினைப் பின்வருமாறு பட்டியலிட்டுக் காணலாம்.

| வ.எண் பண்கள் | திருமுறைகண்ட புராணம் | இவ்வியலில் பெறப்பட்டவை |
|---|---|---|
| 1. தக்கராகம் | இரண்டு | இரண்டு |
| 2. பஞ்சமம் | ஒன்று | ஒன்று |
| 3. பழம்பஞ்சுரம் | இரண்டு | மூன்று |
| 4. நட்டராகம் | இரண்டு | இரண்டு |
| 5. தக்கேசி | நான்கு | ஒன்று |
| 6. கொல்லி | மூன்று | இரண்டு |
| 7. காந்தாரப்பஞ்சமம் | மூன்று | மூன்று |
| 8. பியந்தைக்காந்தாரம் | ஒன்று | ஒன்று |
| 9. கௌசிகம் | ஒன்று | ஒன்று |
| 10. கொல்லிக்கௌவாணம் | மூன்று | நான்கு |
| 11. செந்துருத்தி | ஒன்று | ஒன்று |

இதுவரையில் நூல்களில் சுரதாளக் குறிப்புடன் வெளிவராததும் இவ்வியலில் ஆராயப்பட்ட மேற்கூறிய பண்களில் அமைந்ததுமானப் பின்வரும் பாடல்கள் அவற்றின் சந்த-சீர் அமைப்புக்கேற்ற வகையில் இசையமைத்துச் சுரதாளக் குறிப்புடன் தரப்பட்டுள்ளன.

1. மலைஆர் அருவி - தக்கராகம் - காம்போதி - ஆதி
2. தூவாயாதொண்டு - பஞ்சமம் - ஆகிரி - ரூபகம்

3. மருஆர் கொன்றை - பழம் பஞ்சுரம் சங்கராபரணம் - ஆதி
4. சிம்மாந்து சிம்புளித்து - நட்டராகம் பந்தவராளி - கண்டசாபு
5. ஊர்வதோர் விடை-தக்கேசி-காம்போதி - ஆதி
6. தம்மையே புகழ்ந்திச்சை கொல்லி நவரோசு - ரூபகம்
7. பொருவனார் புரிநூலார் பியந்தைக்காந்தாரம் நவரோசு - கண்டசாபு
8. அழல்நீர் ஒழுகி கவுசிகம் பைரவி - ஆதி
9. தம்மானை அறியாத கொல்லிக் கவ்வாணம் நவரோசு - ரூபகம்

## குறிப்புகள்

1. **பிங்கலநிகண்டு நூற்பா 1376, 3084.**
2. பஞ்சமரபு-இசைமரபு வெண்பா 24, உரை.
3. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்,** ப. 328.
4. **திருமுறைகண்ட புராணம்,** செய்.40, அடி-4.
5. **மூவர் திருமுறைப் பாடல்கள், பக். 89-90.**
6. **பிங்கலநிகண்டு** நூ. 1381.
7. பஞ்சமரபு-இசைமரபு வெண்பா 24, உரை
8. **திருநாவுக்கரசு தேவாரம்-IV 29:3**
9. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்,** ப.325
10. **திருமுறைகண்ட** புராணம், செய். 43, அடி 3-4
11. **மூவர் திருமுறைப் பாடல்கள், ப.95 தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப்பாடல்கள்,** ப. 34
12. **பிங்கலநிகண்டு நூற்பா** 1377, 1391.
13. **பஞ்சமரபு இசைமரபு செய்.24,** உரை, ப.35
14. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்** ப. 36.
15. **திருமுறைகண்ட புராணம்,** செய் 41 அடி: 2-3
16. **மூவர் திருமுறைப் பாடல்கள்,** ப. 108; **Selections from /Tamil composers, p.4.,** தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள், ப. 22.
17. **பிங்கலநிகண்டு நூற்பா** 1382.
18. பஞ்சமரபு - இசைமரபு, வெண்பா 24, 65 உரைகள்
19. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப. 325
20. **திருமுறைகண்ட புராணம்,** செய்.41, அடி-1.
21. **மூவர் திருமுறைப் பாடல்கள்,** ப. 108 **Selections from / Tamil composers, p.4.,** தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள்
22. **பிங்கலநிகண்டு நூற்பா** 1383, 1396

23. பஞ்சமரபு-இசைமரபு வெண்பா 24, 71 உரைகள்
24. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப. 325
25. திருமுறைகண்ட புராணம், செய். 41: அடி 3-4.
26. மூவர் திருமுறைப்பாடல்கள், ப. 111.
27. பிங்கலநிகண்டு நூற்பா 1383.
28. பஞ்சமரபு இசைமரபு வெண்பா 24, 71 உரைகள்
29. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப. 325.
30. திருமுறைகண்ட புராணம், செய். 41, அடி 1-2
31. பிங்கலநிகண்டு - நூற்பா 1387,
32. பஞ்சமரபு-இசைமரபு, வெண்பா 23, 75 உரை.
33. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப. 325.
34. திருமுறைகண்ட புராணம், செய். 42, அடி-1.
35. மூவர் திருமுறைப் பாடல்கள், ப. 116.
36. பிங்கலநிகண்டு நூற்பா 1379.
37. பஞ்சமரபு-இசைமரபு, வெண்பா 23, 24, 65, 75 உரைகள்..
38. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப. 325.
39. பிங்கலநிகண்டு நூற்பா 1383.
40. பஞ்சமரபு-இசைமரபு வெண்பா 23, 24, 65, 69, 78 உரைகள்.
41. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப. 325.
42. திருமுறைகண்ட புராணம், செய். 43, அடி 2-3.
43. அங்கயற்கண்ணி. இ. பஞ்சமரபில் இசைமரபு, ப. 126
44. பண் ஆராய்ச்சியும், அதன் முடிவுகளின் தொகுப்பும், ப. 328.
45. யாழ்நூல், ப. 255.
46. மூவர் திருமுறைப் பாடல்கள், ப. 104
47. பிங்கலநிகண்டு நூற்பா 1377.

48. **பஞ்சமரபு-இசைமரபு,** வெண்பா 23, 24, 65, 69, 78 உரைகள்
49. **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்,** ப.325.
50. **திருமுறைகண்ட புராணம்,** செய். 43, அடி-2.
51. **மூவர் திருமுறைப் பாடல்கள், பக். 109-10 திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள்.**

# இயல் நான்கு

# சுந்தரர் பதிக இசை

முன் இயலில் ஆராயப்பட்ட சுந்தரரின் 101 பதிகங்கள் தற்போதைய பாடுமுறையில் எந்த அளவு மரபு வழுவாமலும், மரபு வழுவியும் அமைகின்றன என்பதை ஆராய்தல் இவ்வியலின் நோக்கமாகும்.

இப்பாடல்களின் இசையை ஆராயச் சுரதாளக் குறிப்புடன் நூல்களில் வெளிவந்துள்ள சுந்தரர் பாடல்கள். ஒலிப்பதிவு நாடாக்களில் வெளிவந்துள்ள பாடல்கள் ஆகியவை பெரிதும் துணைபுரிகின்றன. இவ்வகையில், மூவர் திருமுறைப் பாடல்கள், தேவாரத்திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள், திருமுறை இசை அமுதம், சங்கீத ரசார்ணவம், தேவார இசை ஆகிய நூல்களில் காணப்படும் பாடல் இசை மற்றும் தருமபுரம் சுவாமிநாதன், முத்து கந்தசாமி தேசிகர் ஆகிய ஓதுவார்கள் ஒலி நாடாக்களில் பாடியுள்ள பாடல்களின் இசையும் ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளன.

முதலாவதாக, நூல்களில் வெளிவந்துள்ள பாடல்களின் இராகதாளக் குறிப்புக்கள் பின்வருமாறு பட்டியலிடப்படுகின்றன.

சுரதாளக் குறிப்புடன் நூல்களில் வெளிவந்துள்ள சுந்தரர் பாடல்கள்:

| வ. எண் | பாடலின் தொடக்கம் | பண் | இராகம் | தாளம் | இடம்பெற்றுள்ள நூல், பக்கம் |
|---|---|---|---|---|---|
| 1. | குரும்பை முலை மலர் | தக்க ராகம் | காம் போதி | கண்ட சாபு | மூ.தி.பா |
| 2. | பூணான் ஆவதோர் | ” | ” | ஆதி | ”ப.90 |
| 3. | அந்தியும் நண்பகலும் | புற நீர்மை | பௌளி | மிச்ர சாபு | ”ப.91 |
| 4. | வடிவுடை மழுவேந்தி | ” | ” | ” | ”ப.93 |
| 5. | ஆதியன் ஆதிரையன் | பஞ்சமம் | ஆகிரி | ரூபகம் | ”ப.95 |
| 6. | கொன்று செய்த | நட்ட பாடை | கம்பீர நடை | மிச்ர சாபு | மூ.தி.பா ”ப.97 |
| 7. | மறைகள் ஆயின | காந்தா ரம் | நவரோசு | ஆதி | ”ப.98 |
| 8. | ஏழிசையாய் இசை | பழம் பஞ்சுரம் | சங்கரா பரணம் | திச்ர திரிபுடை | ”ப.99 |
| 9. | கொடுகு வெஞ்சிலை | பழம் பஞ்சுரம் | ” | மிச்ரசாபு | ”ப.101 |
| 10. | மற்றுப் பற்றெனக்கின்றி | பழம் பஞ்சுரம் | ” | ஆதி | ப.103 |
| 11. | முதுவாய் ஓரி கதற | கொல்லிக் கௌ வாணம் | நவரோசு | ஆதி | ”ப.24 |

| | | | | |
|---|---|---|---|---|
| 12. மடித்தாடும் அடிமை | குறிஞ்சி | அரிகாம் போதி | திச்ர திரிபுடை | "ப.106 |
| 13. முன்னவன்எங்கள் | நட்ட ராகம் | காம வர்த்தினி | ரூபகம் | "ப.107 |
| 14. பொன்னார்மேனியனே | " | " | " | "ப.108 |
| | | சங்கரா பரணம் | ரூபகம் | தமிழ்ப் பாட்டுக்கள்4 |
| 15. விற்றுக் கொள்வீர் | செந் துருத்தி | மத்ய மாவதி | ஆதி | மூ.தி.பா. |
| 16. அந்தணாளன்உன் | தக்கேசி | காம்போதி | ஆதி | "ப.111 |
| 17. வானநாடனேவழி | " | " | " | "ப.112 |
| 18. தலைக்குத் தலை மாலை | இந்தளம் | மாயா மாளவ கௌளை | ஆதி | "ப.113 |
| 19. படங்கொள்நாகம் | இந்தளம் | மாயாமாளவ கௌளை | ரூபகம் | மூ.தி.பா ப. 115 |
| 20. பரவும் பரி சொன்று)றி | காந்தார பஞ்சமம் | கேதார கௌளை | ஆதி | "ப.116 |
| 21. பித்தா பிறைசூடி | - | சுரடி | ரூபகம் | தமிழ்ப் பாட்டுக்கள் ப.7 |

| | | | | |
|---|---|---|---|---|
| ” | இந்தளம் | மாயா மாளவ கௌளை | ரூபகம் | தே.தி.தி. பாடல்கள் ப.3 |
| ” | ” | ” | | |
| 22. இத்தனை யாமாற்றை | நட்ட ராகம் | பந்து வராளி | கண்ட சாபு | தே.தி.தி பாடல்கள் ப.22 |
| 23. தானெனை முன்படைத்தான் | பஞ்சமம் | ஆகிரி | ரூபகம் | ”ப.34 |
| 24. பத்திமையும் | பழம் பஞ்சுரம் | சங்கரா பரணம் | ஆதி | தே.தி.தி. பாடல்கள். ப.29 |
| 25. மீளாஅடிமை | செந் துருத்தி | மத்திய மாவதி | திச்ர திரிபுடை | தே.தி.தி பாடல்கள் ப.31 |

சுந்தரரின் ஒருசில பாடல்கள், பாடுமுறையில் பழமையான மெட்டுக்களில் மரபுவழியாகப் பாடப்பட்டு வருகின்றன. இவற்றைப் பின்வரும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

## பழமையான இசை மெட்டுக்களும் சுந்தரர் பாடல்களும்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரர் ஆகிய தேவார மூவருள், சுந்தரர் அருளிய தேவாரப் பாடல்கள் மரபுவழி மெட்டுக்கள் வாயிலாகப் பிரபலமடைந்துள்ளன. தென்னிந்திய இசையில், மெட்டு, வர்ண மெட்டு என்னும் பெயர்கள் பாடல்களின் இசைப் பகுதியைக் குறிக்கும். இம்மெட்டுக்கள் மரபு வழியாக

பாதுகாக்கப்பட்டு வருகின்றன. பொதுவாக மெட்டு என்றாலே நாட்டுப்புற இசை மெட்டு அல்லது திரையிசை மெட்டு என்றே நாம் கருதி வருகிறோம். ஆனால் செவ்விசையிலும் (Classical Music) மெட்டுக்கள் அன்றிலிருந்து இன்று வரை பெரும் பங்களித்து வருகின்றன. எளிமையான முறையில் பண்களின் (இராகங்களின்) முழு வடிவத்தையும் வெளிப்படுத்துதலே மெட்டுக்களின் பங்காகும். சுந்தரமூர்த்தி சுவாமிகளின் கீழ்க்கண்ட பாடல்கள் இவ்வாறு பழமையான மெட்டுக்களில் பிரபலமடைந்த பாடல்களாகும்.

1. பித்தா பிறைசூடி
2. நீள நினைந்தடியேன்
3. மற்றுப் பற்றெனக்கு
4. தில்லை வாழந்தணர்தம்
5. பொன்னார் மேனியனே
6. வாழ்வாவது மாயம்

இனி இப்பாடல்களின் பண் இசையையும் மெட்டு வடிவங்களையும் இவை பாடப்பட்டு வரும் முறையையும் தனித்தனியாக ஆராயலாம்.

1. பித்தா பிறைசூடி பெருமானே யருளாளா (VII-1-1) எனத் தொடங்கும் பதிகம். இஃது சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருமணத்தில் தடுத்தாட் கொண்ட போது, இறைவன் கட்டளைப்படியே, “பித்தா” எனத் தொடங்கிப் பாடிய பாடல். திருவெண்ணெய் நல்லூர்த் தல திருப்பதிகம். தேவாரப் பதிப்புக்களில் இப்பாடலுக்குரிய பண்ணாக இந்தளப் பண் குறிப்பிடப்பட்டுள்ளது. ஓதுவார்களும் மரபுவழியில் இந்தளப் பண்ணிலேயே பாடி வருகின்றனர். நூல்களிலும் சுரதாளக் குறிப்புடன் கொடுக்கப்பட்டுள்ளது. இருப்பினும் இப்பாடல் சுரடி இராகத்திலமைந்த மெட்டில் மிகப் பிரபலமாகப் பாடப்பட்டு வருகின்றது. இம்மெட்டு இப்பாடல்

மூலம் இன்றும் மக்களிடையே நிலவி வருகிறது எனக் கூறின் மிகையாகாது. சுரடி இராகம் மேற்கண்ட மெட்டில் இப்பாடல் சுரதாளக் குறிப்புடன் 1924-ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்ட சங்கீத ரசார்ணவம் என்ற நூலில் இடம்பெற்றுள்ளது.

பாடல்களின் இசை சுரதாளக் குறிப்புடன் எழுதி பாதுகாக்கப்பட வேண்டும் என்ற விழிப்புணர்வு ஏற்பட்ட காலத்திலேயே கிட்டத்தட்ட எழுபது ஆண்டுகளுக்கு முன்னரே இப்பாடல் மேற்கண்ட இராகத்தில் சுரதாளக் குறிப்புடன் வெளிவந்திருப்பதால், இம்மெட்டு எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் பெருவழக்கில் இருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம். பஜனைகளில் பக்தி உணர்வோடு அனைவரும் சேர்ந்து பாடுவதற்கு ஏதுவாக இவை எளிய மெட்டில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. சுரடி இராகத்தின் முழுச் சாயலும் வெளிப்படும் வகையில் அமைந்துள்ளமை இம்மெட்டின் சிறப்பாகும். இப்பாடல் இசை வருமாறு:

பாடலுக்குரிய பண் : இந்தளம் தாளம் : ரூபகம்
பாடும் முறை : சுரடி இராக மெட்டு
(28 ஆவது மேளகர்த்தவாகிய
அரிகாம்போதியில் பிறந்தது)

ஆரோசை : சரிமபதநிச்
அமரோசை : ச்நீதபமகபரீச

0|4 0|4

; நீ ச்ா; நீ தா நீ; ச்ா ; நீ தா
பித் தா பி றை சூ டி பெரு

| | |
|---|---|
| ; பத ச்நீ, தபமா<br>மா னே யரு | / மரீ, மபா, ; ;<br>/ ளா. ளா |
| ; மப நீ ; சாரீ<br>எத்தால் மற | / ச்ா ; ரிச்நித பாமா<br>/ வா தே. நினைக் |
| ; பமா ; மாமா<br>கின்றேன். மனத் | பதநித பமரீ; ;<br>துன்... னை... |
| ; பநி ச்ா நீதா<br>வைத்தாய் பெண்ணே | நீநீ ச்ா ; நீதா<br>தென் பால் வெண்ணெய் |
| ; பதச்நீ, தபமா<br>நல்லூ. ரருட் | ரிம ரிம பா ; ; ;<br>டு றை யு . . . |
| ; மபநீ ச்ரி ரிம்<br>ளத்தாவுனக் | ச்ா ரிச்நித பாபா<br>கா. ளா ..யினி |
| ; மாமா ; மாமா<br>யல்லே னென<br>சா | பதநித பாமா ரீ ;<br>லா.. மே.. |

இவ்வாறு இப்பதிகத்தின் 4, 7, 9, 10 பாடல்கள் பிரபலமாகப் பாடப்பட்டு வந்துள்ளன.

2. "நீள நினைந்தடியேன்" (VII-20 : ) குண்டையூர்க் கிழாரென்னும் வேளாளருக்கு இறைவன் அருளால் அவ்வூர் முழுவதும் நிறையும் படியாக நெல்மலை உருவாக்கப்பெற்றது. அந்நெல் மலையைப் பரவையார் மாளிகைக்கு எடுத்துச் செல்ல சிவபெருமான் தான் ஆட்களையும் தந்தருள வேண்டும் என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கோளிலி என்னும் தலத்திற்குச் சென்று இப்பாடலைப் பாடினார். இஃது நட்டராகப் பண்ணில் அமைந்தது.

ஆனால் இப்பாடல் தோடி இராகத்தில் அமைந்த மெட்டில் பரவலாகப் பாடப்பட்டு வருகின்றன. இம்மெட்டும் சுரதாளக் குறிப்புடன் சங்கீத ரசார்ணவம் என்ற நூலில் இடம் பெற்றுள்ளமையால் இதனைப் பழமையான மெட்டாகக் கருதலாம்.[3]

தோடி இராகம் பழமையான இராகமாக இருந்திருப்பினும் தற்போதுள்ள 24 தேவாரப் பண்களில் இந்த இராகம் இடம்பெறவில்லை. பண்டைய விளரிப்பாலை என்பதே இக்காலத்தில் தோடி எனப்படுகிறது. இது தேவாரத்திலும் இருந்து செல்லரித்த ஏடுகளோடு அந்தப் பாடல்களும் மறைந்து போயிருக்கலாம் என்பர் பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்தரேசனர்[4]. நாட்டுப்புற இசை மெட்டுக்களுள், 'வழிநடைச்சிந்து' என்னும் மெட்டுத் தோடி இராகத்தை அடிப்படையாகக் கொண்டது. தமிழ் இலக்கணத்தில் அகவற்பா இந்த இராகத்திற்குரியது என்பர். எனவே பண்டைய தோடி இராக மெட்டுச் சுந்தரர் பாடல்களில் நன்கு பொருந்தியுள்ளது எனக் கருதலாம். இனி, இம்மெட்டினைச் சுரதாளக் குறிப்புடன் காணலாம்.

இராகம் : தோடி (8ஆவது மேளர்த்தா இராகம்)
தாளம் : ரூபகம்

ஆராசை : சரிகமபதநிச்
அமரோசை : ச்நிதபமகரிச

| | |
|---|---|
| 0\|4 | 0\|4 |
| தாதா தாதா தாதா | பா ; ; ; பாதப |
| நீ ள நினைந் தடி | யே ... னுமை |
| மபதப மாகா ரீசா | ரிகமா ; ; மககா |
| நித்த லுங்கை தொழு | வேன் . . . . . . |

| | |
|---|---|
| ரீசா ரீகா காமா | பதநீ தநிதப மகரிச |
| வாள னகண் மட | வா . . . . . . . . |
| சரிகரி சா சநிதாநீ | சா ; ; ; ரிகமப |
| வா.டி வ ருந்தா | மே. . . . . . |

இவ்வாறே மற்ற அடிகளையும் பாடவேண்டும்

**கோளிலி யெம் பெரு மான் குண்டை**
**யூர்ச்சில் நெல்லு பெற்றேன்**
**ஆளிலை யெம் பெரு மா னவை**
**யட்டித் தரப் பணியே.**

3. "மற்றுப் பற்றெனக் கின்றி" (VII-48:1) எனத் தொடங்கும் பாடல் திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் தலத்துப் பதிகமாகும். இஃது பழம் பஞ்சுரப் பண்ணில் அமைந்தது. இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடல் முடிவிலும், "சொல்லும் நாநமச்சிவாயவே" என்னும் தொடர் வந்துள்ளமையால், இப்பதிகம் "நமச்சிவாயத் திருப்பதிகம்" எனும் சிறப்புப் பெயர் கொண்டு விளங்குகிறது.

இப்பாடல் தேவாரப் பதிப்புக்களில் பண் பழம் பஞ்சுரம் என்றிருப்பினும், ஓதுவார் முறையில் சங்கராபரண இராகத்தில் பாடப்பட்டு வரினும், முன்னர் கூறப்பட்ட தோடி இராக மெட்டில் மிகவும் பிரபலமடைந்துள்ளது. இம்மெட்டு பேராசிரியர் சாம்பமூர்த்தி பதிப்பித்துள்ள Selections from Tamil Compossers என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் இடம் பெற்றுள்ளமையால் இந்நூலின் பதிப்பு ஆண்டான 1935 ஆம் ஆண்டின் முன்னரே இம்மெட்டுப் பிரபலமடைந்துள்ளது என்றறியலாம். இம்மெட்டுச் சுரதாளக் குறிப்புடன் இங்கு தரப்படுகிறது.[5]

பாடலுக்குரிய பண் : பழம் பஞ்சுரம்  தாளம் : ரூபகம்
பாடப்பட்டு வரும் மெட்டு தோடி
(8ஆவது மேளகர்த்தா இராகம்)

ஆரோசை : சரிகமபதநிச்
அமரோசை : ச்நிதபமகரிச

| 0\|4 | 0\|4 | 0\|4 | 0\|4 |
|---|---|---|---|
| தததா த த | பபபா தப | மபதப பமகா ரிச | சரி கக மா |
| மற்றுப்பற் றெனை | கின்றிநின்திருப் | பாத மே மனம் | பாவித்தேன் |
| சரிகக மா | பதநீ தபமா அரி | சரிகா ரீ சச | தநி சா; |
| பெற்றலும் பிறந் | தே.வி.வி பிற | வா. த தன்மைவந் | தெய்தினேன் |
| தததா தத | பப பா தப | மபதப பமகா ரிச | சரி கக மா |
| கற்றவர் தொழு | தேத்தும் சீர்க்கறை | யூ ரிற் பாண்டிக்கொ | டுமு.டி. |
| சரி கம மம | பதநீ தபமா கரி | சரிகா ரீ ரிசசா | தநி சா ; |
| நற்றவா வுன்னை | நான் மற..க்கினும் | சொல்லு நாநமச்சி | வாய வே. |

(பின்வரும் அடியையும் இதே மாதிரி பாடவும்)

**இட்டனும்மடி யேத்துவாரிகழ்ந் திட்டநாள மறந் திட்டநாள்**
**கெட்டநாளிவை யென்றலால் கரு தேன் கிளர் புனற் காவிரி**
**வட்டவாசிகை கொண்டடித் தொழு தேத்துப் பாண்டிக்கொ டுமுடி**
**நட்டவாடின்னை நான் மறக்கினுஞ் சொல்லு நா நமச்சி வாயவே.**

என்றவாறு இப்பதிகத்தின் இரண்டாம் பாடல் தரப்பட்டுள்ளது.

4. "பொன்னார் மேனியனே (VII - 24:1) எனத் தொடங்கும் பாடல், திருமழபாடி தலத்தில் பாடப் பெற்றது. நட்டராகப் பண்ணிலமைந்தது. இப்பாடல் நட்டராகப் பண்ணில் ஓதுவார்களால் பாடப்பட்டு வரினும், குறிஞ்சி இராகத்திலமைந்த எளிமையான மெட்டில் எழுபது ஆண்டுகளாகப் பாடப்பட்டு வருகின்றது. இம்மெட்டு மிகப் பழமையானது. மேற்கண்ட பாடலின் மூலம் இம்மெட்டு இன்றும் அழியாமல் பாதுக்காக்கப்பட்டு வருகின்றது. இஃது சங்கீத ரசார்ணவம் என்ற நூலில் சுரதாளக் குறிப்புடன் காணப்படுகிறன்றது.[6]

பாடலுக்குரிய பண் : நட்டராகம் தாளம் : ரூபகம்
பாடப்படும் மெட்டு : சங்கராபரண
இராகத்திலமைந்தது
(29ஆவது மேளகர்த்தா இராகம்)
ஆரோசை : சரிகமபதநிச்
அமரோசை : ச்நிதபமகரிச

| 0\|4 | | 0\|4 |
|---|---|---|
| சநிசா; | சரிகா ரீ | கா; கா; காகா |
| பொன்னார் | மேனிய | னே ... பு லித் |
| மத பா மா | காமாகா | ரீ ; ; ; ; ; |
| தோ லைய | ரைக்கசைத் | து . . . . . |
| கம பா ; | பம தாதா | பா ; ; ; ரீகா |
| மின்னார் | செஞ்சடை | மேல் . . . மிளிர் |
| மத பா மகரீ | கமகரி | சா ; ; ; ; ; |
| கொன்றை ய.ணிந்த. வ | | லே.... |

(இவ்வாறே மற்ற அடிகளையும் பாடவேண்டும்)

***மன்னே மாமணியேமழபாடியுள் மாணிக்கமே***
***அன்னே உன்னை அல்லால் இனி யாரை நினைக்கேனே?***

5. "தில்லை வாழந்தணர்தம்" (VII - 39 : 1) எனத் தொடங்கும் பதிகம் "திருத்தொண்டத் தொகை" என்னும் தலைப்பின் கீழ் இடம்பெற்றுள்ளது. இதற்குரிய பண் கொல்லிக் கௌவாணம் ஆகும்.

இப்பதிகத்திற்குரிய பண்ணாகக் கொல்லிக் கௌவாணம் தரப்பட்டிருப்பினும் இஃது மரபுவழியாக எதுகுலகாம்போதி இராகத்தில் பாடப்பட்டு வருகின்றது.[7] இந்த இராகத்திற்குரிய பண்ணானச் செவ்வழிப் பண்ணில் சுந்தரர் பாடியுள்ள பாடல்கள் காணப்படவில்லை. இந்நிலையில் இம்மெட்டுச் சிறப்புப் பெறுகின்றன. இதற்குரிய சுர தாளக்குறிப்பு வருமாறு:

பாடலுக்குரிய பண் : கொல்லிக் கௌவாணம் தாளம் : கண்டசாபு

பாடப்படும் மெட்டு : எதுகுல காம்போதி
இராகத்திலமைந்தது
(28 ஆவது மேளகர்த்தாவாகிய
அரிகாம்போதியில் பிறந்தது)

ஆரோசை சரிமபதச்
அமரோசை ச்நிதபமகரிச

| 5 | ṡ |
|---|---|
| ; சா ரீ மா | பா பா. பா பா |
| . தில் லை வா | ழந் த ணர் தம் |
| மா பா தா பா பா | மா பா தா ; ; |
| அ டி யார்க் கும | டி யேன்... |
| பா தா ச்ா பா பா | பமகா மககரி ரீ |
| திரு நீல | கண். டத்துக் |
| சா ரீ ரீ ரீ ; | பம கா மகரீ ; |
| குயவனார்க் | க டி யேன் |

இவ்வாறே இப்பதிகத்தில் மூன்றாம் மற்றும் பத்தாம் பாடல் பாடப்பட வேண்டுமென்ற குறிப்பு சங்கீத ரசார்ணவம் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

6. "வாழ்வாவது மாயம்" (VII - 78:1) எனத் தொடங்கும் பாடல், திருக்கேதாரத் தலத்தில் பாடப்பெற்றது. இதற்குரிய பண் நட்டபாடை, இருப்பினும் இப்பாடல் மரபு வழியாக சாமா இராகம்-சதுரச்ர ரூபக தாளத்தில் பாடப்பட்டு வருகின்றது. சாமா இராகத்திற்கு நேரானப் பண்ணாக பழந்தக்கராகப் பண்ணில் சுந்தரர் பாடிய பாடல்கள் காணப்பெறவில்லை. இந்நிலையில் இம்மெட்டுச் சிறப்புப் பெறுகிறது. இம்மெட்டின் சுரதாளக் குறிப்பு வருமாறு:

பாடலுக்குரிய பண் : நட்டபாடை தாளம் : ரூபகம்
பாடல் பாடப்பெறும் மெட்டு : சாமா இராகத்திலமைந்தது
(29ஆவது மேளகர்த்தாவாகிய சங்கராபணத்தில் பிறந்தது.)

ஆரோசை : சரிமபதச்
அமரோசை : ச்தபமகரிச

| 0\|4 | | 0\|4 |
|---|---|---|
| பா; | தச்தா பா பா | தபமா மககரி ரீரீ |
| வாழ். | வா.. வ து | மா. . யம். மிது |
| பா; | தச்தா பாபா | மபதப மாமா கரிரீ |
| வாழ் | வா. . வது | மா. . யம் மிது |
| சரிரிம | சரீச சாசா | சா ; சா ; ; |
| மண்.. | ணா. . வது | திண் ணம் . . |
| ; சரி மா ; மாமா | | பாபா தா ; பாபா |
| பாழ் போ வது | | பி ற விக் கடல் |
| பாதா ச்ா ; பாதா | | பா பா தபமா மகரீ |
| பசி நோய் செய்த | | ப றி தான். . |

(இவ்வாறே மற்ற அடிகளையும் பாடவேண்டும்.)

**தாழாதவும் செய்ம்மின் தடங்கண்ணான் மலரோனும்**
**கீழ்மேல்உற நின்றான் திருக்கேதாரம் எனீரே**

இப்பதிகத்தில் 5, 7, 9, 10 ஆகிய பாடல்கள் இந்நூலில் தரபபட்டுள்ளன.[8]

## ஒலி நாடாக்களில் சுந்தரர் பாடல்கள்

| எண் | பாடலின் தொடக்கம் | பண் | இராகம் | பாடுமுறை தாளம் | பாடியவர் |
|---|---|---|---|---|---|
| 1. | பித்தா பிறைசூடி | இந்தளம் | நாதநாம கிரியை | ரூபகம் | திருப் பனந்தாள் சோ. முத்துக் கந்தசாமி தேசிகர் |
| 2. | தம்மானை | கொல்லிக் கௌ வாணம் | நவரோசு | கண்டசாபு | ” |
| 3. | வானநாடனே | தக்கேசி | காம் போதி | ஆதி | ” |
| 4. | பத்திமையும் | பழம் பஞ்சுரம் | சங்கரா பரணம் | ஆதி | ” |
| 5. | மீள அடிமை | செந் துருத்தி | மத்திய மாவதி | திரிபுடை | ” |
| 6. | விற்றுக் கொள்வீர் | ” | ” | ” | ” |

| | | | | |
|---|---|---|---|---|
| 7. | அந்தியும்நண்பகலும் | புறநீர்மைபெளளி | ஆதி | தருமபுரம் பி. சுவாமிநாதன் |
| 8. | வெண்கொடி | பஞ்சமம் ஆகிரி | ஆதி | ,, |
| 9. | கதிர்கொள் | காந்தார பஞ்சமம் கேதார கௌளை | ஆதி | ,, |
| 10. | ஆயம்பேடை | செந் துருத்தி மத்திய மாவதி | திரிபுடை | ,, |
| 11. | வடிவுடை மழுவேந்தி | புறநீர்மைபெளளி | சாபு | லால்குடி சுவாமிநாதன் |
| 12. | தானெனை முன் படைத்தான் | பஞ்சமம் ஆகிரி | ரூபகம் | ,, |
| 13. | ஊழி தோறூழி | பஞ்சமம் ஆகிரி | ரூபகம் | சேலம் ஜெயலட்சுமி |

மேற்கூறிய பாடல்களனைத்தும் பண்முறையிலேயே அமைந்துள்ளன. வரிசை எண். 11, 12, 13 ஆம் பாடல்கள் தமிழ்ப் பல்கலைக்கழக இசைத் துறையில் ஒலிநாடா சேகரிப்பில் உள்ளன.

இவ்வியலில் சுந்தரர் பாடல்களில் பதிப்புகளில் கண்ட பண்களுக்கும், பதிகங்கள் பாடுமுறைக்கும் உள்ள வேறுபாடு காட்டப்பட்டுள்ளன. மூவர் தேவாரங்களுள் சுந்தரர் பாடல்கள் மட்டுமே மரபுவழிப் பண் முறையிலிருந்து விலகி மெட்டுக்களின் வாயிலாகப் பிரபலமடைந்துள்ளன என அறிய முடிகிறது. இம்மெட்டுக்கள் 1924ஆம் ஆண்டிலேயே சுரதாளக் குறிப்புடன் நூல்களில் பதிவாகி இருப்பதால் இவற்றை மற்றொரு வகையான 'மரபு வழிப் பாடுமுறை' எனக் கருத வாய்ப்புள்ளது.

சுந்தரர் பாடல்களில் ஒருசில சுத்தாங்கமாகப் பாடப்பட்டுவரினும் பெரும்பாலும் பண்ணாங்கமாகவே பாடப்பட்டு வருகின்றன என்பது குறிப்பிடத் தகுந்தது.

சுந்தரரின் பண்முறைத் தேவார இசையும் மெட்டுக்கள் வழிப் பிரபலமடைந்த தேவார இசையும் தொகுக்கப் பட்டுள்ளன. இதனடிப்படையில் இதுவரையில் சுரதாளக் குறிப்புடன் வெளிவராத பாடல்களுக்கு இசையமைத்தும் சுரதாளக் குறிப்பு அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றை இசை நிறுவனங்களில் பயிற்றுவிக்க ஆவன செய்தல் இன்றியமையாப் பணியாகும்.

## குறிப்புகள்

1. தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள், ப.3.
2. சங்கீத ரசார்ணவம், ப. 273.
3. மேற்படி நூல், ப.276.
4. பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப.15
5. தமிழ்ப் பாட்டுக்கள், முதல்பாகம், ப.2.
6. சங்கீத ரசார்ணவம், ப.279.
7. மேற்படி நூல், ப.282
8. சங்கீத ரசார்ணவம், ப. 283

# இயல் ஐந்து

## முடிவுரை

நான்கு இயல்களிலும் கண்ட முடிவானச் செய்திகளை, பதிக அமைப்பு, பாடுபொருள், கட்டளை, பாடுமுறை, இசைக் குறிப்புக்கள் என்றவாறு தொகுத்துக் காணலாம்.

### *1. பதிக அமைப்பு*

சுந்தரர் பதிகங்கள் பெரும்பாலும் 10 பாடல்களைக் கொண்டதாகக் காணப்படுகின்றன. இறுதிப்பாடல் பதிகப் பயன் கூறும் பாடலாக (திருக்கடைக்காப்பு) அமைந்துள்ளது. 11ஆம் பதிகம் எட்டுப் பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது. இருப்பினும் திருக்கடைக்காப்புப் பாடலான எட்டாம் பாடலில், "ஊரன் உரைத்த சொல் மாலைகள் பத்து இவை" என்னும் தொடர் பதிப்பில் காணப்படுவதால், இப்பதிகத்திலும் 10 பாடல்கள் இருந்திருக்க வேண்டும் எனவும், இவை கிடைக்கவில்லை எனவும் கருத வாய்ப்புள்ளது. சுந்தரரின் திருப்பதிகங்கள் திருஞானசம்பந்தர் பதிகங்களைப் போன்று இறுதிப்பாடல் திருக்கடைக் காப்பாகவும், எட்டாம் பாடல் இராவணன் பற்றிய குறிப்பு அமைந்த பாடலாகவும் அமையப் பெற்றுள்ளன.

சுந்தரர் பதிகங்கள் ஒருசில தொகைப் பதிகமாக அமைந்துள்ளன. 12-ஆம் பதிகம் திருநாட்டுத் தொகை என்னும் தலைப்பில் பல ஊர்ப் பெயர்கள் பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன. இவ்வாறே திருஇடையாற்றுத் தொகைப் பதிகம் (பதிக எண். 31) ஊர்த்தொகை (பதிக எண். 47) திருத்தொண்டத் தொகை ஆகிய பதிகங்கள் ஊர்ப் பெயர்கள். சிவன் அடியார்களின் பெயர்கள் ஆகியவற்றைத் தொகுத்துக் கூறுவனாக அமைந்துள்ளன. இவ்வகைப் பதிகங்களே பிற்காலத்தில் சங்கீத மும்மூர்த்திகளான தியாகராஜ சுவாமிகள்,

முத்துசுவாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் ஆகியோர் இயற்றிய தொகுதி கீர்த்தனைகள், சமுதாய கீர்த்தனைகள் அல்லது கொத்துக் கீர்த்தனைகள் ஏற்பட வழிகோலின எனக் கூறின் மிகையாகாது.

### *பாடுபொருள்*

பெரும்பாலானப் பாடல்கள் இகழ்வது போல் புகழ்ந்து பாடும் வஞ்சப்புகழ்ச்சிப் பாடல்களாக அமைந்துள்ளன. வடமொழியில் இவ்வகைப் பாடல்கள் 'நிந்தாஸ்துதி' எனப்படும். பிற்காலத்தில் மாரிமுத்தா பிள்ளை இவ்வகைப் பாடல்கள் பாடுவதற்குச் சுந்தரரின் பாடல்களே முன்னோடியானவை எனக் கூறின் மிகையாகாது.

நிலையற்ற இவ்வுலக வாழ்வை நீக்கி இறைவனை அடைவோம் என்னும் கருத்திலும், மனதை முன்னிலைப்படுத்தி நெஞ்சுக்கு அறிவுறுத்தும் வகையிலும் பல இடங்களில் பாடியுள்ளார். பெண்களின் மாயவலையில் சிக்குண்டு மதிமயங்கி அழிந்தவன் என்று தம்மை இழித்துக் கூறுகிறார்.

பொதுவாக, சுந்தரரின் பாடல்கள் சிவபெருமானின் உருவ வருணனை, தலவருணனை, இயற்கை வருணனை, சிவபெருமானின் பண்பு நலன்கள், அவர் புரிந்த திருவிளையாடல்கள், சுந்தரர் தம் வாழ்வில் கிடைத்த இறைவனின் அருட்பாங்கு ஆகியவற்றை உள்ளடக்கமாகக் கொண்டு திகழ்கின்றன.

சிவபெருமானை உரிமையோடு கடிந்து தோழமை உணர்வோடு பாடல்கள் பாடியிருப்பது சுந்தரர் பாடல்களின் சிறப்புக்கூறு எனக் கூறலாம்.

பல்வேறு உவமைகள் சுந்தரர் பாடல்களில் காணப்படுகின்றன. "பாலவியின் கரைமேல் உறைபவன்"

என்னும் தொடர்மூலம், பனிபடர்ந்த கேதீச்சுரத்தை நம் கண்முன் நிறுத்துகின்றார்.

37-ஆம் பதிகம் அகத்துறைப் பாடல்களைக் கொண்டு திகழ்கின்றது. 79-ஆம் பாடல் மலைநாடு - புனம் காக்கும் பெண் கிளியை ஒட்டும் செயல் நாடகபாணியில் சித்தரிக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டும் சங்க இலக்கியப் பாடல்களோடு ஒப்பிடக்கூடிய வகையில் அமைந்துள்ளன.

## கட்டளை

இரண்டு மூன்றாம் இயல்களில் சுந்தரர் பதிகங்களின் முதற்பாடல் - முதல் வரிக்குச் சந்தக் குழிப்பு அமைத்தும், சீர் பிரித்துப் பார்த்து இவற்றைத் திருமுறைகண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள கட்டளைகளோடு ஒப்பிட்டு ஆய்வு செய்ததின் வாயிலாக பண்களுக்குரிய கட்டளைகள் பின்வருமாறு பட்டியலிடப்பட்டுள்ளன.

| வ. எண். | பண்கள் | கட்டளைகள் | |
|---|---|---|---|
| | | திருமுறைகண்ட புராணத்தில் குறிப்பிடப் பட்டவை | இந்த ஆய்வு மூலப் பெறப் பட்டவை |
| 1. | காமரம் | ஒன்று | இரண்டு |
| 2. | நைவளம் | இரண்டு | இரண்டு |
| 3. | காந்தாரம் | இரண்டு | நான்கு |
| 4. | குறிஞ்சி | இரண்டு | மூன்று |
| 5. | இந்தளம் | இரண்டு | நான்கு |
| 6. | புறநீர்மை | இரண்டு | இரண்டு |
| 7. | தக்கராகம் | இரண்டு | இரண்டு |
| 8. | பஞ்சமம் | ஒன்று | ஒன்று |
| 9. | பழம்பஞ்சுரம் | இரண்டு | இரண்டு |
| 10. | நட்டராகம் | இரண்டு | இரண்டு |

| | | | |
|---|---|---|---|
| 11. | தக்கேசி | நான்கு | ஒன்று |
| 12. | கொல்லி | மூன்று | இரண்டு |
| 13. | காந்தாரபஞ்சமம் | ஒன்று | ஒன்று |
| 14. | பியந்தைக் காந்தாரம் | ஒன்று | ஒன்று |
| 15. | கௌசிகம் | ஒன்று | ஒன்று |
| 16. | கொல்லிக் கௌவாணம் | மூன்று | நான்கு |
| 17. | செந்துருத்தி | ஒன்று | ஒன்று |

இவ்வியல்களில் இதுவரை சுரதாளக்குறிப்புடன் நூல்களில் வெளிவராத 15 பண்களில் அமைந்த 15 பாடல்களுக்குச் சுரதாளக் குறிப்புக்கள் அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

### *பாடுமுறை*

இயல் நான்கில் சுந்தரர் தேவாரப் பதிக இசை ஆராயப்பட்டதில், பெரும்பாலானப் பாடல்கள் பண்ணாங்கமாகவே பாடப்படுவதாக அறியப்பட்டது. ஒருசில பாடல்கள் சுத்தாங்கமாகவும் அமைந்துள்ளன. பதிகங்கள் பெரும்பாலும் இவற்றிற்குக் கொடுக்கப்பட்டுள்ள பண்களிலேயே பாடப்படுகின்றன. சில பாடல்கள் அவற்றிற்குரிய பண்களல்லாது வேறு இராகங்களில் பழமையான இசை மெட்டுக்களில் பாடப்பட்டு வருகின்றன. இவை தேவார ஓதுவார்களாலேயே மரபு வழியாகப் பாடப்பட்டு வருவதால் இதனை மரபு மீறிய பாடுமுறை என்று கொள்ள முடியவில்லை. இது மற்றொரு வகையானப் பாடுமுறை என்றே கொள்ள வேண்டியுள்ளது.

### *இசை குறிப்புக்கள்*

சுந்தரர் பாடல்களில் மந்தம், முழவு, குழல், யாழ், பறை, கொடுகொட்டி, வீணை, தக்கை, தண்ணுமை, தாளம், தகுணிச்சம், கிணை, சல்லரி, கொக்கரை, குடமுழவு, தத்தளகம், துந்துபி ஆகிய இசைக்கருவிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

கொட்டு ஆட்டொடு பாட்டு ஒலி என்னும் தொடர் பல இடங்களில் காணப்படுகின்றன. தாள இசையும் கொட்டாட்டுப் பாட்டு என்று குறிப்பிடுகிறார். இஃது வடமொழி நூல்களில் காணப்படும் கீத, வாத்ய, நிருத்ய என்னும் தொடரோடு ஒப்பிடப்பட்டுள்ளது. காமரத்திசை பாட நாவில் ஊறு நள்ளாறனை என்னும் தொடரில் சிவபெருமான் காமரப் பண் இசையில் விருப்புடையவன் என்னும் குறிப்பைத் தருகிறார்.

சுந்தரர் பாடல்களில் பல்வேறு இசைக்கலைச் சொற்கள் கிடைத்துள்ளன. இறைவனின் புகழைக் கூறும் பாடல் திருப்புகழ் என்ற பெயரில் கையாளப்பட்டுள்ளது. தமிழ் மொழியில் அமைந்த இசை "தமிழிசை" என்றும், குரல், துத்தம், கைக்கிளை முதலான ஏழு இசைகள் "ஏழிசை" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஒருசில குறிப்புக்களில் "பண்" குரலிசையையும் "யாழ்" கருவி இசையையும் குறிப்பாகத் தந்துள்ளார்.

இறைவனின் திரு நடனம் காட்டினையே அரங்கமாக்கிக் கொண்டு ஆடப்பட்டுள்ளது என்று பல இடங்களில் பாடுகிறார்.

## பிற குறிப்புக்கள்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசரைப் போன்று சமணரை இழித்தும் பழித்தும் கூறுகிறார். அதோடுகூட சமணர்களின் பெயர் குறிப்பு, அவர்கள் ஓதும் மந்திரக் குறிப்பும் ஒருசில பாடல்களில் காணப்படுகின்றன. திருஞானசம்பந்தருக்குக் காசு நித்தம் நல்கிய சிவபெருமானின் கருணையையும் பொற்றாளம் கொடுத்த செயலையும் ஏத்திப் பாடுகின்றார்.

கோட்புலி நாயனாரின் புதல்வியர் சிங்கடியார், வனப்பகையாரைச் சுந்தரர் தம் புதல்வியாகவே மதித்துப் பல

பாடல்களில் தாம், "சிங்கடி அப்பன்" என்றும், "வனப்பகை அப்பன்" என்னும் குறிப்பினை அமைத்துப் பாடுகிறார். தம்முடைய பெற்றோராகிய சடையனார் இசை ஞானியாரையும் கூறி தாம் அவர்களின் சிறுவன் அல்லது புதல்வன் என்று குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

ஆகத் தேவார மூவருள் தம்பிரான் தோழராக விளங்கிய சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடல்கள் புனைவதில் தமக்கென்று ஒருசில உத்திகளைக் கையாண்டுள்ளார் எனத் தெரிகிறது. பாடல் இசை முறையிலும் மற்ற தேவார ஆசிரியர்கள் இயற்றிய பண்களோடுகூட, செந்துருத்திப் பண்ணில் பதிகம் இயற்றி தனித்தன்மையோடு விளங்குகின்றார். இத்தகைய சிறப்பு வாய்ந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளைச் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த இராமலிங்க சுவாமிகளின் வழியில் துதித்துப் போற்றுவோமாக!

**"ஏழிசையா யிசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய**
**தோழனுமாய்" என்னு முன்னி சொன்ன பெருஞ்**
**சொற்பொருளை**
**ஆழநினைந் திடில் அடியேன் அருங் கரணம் கரைந்து**
**கரைந்**
**தாழியிலொன் றாவது காண் உயர் கருணைப்**
**பெருந்தகையே**

திருவருட்பா - ஐந்தாம் திருமுறை - 3251
(ஆளுடைய நம்பிகள் அருண்மாலை)

# பிற்சேர்க்கை - I

# சுந்தரர் பதிகப் பட்டியல்

| வ. எண். | பாடலின் தொடக்கம் | பண் | தலம் |
|---|---|---|---|
| 1. | பித்தாபிறைசூடி | இந்தளம் | திருவெண்ணெய்நல்லூர் |
| 2. | கோத்திட்டையும் | ” | திருப்பரங்குன்றம் |
| 3. | கல்வாய் ஆகிலும் | ” | திருநெல்வாயில் அரத்துறை |
| 4. | தலைக்குத் தலைமாலை | ” | திருஅஞ்சைக்களம் |
| 5. | நெய்யும் பாலும் தயிரும் | ” | திருஓணகாந்தன்தளி |
| 6. | படம்கொள் நாகம் | ” | திருவெண்காடு |
| 7. | மத்தயானை ஏறி | ” | திருஎதிர்கொள்பாடி |
| 8. | இறைகளோடு | ” | திருஆரூர் |
| 9. | மலைக்கும்மகள் | ” | திருஅரிசிற்கரைப்புத்தூர் |
| 10. | தேன்நெய் புரிந்து | ” | திருக்கச்சி அனேகதங்காவதம் |
| 11. | திருஉடையார் | ” | திருப்பூவணம் |
| 12. | வீழக்காலனை | இந்தளம் | திருநாட்டுத்தொகை |
| 13. | மலைஆர் அருவித் | தக்கராகம் | திருத்துறையூர் |
| 14. | வைத்தனன்தனக்கே | ” | திருப்பாச்சிலாச்சிராமம் |
| 15. | பூண் நாண் ஆவது | ” | திருநாட்டியத்தான்குடி |
| 16. | குரும்பைமுலை | ” | திருக்கலயநல்லூர் |
| 17. | கோவலன் நான்முகன் | நட்டராகம் | திருநாவலூர் |
| 18. | மூப்பதும் இல்லை | ” | திருவேள்விக்குடி |
| 19. | அற்றவனார் | ” | திருநின்றியூர் |
| 20. | நீள நினைந்தடியேன் | ” | திருக்கோளிலி |
| 21. | நொந்தா ஒண்சுடரே | ” | திருக்கச்சிமேற்றளி |
| 22. | முன்னவன் எங்கள் பிரான் | ” | திருப்பழமண்ணிப் படிக்கரை |
| 23. | செடியேன் தீவினையில் | ” | திருக்கழிப்பாலை |

| | | | |
|---|---|---|---|
| 24. | பொன் ஆர் மேனியனே | நட்டராகம் | திருமழபாடி |
| 25. | பொன்செய்த மேனியினீர் | ” | திருமுதுகுன்றம் |
| 26. | செண்டுஆடும் விடையாய் | ” | திருக்காளத்தி |
| 27. | விடைஆரும் கொடியாய் | ” | திருக்கற்குடி |
| 28. | பொடிஆர் மேனியனே | ” | திருக்கடவூர் வீரட்டம் |
| 29. | இத்தனை ஆம்ஆற்றை | ” | திருக்கருகாவூர் வெள்ளடை |
| 30. | சிம்மாந்து சிம்புளித்து | ” | திருக்கருப்பறியலூர் |
| 31. | முந்தை ஊர்முதுகுன்றம் கொல்லி | ” | திருஇடையாற்றுத்தொகை |
| 32. | கடிது ஆய்க் கடல்காற்று | ” | திருக்கோடிக்குழகர் |
| 33. | பாறுதாங்கிய காடரோ | ” | - |
| 34. | தம்மையே புகழ்ந்து | ” | திருப்புகலூர் |
| 35. | அங்கம் ஓதிஓர் | ” | திருப்புறம்பயம் |
| 36. | கார் உலாலிய | ” | திருப்பைஞ்ஞீலி |
| 37. | குருகுபாய | நட்டராகம் | திருஆரூர் |
| 38. | தம்மானை அறியாத | கொல்லிக் கௌவாணம் | திருஅதிகைத்திரு வீரட்டானம் |
| 39. | தில்லைவாழ் அந்தனர் | ” | - |
| 40. | வள்வாய மதிமிளிரும் | ” | திருக்கானாட்டு முள்ளூர் |
| 41. | முதுவாய் ஓரிகதற | ” | திருக்கச்சூர் ஆலக்கோயில் |
| 42. | எறிக்கும் கதிர்வேய் | ” | திருவெஞ்சமாக்கடல் |
| 43. | நஞ்சி இடைஇன்றுநானள் | ” | திருமுதுகுன்றம் |
| 44. | முடிப்பது கங்கையும் | ” | பொது |
| 45. | காண்டனன் காண்டனன் | ” | திருஆமாத்தூர் |
| 46. | பத்து ஊர்புக்கு | கொல்லிக் கௌவாணம் | திருநாகைக்காரோணம் |
| 47. | காட்டூர்க் கடலே | பழம்பஞ்சுரம் | - |
| 48. | மற்றுப்பற்று எனக்கு | ” | திருப்பாண்டிக் கொடுமுடி |
| 49. | கொடுகு வெஞ்சிலை | ” | திருமுருகன்பூண்டி |
| 50. | சித்தம் நீ நினை | ” | திருப்புனவாயில் |
| 51. | பத்திமையும் அடிமையையும் | ” | திருஆரூர் |
| 52. | முத்தா முத்தி தரவல்ல | தக்கேசி | திருஆலங்காடு |

| | | | |
|---|---|---|---|
| 53. | மருஆர்கொன்றை | ,, | திருக்கடவூர் மயானம் |
| 54. | அழுக்கு மெய்கொடு | ,, | திருஒற்றியூர் |
| 55. | அந்தணாளன் உன் | ,, | திருப்புன்கூர் |
| 56. | ஊர்வது ஓர் விடை | ,, | திருநீடூர் |
| 57. | தலைக்கலன் தலைமேல் | ,, | திருவாழ்கொளிபுத்தூர் |
| 58. | சாதலும் பிறத்தலும் | ,, | திருக்கழுமலம் |
| 59. | பொன்னும் மெய்பொருளும் | ,, | திருஆரூர் |
| 60. | கழுதை குங்குமம்தான் | ,, | திருஇடைமருதூர் |
| 61. | ஆலம்தான் உகந்து | ,, | திருக்கச்சி ஏகம்பம் |
| 62. | புற்றில்வாள் அரவு | ,, | திருக்கோலக்கா |
| 63. | மெய்யை முற்றப்பொடி ' | ,, | - |
| 64. | நீறுதாங்கிய | ,, | திருத்தினைநகர் |
| 65. | திருவும் வண்மையும் | ,, | திருநின்றியூர் |
| 66. | மறையவன் ஒருமாணி | ,, | திருஆவடுதுறை |
| 67. | ஊன் அங்கத்து | ,, | திருவலிவலம் |
| 68. | செம்பொன்மேனி | ,, | திருநள்ளாறு |
| 69. | திருவும் மெய்ப்பொருளும் | ,, | வடதிருமுல்லைவாயில் |
| 70. | கங்கைவார் சடையாய் | ,, | திருஆவடுதுறை |
| 71. | யாழைப் பழித்தன்ன | காந்தாரம் | திருமறைக்காடு |
| 72. | எனக்கு இனித்தினைத்தனை | ,, | திருவலம்புரம் |
| 73. | கரையும் கடலும் மலையும் | ,, | திருஆரூர் |
| 74. | மின்னும் மா மேகங்கள் | ,, | திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் |
| 75. | மறைகள் ஆயினநான்கும் | ,, | திருஆனைக்கா |
| 76. | பொருவனார் புரிநூலர் | பியந்தைக் காந்தாரம் | திருவாஞ்சியம் |
| 77. | பரவும் பரிசொன்றறியேன் | காந்தார பஞ்சமம் | திருஐயாறு |
| 78. | வாழ்வு ஆவது மாயம் | நட்டபாடை | திருக்கேதாரம் |
| 79. | மானும் மரை இனமும் | ,, | திருப்பருப்பதம் |
| 80. | நத்தார் புடை ஞானன் | ,, | திருக்கேதீச்சுரம் |

| | | | |
|---|---|---|---|
| 81. | கொன்று செய்த கொடுமையால் | ,, | திருக்கழுக்குன்றம் |
| 82. | ஊன்ஆய் உயில்புகல்ஆய் | ,, | திருச்சுழியல் |
| 83. | அந்தியும் நண்பகலும் | புறநீர்மை | திருஆரூர் |
| 84. | தொண்டர் அடித்தொழலும் | ,, | திருக்கானப்பேர் |
| 85. | வடிவுடைமழுவேந்தி | ,, | திருக்கடலையாற்றூர் |
| 86. | விடையின்மேல் வருவானை | சீகாமரம் | திருவன் பார்த்தான் பனங்காட்டூர் |
| 87. | மாடமாளிகை | ,, | திருப்பனையூர் |
| 88. | நம்பினார்க்கு அருள் செய்யும் | ,, | திருவீழிமழலை |
| 89. | பிழை உளன பொறுத்திடுவீர் | ,, | திருவெண்பாக்கம் |
| 90. | மடித்தாடும் அடிமைக்கண் | குறிஞ்சி | கோயில் |
| 91. | பாட்டும் பாடிப் | ,, | திருஒற்றியூர் |
| 92. | எற்றால் மறக்கேன் | ,, | திருப்புக்கொளியூர் அவிநாசி |
| 93. | நீரும் மலரும் நிலவும் | ,, | திருநறையூர்ச்சித்தீச்சுரம் |
| 94. | அழல்நீர் ஒழுகி | கௌசிகம் | திருச்சோற்றுத்துறை |
| 95. | மீளா அடிமை | செந்துருத்தி | திருஆரூர் |
| 96. | தூவாயா தொண்டு செய்வார் | பஞ்சமம் | திருஆரூர்ப் பரவையுள் மண்டளி |
| 97. | ஆதியன் ஆதிரையன் | ,, | திருநனிபள்ளி |
| 98. | தண்இயல் வெம்மை யினான் | ,, | திருநண்ணிலத்துப் பெருங்கோயில் |
| 99. | பிறை அணிவாள் நுதலாள் | ,, | திருநாகேச்சுரம் |
| 100. | தான் எனை முன் | ,, | திருநொடித்தான்மலை |

## பிற்சேர்க்கை

101. பொன் ஆம் இதழி காந்தாரம் திருநாகைக்காரோணம்

## பிற்சேர்க்கை - II

## பண்களுக்குரிய இராகங்கள்

## உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் இயற்றிய அகவற்பா

"திருமுறை கண்டு தெரிந் தெடுத் தார்வமாய்
இருகண் களினும் இசைத்துப் பார்க்கவுமே
உருகுமோ ரிசைப்பண் ணொன்று மிலாமையால்
அருளுவ தெப்படி யம்பலவா வென்றே
பண்கள் தெரியாது பார்த்திபன் நம்பி
எண்குணத் தான்றன் இணையடி போற்ற
விண்ணிடை மொழியொன் றெழலுங் கேட்டு
மண்ணுள் யாழ்ப்பாணர் வழிவந் தவளைப்
பண்ணிசை கேட்டுப் பதிக முரைக்கும்
எண்ணிறைந்த முதலா யியற்று மகவலில்
சொன்ன தியற்று வாஞ் சொலும்பண் ணிராகமும்
பன்னு பழந்தக்கம் பயிலா ரபியாய்
மன்னுசெந் துருத்தி மத்திமா வதியாய்
தக்கரா கங்களும் தக்கேசி யாவும்
மிக்ககாம் போதி விதித்தது எனவும்
இந்தளம் நாதநாமக் கிரியை யென்றே
அந்திருத் தாண்டகம் அரிகாம் போதியாய்
விந்தைக் காந்தாரம் விளங்கு நவரோசுவாய்
சந்த சாதாரி தகுபந்து வராளியாய்
நற்சீ காமரம் நாதநாமக் கிரியையாய்
பொற்கௌ சிகமும் புகழும் பைரவியாய்
வியாழக் குறிஞ்சி மிளிர்சௌ ராட்டிரம்
தயாள பஞ்சமம் சாற்று மாகிரியாய்

பூந்திருக் குறுந்தொகை பூரிகலி யாணியாய்
காந்தாரப் பஞ்சமம் கேதார கௌளையாய்
நட்டபாடையும் நாட்டையென் றோதும்
நட்டராகமும் நற்பந்து வராளியாய்
ஏது செவ்வழியும் எதுகுல காம்போதி
புறநீர்மை என்னல் பூபாள மெனவும்
குறிஞ்சி யென்றோதும் குறிஞ்சி யேயாகும்
மேகராகக் குறிஞ்சி மேலான நீலாம்பரி
நேரிசை கொல்லி நேர்ந்த நவரோசுவாய்
தார்பழம் பஞ்சுரம் சங்கரா பரணம்
பியந்தைக் காந்தாரம் பேசுநவ ரோசுவாய்
அந்தாளிக் குறிஞ்சி அரியசாமா வென்று
எந்தை நம்பியு மியற்றின னிதனைத்
திருமுறை கண்ட திருப்புரா ணத்துள்
வருமுறை கண்டு வகுத்தனன் கட்டளை

ஆதாரம் : சீகாழி திருஞான சம்பந்த கண்ணுடைய வள்ளலார் ஆதீனத்திலிருந்த ஏட்டுச் சுவடியிலிருந்து கிடைத்ததாக திரு. ச.நடராச தேசிகர் குறிப்பிட்டுள்ளார்.

## பிற்சேர்க்கை - II

## சுந்தரர் கையாண்டுள்ள பண்களின் (இராக) இலக்கணம்

### 1. புறநீர்மை (பௌளி)

சேய் இராகம் 15ஆவது மேளகர்த்தாவாகிய மாயாமாளவ கௌளையில் பிறந்தது.

ஆரோசை : ச ரி க ப த ச்
அமரோசை : ச நி த ப க ரி ச

குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் வரும் சுவரங்களாவன

குறை துத்தம் (ரி 1), நிறை கைக்கிளை (க 2), குறை விளரி (த 1) மற்றும் நிறை தாரம் (நி 2). இது ஒருதிறப் பண்ணியல் (ஔடவ - ஷாடவ) இராகம் வர்ஜ இராகம். ம.நி ஆகிய சுவரங்கள் ஆரோசையில் இடம்பெறவில்லை. மத்தியம வர்ஜ இராகங்களுள் ஒன்று உபாங்க இராகம். த்விதீய கன பஞ்சக தொகுதி இராகங்களுள் ஒன்று ரக்தி இராகம். ப, க ஆகியவை அம்ச சுவரங்கள். மூன்று நிலைகளிலும் பாடக்கூடிய இராகம். பாடல்கள் க, ப, த ஆகிய சுவரங்களில் தொடங்குகின்றன. மிகவும் மென்மையான உணர்வுகளை வெளிப்படுத்தும் இராகம். க, ப, த, ரி ஆகிய சுவரங்கள் நெடில் சுவரங்களாகப் பாடல்களில் இடம்பெறும். 'நி' அவ்வாறு நெடில் சுவரமாக இடம்பெற முடியாது. அதிக நேர பண் விரிவு (ஆலாபனை)க்கு இடம் கொடுக்காத இராகம்.

கமகங்கள் அதிகம் இல்லாத இராகம். ஆரோசையில் ஒவ்வொரு சுவரமும் அதற்கடுத்த சுவரத்திலிருந்து உல்லாஸித கமகத்துடன் பாடப்படும்.

நான்காவது சாமத்தில் (விடியற்காலை 3 மணியிலிருந்து 6 மணிக்குள்) பாடப்படக்கூடிய இராகம். மங்களகரமான இராகம்.

***சஞ்சாரம்***

பா, பகரிசா - சரிககபா, ப - கபதப - கபதச்ா -
கபதசரி - ச்நிதபதா; பா - கபதச்ரிக்ா - ப்க்ரிச்ா -
ச்நிதப தா; ப - கபதச்நிதப - தா; பா - கபதப - கதபகரி
சா - சநிதப தசரிகா - பகரிசா

***தேவாரப் பாடல்கள்***

திருஞானசம்பந்தர் பதிகம் III - 376 - 381
திருநாவுக்கரசர் பதிகம்
சுந்தரர் பதிகம் VII - 83 - 85

***பஞ்சமம் ஆகிரி***

சேய் இராகம். 14ஆவது மேளகர்த்தாவாகிய வகுளாபரணத்தில் பிறந்தது. சிலர் 8ஆவது மேளகர்த்தாவாகிய தோடியில் பிறந்தது என்றும், சிலர் 20ஆவது மேளகர்த்தாவாகிய நடைபைரவியில் பிறந்தது என்றும் கூறுகின்றனர். ஆனால் நிறை கைக்கிளை (க2) இதற்கு ஒரு தனி அழகைத் தருகின்றது. இதன் ஆரோசை அமரோசை வருமாறு:

ச ரி ச க ம ப த நி ச்
ச் நி தா ப மா க ரி ச

இஃது ஒரு வக்ர சம்பூர்ண இராகம். குரல், இளியைத் தவிர இந்த பண்ணில் வரும் சுவரங்களாவன குறை துத்தம் (ரி1) நிறை கைக்கிளை (க2) குறை கைக்கிளை (க1) குறை உழை (ம1) குறை விளரி (த1) நிறைவிளரி (த2) குறைதாரம் (நி1) நிறைதாரம் (நி2) பின்வரும் பிரயோகங்களில் நுண்ணலகுகள் கேட்கப்படுகின்றன. சநிசரிச, சநிதநீதப, சகமகரிரீ.

குறை கைக்கிளை காமப என்னும் பிரயோகத்தில் நெடில் சுவர (கம்பித) கமகமாக ஒலிக்கப்படுகின்றது. குறை துத்தமும் ஒரு நெடில் சுவர கமகமாக ஒலிக்கப்படுகின்றது. பாநிச் - ஒரு சிறப்பு சஞ்சாரமாகும். கமக வரிக ரக்தி இராகம். ரி, ம, நி ஆகியவை ஜீவ சுவரங்கள். மூன்று சுவர நிலைகளிலும் (திரிஸ்தாயி) பாடக்கூடிய இராகம். சோகம் மற்றும் கருண இரசத்தை வெளிப்படுத்தும் இராகம். பாடல்கள் கைக்கிளை மற்றும் இளி சுவரங்களில் தொடங்கும். இந்த இராகத்தை முதற் காலத்தில் பாடுவது அவசியமாகும். நி, த ஆகிய சுவரங்களை நீட்டிப் பாடுதல் வேண்டும். இந்த இராகம் குறவஞ்சி நாடகம், நிருத்ய நாடகம், பாகவத மேள நாடகம், இசை நாடகம் ஆகியவற்றில் இடம் பெற்றுள்ளது.

சஞ்சாரம் : காமப - பதநீ, தப - பாதபா மகா - மமா க்கரி ரீச - சநிசரிசா - சநிநிததாப - நிநிசா - சரிசகமபம - பதநிசா, சா - சநிசாரீச - சநி நீச - சநிநிதா பா, ப - பத பா, ம - கம மககரி ரீ - கமபதநீசா - பதபம கம - மககரிரீ - சநிநீசா;

திருஞானசம்பந்தர் பதிகள் III - 314 - 324
திருநாவுக்கரசர் பதிகம்
சுந்தரர் பதிகம் VII - 96 - 100

## *காந்தாரம், பியந்தைக் காந்தாரம் கொல்லி, கொல்லிக் கௌவாணம் (நவரோசு)*

தலைப்பிற் கண்ட நான்கு பண்களும் நவரோசு இராகத்திற்கு உரியவையாகக் கருதப்படுகின்றன. நவரோசு இராகம் இருபத்தொன்பதாவது மேளகர்த்தாவாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்த சேய் இராகமாகும். பஞ்சமாந்திய இராகம் அதாவது பஞ்சம சுவரம் முதலும் இறுதியுமாக உள்ள இராகம்.

ஆராசை : ப த நி ச ரி க ம ப
அமரோசை : ம க ரி ச நி த ப

குரல் இளியைத் தவிர இதில் இடம்பெறும் சுவரங்களாவன. நிறை விளரி, (த2), நிறை தாரம் (நி2) நிறை துத்தம் (ரி2) நிறை கைக்கிளை (க2) குறை உழை (ம1). ரி, க, த ஆகியவை ஜீவ சுவரங்களாகும். இந்த இராகத்தில் மத்திய ஸ்தாயி இளி அல்ப சுவரமாகும். மந்த்ர ஸ்தாயி இளி அடிக்கடி பிரயோகிக்கப்படும்.

பாடல்கள் கைக்கிளை சுவரத்தில் தொடங்கும். பொதுவாக இந்த இராகம் மத்தியம சுருதியில் பாடப்படும். குறிஞ்சி இராகம் இதனுடன் நெருங்கிய தொடர்புடைய இராகமாகும்.

### *சஞ்சாரம்*

பசசா சரி சரிகசரீ - சாநிசாரிகரிச நீ தநீப -
ப்சசாரி - சரிகமா - மகமபபபமக மபகமரி -
ரிமாக சாநி - நிச ரீச - சநிதநீப - பதாநீசரீச

### *தேவாரப்பாடல்கள்*

திருஞானசம்பந்தர் பதிகம் II காந்தாரம் 190 - 218
பி. காந்தாரம் 219 - 222
III கொல்லி 282 - 299
கொல்லிக் கௌவாணம் 300
திருநாவுக்கரசர் பதிகம் IV கொல்லி - 1 காந்தாரம் 2-7
பி. காந்தாரம் 8
சுந்தரர் பதிகம் VII கொல்லி 31 - 37
கொல்லிக் கௌவாணும் 38-46
காந்தாரம் 71 - 76
பி. காந்தாரம் 76

# சீகாமரம் (நாதநாமகிரியை)

15ஆவது மேளகர்த்தாவாகிய மாயாமாளவ கௌளையில் பிறந்த சேய்ப் பண்ணாகும். இதன் ஆரோசை அமரோசை வருமாறு.

ஆரோசை : ச ரி க ம ப த நி
அமரோசை : நி த ப ம க ரி

குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் இடம்பெறும் சுவரங்களாவன. குறை துத்தம் (ரி1) நிறை கைக்கிளை (க2) குறை உழை (ம1) குறை விளரி (த1) மற்றும் நிறை தாரம் (நி2). இது ஒரு உபாங்க இராகமாகும். ஆரோசையில் ம, நி மற்றும் அமரோசையில் க, ரி, நி ஆகியவை இராகச் சாயை தரும் சுவரங்களாகும். ம, ப ஆகியவை நியாச சுவரங்களாகும். கமகவரிக ரக்தி இராகம். பாடல்கள் ச.க.வில் தொடங்கும். முதற்கால பிரயோகங்கள் இந்த இராகத்தில் அழகை மேம்படுத்தும். இந்த இராகம் சுலோகம், விருத்தம் ஆகியவை பாடுவதற்கு ஏற்றது. இஃது இசை நாடகம், நாட்டிய நாடகம், இராகமாலிகை, தருக்கள் ஆகியவற்றில் இடம் பெற்றுள்ளது. பல நாமாவளிப் பாடல்கள் இந்த இராகத்தில் அமைந்துள்ளன. நாட்டுப்புற மெட்டான ஆனந்த களிப்பு மெட்டு இந்த இராகத்தில் அமைந்ததாகும். இஃது கருணைச் சுவையை வெளிப்படுத்தும். பொதுவாக இந்த இராகம் கச்சேரிகளின் இறுதியில் மத்தியம கருதியில் பாடப்படும்.

***சஞ்சாரம்***

மாமாமமகா - கமபததப - பமகம - பதநிதபபம - கமபதபம - கமமக கரிசசநி - சரிகா; மகரீ; சாநீசா;

*தேவாரப் பாடல்கள்*

| | | |
|---|---|---|
| திருஞானசம்பந்தர் பதிகம் | - II | - 176 - 189 |
| திருநாவுக்கரசர் | - IV | - 19, 20 |
| சுந்தரர் பதிகம் | - VII | - 86 - 89 |

# இந்தளம்
## மாயாமாளவ கௌளை

| | |
|---|---|
| ஆரோசை | ச ரி க ம ப த நி ச் |
| அமரோசை | ச் நி த ப ம க ரி ச |

எழுபத்திரண்டு மேளகர்த்தா திட்டமுறையில் 15ஆவது மேளகர்த்தா இராகம் அக்னி என்றழைக்கப்படும். 3ஆவது சக்கரத்தில் 3வது மேளம் (அக்னி-கோ). இந்த இராகத்தின் பழைய பெயர் மாளவ கௌளம் என்பதாகும். 72 மேளகர்த்தாவின் கடபயாதி திட்டத்திற்காக மாயா என்ற சொல் சேர்க்கப்பட்டு மாயா மாளவ கௌளம் என்று நீட்டப்பட்டுள்ளது.

குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் வரும் சுவரங்களாவன குறைதுத்தம் (ரி1) நிறை கைக்கிளை (க2) குறை உழை (ம1) குறைவிளரி (த1) நிறை தாரம் (நி2). ஏழு சுவரங்களும் அமைந்த முழுமைப் பண்ணாகும். அனைத்துச் சுரங்களும் கமக மாகப் பாடப்படும் இராகம்.

ஜீவ சுவரங்கள் : க, நி  நியாச சுவரங்கள் : க, ப
கிரக சுவரங்கள் : ச, க, த, நி

இது ஒரு மூர்ச்சனா காரக மேளம். இதன் ரி,ம சுவரங்களை முறையே குரலாகக் கொண்டால், முறையே ரசிகப்ரியா (72) சிம்மேந்திர மத்யமம் (57) ஆகிய மேளங்கள் ஒலிக்கும்.

எப்பொழுதும் பாடத்தக்கது. மூன்று இசை நிலைகளிலும் பாடத்தக்க இராகம். கருணைச் சுவையும் பக்திச் சுவையும் நிறைந்த இராகம். இந்துஸ்தானி இசையில் இதற்குப் பைரவ் தாட் என்று பெயர்.

இரண்டு பெயர்களுடைய சுவரஸ்தானங்கள் இந்த இராகத்தில் வராததினாலும், ஜண்டைச் சுரக்கோர்வைகளும், பற்பல தாட்டுச் சுரக்கோர்வைகளும், துரிதகால சௌக கால கோர்வைகளும் இந்த இராகத்திற்குப் பொருத்தமாய் வருவதினாலும் மாணவ மாணவியர் முதன்முதலில் பயிற்சி செய்ய வேண்டிய சரளி வரிசைகளை இந்த இராகத்தில் நம் முன்னோர்கள் இயற்றியுள்ளனர்.

***சஞ்சாரம்***

சரிகடபதநிச் - கமபதநிச் ரிசா - ச் நிதப த்ரிசா - ச்ரிதநி ச்ரிக்ரிகா - ம்க்ரிச்ா .- ச்நிதபாமகா - கமபநிச்ரிச் நிதபாமகா - கமபதபம - கமகரிசா - சநிதநிசரிசா.

***தேவாரப் பாடல்கள்***

| | | |
|---|---|---|
| திருஞானசம்பந்தர் பதிகம் | II : | 137 - 175 |
| திருநாவுக்கரசர் பதிகம் | IV : | 16 - 18 |
| சுந்தரர் பதிகம் | VII : | 1 - 12 |

# கௌசிகம் (பைரவி)

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

20ஆவது மேளகர்த்தாவாகிய நடபைரவியில் பிறந்தது. ஏழுச் சுரங்களும் கொண்ட முழுமைப் பண். பாஷாங்க இராகம். குரல் இளியைத் தவிர நிறைதுத்தம் (ரி2) குறை கைக்கிளை (க1) குறைஉழை (ம1) குறை விளரி (த1) குறை

தாரம் (நி1) ஆகிய சுரங்கள் இந்த இராகத்தில் இடம்பெறுகின்றன. நிறைவிளரி (த2) அந்நிய சுரமாக ஆரோசையில் வருகின்றது. இச்சுரம் - பதநிச்ா - பதசநிச்ரீ - பதநிதநிச்ா - சிநிசதநிச்ா ஆகிய சுவரக் கோர்வைகளில் வரும். ஜீவசுவரங்கள் ரி, க, ம, நி நியாச சுவரங்கள் - ரி, ம, ப, நி மற்றும் நிறைவிளரி (த2) கிரக சுவரங்கள் : பெரும்பாலும் நி. சில சமயங்களில் ரி, ப, த. இராகச் சாயா சுவரங்கள் ரி, க, த, நி, க, ம, நி ஆகியவை கம்பித சுவரங்களாகும். ரிரி கக மமகக போன்ற ஜண்டை சுரக் கோர்வைகள். நிக்ரிக்ச்ரி நிரிச்ரிநிச்ா - ப்ரிச்ா நிதபா - மநிதபா மபகாரிச போன்ற தாட்டுச் சுரக்கோர்வைகள் இந்த இராகத்துக்கு இனிமையைக் கொடுக்கின்றன. ரிமகாரிசா - பதமா - பதநிதமா - மபகாரிச என்பவைச் சிறப்பானச் சுரக் கோர்வைகளாகும் விரிவான ஆலாபனைக்கு இடம் கொடுக்கும் இராகம். எப்பொழுதும் பாடக் கூடியது. பக்திச்சுவை நிரம்பியது. எல்லா வகை இசை வடிவங்களும் இந்த இராகத்தில் உள்ளன. சுலோகங்கள், பத்யங்கள், விருத்தங்கள் பாடுவதற்கேற்ற இராகம்.

### *சஞ்சாரம்*

ரிகமபத நிச்ா ச்நித தநிச்ரிச் ரிச்நீத நிச்ரிச் ரீ - ரிக்ம் க்ாரிச் நீத - நிச் நிக்ரிக் ச்ரி நிச்நிரி ச்ரிநிச்ா - பதபதபமா - பரிச்ாரி நிதபா - பமநீதபா - மநிதபா - மப காரிச ரிகமப தப மகரிசா - ரிகம காரிச நீத - நிசரிசரீ - பாதநீ சரிசா.

### *தேவாரப் பாடல்கள்*

திருஞானசம்பந்தர் பதிகம் III : 301 - 313
திருநாவுக்கரசர் பதிகம்
சுந்தரர் பதிகம் VII : 94

# செந்துருத்தி (மத்தியமாவதி)

ஆரோசை : ச ரி ம ப நி ச்
அமரோசை : ச் நி ப ம ரி ச

22வது மேளகர்த்தாவாகிய கரகரப்ரியாவில் பிறந்தது. ஐந்திசைப் பண். உபாங்க இராகம். ஆரோசையிலும் அமரோசையிலும் கைக்கிளையும் விளரியும் வர்ஜம், குரல், இளியைத் தவிர நிறைதுத்தம் (ரி2) குறை உழை (ம1) குறை தாரம் (நி1) ஆகிய சுவரங்கள் இந்த இராகத்தில் வருகின்றன. ஜீவ சுவரங்கள் ரி, ம. நி, நியாச சுவரங்கள் ரி, ம, ப, நி, கிரக சுவரங்கள் ச, ரி, ம, ப, நி பழமையான இராகம். பழங்காலத்தில் இதற்கு மத்யமாவதி என்னும் பெயர் இருந்தது. மூர்ச்சனாகாரக இராகம். மத்தியமாவதியின் ரி, ம, ப, நி ஆகிய சுவரங்களைக் கிரகபேதம் செய்தால் முறையே இந்தோளம், சுத்தசாவேரி, உதயரவிச்சந்திரிகா, மோகனம் ஆகிய இராகங்கள் தோன்றும். ரிமரிப - மநிநிபச் நிரிச்ரி நிச் பநி மப என்னும் தாட்டுச் சுரப் பிரயோகங்கள் இந்த இராகத்துக்கு அழகைக் கொடுக்கின்றன. இந்த இராகத்தைப் பாடவேண்டிய காலம் நண்பகல். இருப்பினும் எப்பொழுதும் பாடலாம். சுபகரமான இராகம். மங்களம் பாடி முடிந்த பின்னரும் அரங்கிசை இறுதியில் மத்தியமாவதில் ஒரு சிறு ஆலாபனையோ சுலோகமோ பாடும் வழக்கம் உண்டு.

***சஞ்சாரம்***

ரிமபநீநி - மபநிச்ாச் - பநிச்ரிரீ - ரிம்ப்ம் ரீரிச்ா - நீ, ச்ரிச் - நிச்ரிச் ச்நிபா ம - பரிச்ாச்நி, பா, ம - பாச்நிபா, ம - மபநீ, பமரீ -- ரிமபா பம ரீசா - நிசரிசா சநிபா - மபநிசரீரி - பமரீசா.

***தேவாரப் பாடல்கள்***

சுந்தரர் பதிகங்கள் - 1 - VII 95

# குறிஞ்சி (அரிகாம்போதி)

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

28ஆவது மேளகர்த்தா இராகம் பாண என்றழைக்கப்படும் 5ஆவது சக்கரத்தில் 4ஆவது இராகம் (பா-பூ) குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் வரும் மற்ற சுரங்களாவன நிறை துத்தம் (ரி2) நிறை கைக்கிளை (க2) குறை உழை (ம1) நிறை விளரி (த2) குறை தாரம் நி1 சம்பூர்ண இராகம். அனைத்துச் சுரங்களும் கமக வரிகத்துடன் பாடவேண்டிய இராகம். சுவரங்கள் இணை-கிளை தொடர்புடையனவாக அமைந்துள்ளன. ச-ப: ரி2-த2; க2-த2: ம1-நி1. ஜீவ சுவரங்கள் க, ம, நி நியாச சுரம் - ப. கிரக சுவரங்கள் ப.நி. இராகச்சாயா சுரங்கள். ம.நி. பல ஜன்ய இராகங்களுடைய மேளம். மூர்ச்சனாகாரக மேளம். அரிகாம்போதியின் ரி, ம, ப, த, நி ஆகிய சுவரங்களைக் கிரக பேதம் செய்தால் முறையே நடபைரவி, சங்கராபரணம், கரகப்ரியா, தோடி, கல்யாணி ஆகிய மேளங்கள் தோன்றும். பிரத்யாகத கமகம் இந்த இராகத்தின் களையை அதிகரிக்கும். எப்பொழுதும் பாடலாம். பண்டைத் தமிழிசையின் சுத்த மேளம் அரிகாம்போதி இராகமே. இது செம்பாலைப்பண் என்றழைக்கப்பட்டது. இதன் சுருதி அளவுகள் 4432432

ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் இந்த இராகத்தில் இயற்றிய அழகானக் கிருதிகளால் இந்த இராகம் மிக பிரசித்தியடைந்ததெனக் கூறலாம். தாண்டகவேந்தர் என போற்றப்பட்டும் திருநாவுக்கரசரின் திருத்தாண்டகங்கள் இந்த இராகத்திலேயே விருத்தமாகப் பாடப்படுகின்றன.

*சஞ்சாரம்*

சரிகம பதநிச் - பதநிச் ரிக்ம்க் கரிரிச்ா - ச்நிதநி ச் ரிச்ா ச்நிதபா - கமபதநிச்ரிச்ாச்நிதபா - மகரிகபக கரிரிசா - சநிதநி சரிசா - நிதபாதநிசா.

*தேவாரப் பாடல்கள்*

திருஞானசம்பந்தர் பதிகங்கள் : 75 107
திருநாவுக்கரசர் IV 21 VI 214 - 312 திருத்தாண்டகங்கள் அரிகாம்போதியில் பாடப்பெறுவன.
சுந்தரர் VII 90 - 93

# தக்கேசி, தக்கராகம் (காம்போதி)

ஆரோசை : ச ரி க ம ப த ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

28வது மேளகர்த்தாவாகிய அரிகாம்போதியில் பிறந்தது. ஷாடள சம்பூர்ண இராகம். பாஷாங்க இராகம். ஆரோசையில் தாரம் (நிஷாதம்) வர்ஜம். குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் இடம்பெறும் சுவரங்களாவன. நிறை துத்தம் (ரி2) நிறை கைக்கிளை (க2) குறை உழை (ம1) நிறை விளரி (த2) குறை தாரம் (நி1) நிறைதாரம் (நி2) இந்த பண்ணில் வரும் அந்நிய சுவரமாகும்.

ஜீவ சுவரங்கள் ம, த, நி, மற்றும் நி2
நியாச சுவரங்கள் க, ம, ப, த
கிரக சுவரங்கள் ச, க, ம, ப.

அந்நிய சுவரமாகிய நிறைதாரம் (நி2) சநிபதச்ா சநி*பதச என்னும் பிரயோகங்களில் வரும். சரிகச - ரிபமகச - ரிமகச போன்ற தாட்டுச்சுவரக் கோர்வைகளும், மகசா - பதமா - மகபதச்ா - ச்ரிக்ச்ா போன்ற சுவரக் கோர்வைகளும், பா,

தமக என்ற பிரயோகமும் இந்த இராகத்துக்கு அழகையும் இனிமையையும் கொடுக்கின்றன. விரிவான ஆலாபனைக்கும் கற்பனைக்கும் இடம் தரும் இராகம். இராகம், தானம், பல்லவி பாடுவதற்கு மிகப் பொருத்தமான இராகம்.

எப்பொழுதும் பாடலாம். சுபகரமான இராகம். அரங்கிசையிலும் பிற நிகழ்ச்சிகளிலும் துவக்கத்தில் பாடுவதற்கேற்ற இராகம். இந்த இராகத்தைக் காம்போதி என்றும் அழைப்பதுண்டு. கதக்களியில் இதற்குக் 'காமோதரி' என்று பெயர். எல்லா வகையான இசை வடிவங்களையும் இந்த இராகத்தில் காணலாம்.

***சஞ்சாரம்***

சரிகம பதச்ா - தரிச்நிதபா - தமகா - பதச்ா - ச*நிபாததச்தச்ா - மகபதச்ா - பதச்ரீகா - க்ா ம்க்ரீ, ம்க்ரிச்ா ச்நிதா - பதச்ரிக்ம்க்ரி ச்ா - சநிநி பாததச்தச்ா மகபதச்ா - ச்நிதபா மகரீரி - சநிதபா - தரிசநி.

***தேவாரப் பாடல்கள்***

| | |
|---|---|
| திருஞானசம்பந்தர் பதிகங்கள் | தக்கராகம் 23 46 |
| | தக்கேசி 63 74 |
| திருநாவுக்கரசர் பதிகங்கள் | தக்கராகம் 13 16 |
| சுந்தரப் பதிகங்கள் | தக்கேசி 54 70 |

## காந்தாரப் பஞ்சமம் (கேதார கௌளை)

ஆரோசை : ச ரி ம ப நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

28வது மேளகர்த்தாவாகிய அரிகாம்போதியில் பிறந்தது. ஔடவ சம்பூர்ண இராகம். வர்ஜ இராகம். ஆரோசையில்

கைக்கிளையும், விளரியும் வர்ஜம். உபாங்க இராகம். குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் இடம்பெறும் சுவரங்களாவன நிறை துத்தம் (ரி2) நிறை கைக்கிளை (க2) குறை உழை (ம1) நிறை விளரி (த2) குறைதாரம் (நி1) ஜீவ சுவரங்கள் ரி, நி. இவை இராகச்சாயா சுவரங்கள். கம்பித மற்றும் நெடில் சுவரங்கள். நியாச சுவரங்கள் ரி, ப கிரக சுவரங்கள் ச, ரி, ம, ப மூர்ச்சனா காரக இராகம். இதன் ம, ப ஆகிய சுவரங்கள் கிரக பேதத்தின் வழியாக முறையே ஆரபி, ஆபேரி ஆகிய இராகங்களைக் கொடுக்கும். வன்துத்தத்தை (தாரஸ்தாயி ரிஷபம்) அழுத்தியும் நீட்டியும் பிடிக்கும்போது இந்த இராகத்தின் வடிவை உடனே கண்டு கொள்ளலாம். காமக, ரீகரி என்பது ஒரு விசேஷ பிரயோகம். எப்பொழுதும் பாடலாம். எனினும் இரவு நேரம் மிகவும் பொருத்தமானது. பக்திச் சுவை நிரம்பியது. விரிவான ஆலாபனைக்கு இடம் கொடுக்கும் இராகம். சுலோகம், பத்யம், விருத்தம் ஆகியவை பாடுவதற்கேற்ற இராகம்.

***சஞ்சாரம்***

சரிமபநிச்ரச் - மபநிச்ரீரீ - ரீம்கரீ - ரீம்பாம்க்ரீ ரீரீம்க் ரீரீ க்ரிச்ா - நீ, ச்ரிச்ா - நிச்ரிச் நிதபா - மபநிச் ரிச்ாநிதபா - மபநிதபாமகரீ - ரிமபா, மகரீ - ரிரிமக ரிரிகரிசா, நீ, சரிச - நிசரிசநிதபா.

***தேவாரப் பாடல்கள்***

திருஞானசம்பந்தர் III 259 - 281
திருநாவுக்கரசர் IV 10, 11
சுந்தரர் VII 77

## பழம் பஞ்சுரம் (சங்கராபரணம்)

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

29வது மேளகர்த்தா இராகம். பாண என்றழைக்கப்படும் 5ஆவது சக்கரத்தில் 5ஆவது மேளம் (பாண-ம) குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் வரும் சுவரங்களாவன நிறை துத்தம் (ரி2) நிறை கைக்கிளை (க2) குறைஉழை (ம1) நிறைவிளரி (த2) நிறைதாரம் (நி2)

ஜீவ சுவரங்கள் எல்லா சுவரங்களும்.

நியாச சுவரங்கள் ரி, ப கிரக சுவரங்கள் ச, ரி, ம, ப. பூர்வாங்கமும் உத்தராங்கமும் ஒரே சீராய் அமைந்துள்ள மேள இராகங்களில் இது ஒன்று. மூர்ச்சனாகாரகமேளம். இதன் ரி, க, ம,, ப, த மூர்ச்சனைகள் முறையே கரகரப்ரியா, தோடி, கல்யாணி, அரிகாம்போதி, நடபைரவி மேளங்களழகும்.

கடபயாதி திட்டத்தை முன்னிட்டு, 'தீர' என்னும் முன்னடை (Prefix) சேர்க்கப்பட்டு தீரசங்கராபரணம் என்றழைக்கப்படுகிறது. சச ரிரி கக மம பப போன்ற ஜன்டைச் சுரக்கோர்வைகளும், ரிநிந்த நிபதமபகமரிகச போன்ற தாட்டுச் சுரக்கோர்வைகளும் இந்த இராகத்துக்கு இனிமையைக் கொடுக்கின்றன. 'ச்நிபா' ஒரு விசேஷ பிரயோகம். அரங்கிசையிலும், பிற நிகழ்ச்சிகளிலும் துவக்கத்தில் பாடுவதற்கேற்ற இராகம். விரிவான ஆலாபனைக்கு இடம் தரும் இராகம். எப்பொழுதும் பாடலாம். பற்பல சுவைகளை வெளிப்படுத்தக்கூடிய இராகம். இந்துஸ்தானி இசையில் இதற்கு 'பிலாவல்' என்று பெயர். ஐரோப்பிய இசையில் மேஜர் டயடானிக்ஸ்கேல் என்று சொல்வதும் இந்த இராகமே. சங்கராபரணம் நரசய்யர் என்பவர் இந்த இராகத்தைப் பாடுவதில் மிக்க தேர்ச்சி பெற்றிருந்தார்.

***சஞ்சாரம்***

சரிகமகரி மககரிசா - நிசரிசசநிதபதநிசரிகம
கரிகமபா மகரி - ரிமகரிமகரிசா - சரிகமபதா
தபமகமபதநிச்ாச
நிசரிகம்க்ரிக்ரிச் - ரிச்நித பா தபமகரிச நித நிசா

### தேவாரப் பாடல்கள்

| | |
|---|---|
| திருஞானசம்பந்தர் பதிகங்கள் | III 358 - 374 |
| திருநாவுக்கரசர் பதிகங்கள் | IV 14, 15 |
| சுந்தரர் பதிகங்கள் | VII 47 - 53 |

## நட்டராகம் (பந்துவராளி) - சாதாரி

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

51ஆவது மேளகர்த்தா இராகம். 'பிரம்ம' என்று அழைக்கப்படும் 9ஆவது சக்கரத்தில் 3ஆவது மேளம் (பிரம்ம - கோ). 15ஆவது மேளகர்த்தாவாகிய மாயமாளவ கெளளையின் நேர் பிரதி மத்தியம இராகம். காமவர்த்தினி என்ற பெயரை யுமுடையது. குரல் இளியைத் தவிர இந்த இராகத்தில் இடம்பெறும் சுவரங்களாவன: குறை துத்தம் (ரி1) நிறை கைக்கிளை (க2) நிறைஉழை (ம2) குறைவிளரி (த1) நிறைதாரம் (நி2)

ஜீவ சுவரங்கள் : எல்லா சுவரங்களும்
நியாச சுவரங்கள் : ம, ப
கிரக சுவரங்கள் : ச, ப, நி

பழமையான இராகம். 'இராமக்கிரியா' என்றும் முற்காலத்தில் இது அழைக்கப்பட்டது. மூர்ச்சனாகராக மேளம் இதன் நிஷாத மூர்ச்சனையே கனகாங்கி மேளமாகும். பதமா - தச்நிதபம என்ற சுவரக் கோர்வைகள் இந்த இராகத்துக்கு அழகைத் தருகின்றன. தாரஸ்தாயி கைக்கிளைக்கு மேல் சஞ்சாரம் காண்பதரிது. எப்பொழுதும் பாடலாம். அரங்கிசையின் தொடக்கப்பகுதியில் இந்த இராகத்தில் அமைந்த கிருதிகளைப் பாடினால் களை கட்டும்.

### *சஞ்சாரம்*

கமபாபா - பாமபதபதா - தபமகமபதநீதபம - பதநிதநிச்ா - ச்நிச்ரிச்ாச்ா - சரிகம க்ரிச்ா - ச்நிதபமகரி சநிதப தநிசநிகரிசா.

### *தேவாரப் பாடல்கள்*

| | | |
|---|---|---|
| திருஞானசம்பந்தர் பதிகங்கள் | II | நட்டராகம் 233 - 248<br>சாதாரி 325 357 |
| திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகங்கள் | IV | சாதாரி 9 |
| சுந்தரர் பதிகங்கள் | VII | நட்டராகம் 17-30 |

# பிற்சேர்க்கை III

## திருமுறைகண்ட புராணம் - பண்களின் கட்டளைகளுக்குரிய வரிகள்

சொல் நட்ட பாடைக்குத் தொகை எட்டுக் கட்டளையாம்;
இன்னிசையால் தருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்;
பன்னுபழந் தக்கராகப் பண்ணின் மூன்றுளதாம்;
உன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார் 35

மேவுகுறிஞ் சிக்கஞ்சு; வியாழக் குறிஞ்சிக் காறு;
பாவு புகழ் மேக ராகக் குறிஞ்சிப் பாலிரண்டு;
தேவு வந்த இந்தளத்தின் செய்திக்கு நான்கினிய;
தாவில் புழ்க் காமரத்தின் தன்மைதனக் கிரண்டமைத்தார் -36

காந்தாரமாகிய பியந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்த வகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்(கு)
ஏய்தவகை இரண்டாக்கிச் செவ்வழி யொன்றாக்கி இசைக்
காந்தாரபஞ்சமத்தின் கட்டளை மூன்றாக்கினார் 37

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லி ரண் டாக்கிமிகு தூங்கிசை நேர் பஞ்சமத்திற்(கு)
ஒல்லையினில் ஒன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லும் இசைப் புறநீர்மைக் கொன்றதாகப் போற்றினார் - 38

அந்தாளிக் கொன்றாக்கி வாகீசர் அருந்தமிழின்
முந்தாய பல தமிழுக் கொன்றொன்றாம் மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிரண்(டு)
உந்தாடுங் குறுந்தொகைக் கோர் கட்டளையா
விரித்துரைத்தார் -39

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித் தங்(கு)
ஆண்டகையார் தடுத்தாண்ட ஐயர் அருள் துய்ய முறைக்கு
ஈண்டிசைசேர் இந்தளத்துக் கிரண்டாக எடுத்துரைத்து
நீண்ட தக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். - 40

கூறிய நட்டராகத் திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்த பழம் பஞ்சுரத்துக்(கு)
ஏறும் வகை இரண்டாக்கி இன்னிசை தேர் தக்கேசிப்
பேறிசை ஆறாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். - 41

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டாம்
நற்றான சீர் நட்டபாடைக்கு நவின்றுரைக்கில்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகும் கூறுமிசை
ஒன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார். - 42

உற்ற இசைக் குறிஞ்சிக் கோர் இரண்டாக வகுத்தமைத்துப்
பற்றிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பால்
துற்றஇசை இரண்டாக்கித் தூய இசைப் பஞ்சமத்துக்
கற்றஇசை ஒன்றாக்கி அரனருளால் விரித்தமைத்தார். - 43

# துணை நூற்பட்டியல்


1. அங்கயற்கண்ணி, இ. 1989, ***"திருப்புகழ்ப் பாடல்களிற் சந்தக் கூறுகள்"***, கலையகம் வெளியீடு, சென்னை.

2. இராமநாதன் செட்டியார், லெ.ப.கரு. (ப.ஆ.) 1974, ***பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்***, தமிழிசைச் சங்கம், சென்னை.

3. இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் (ப.ஆ.) 1964, சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த ***தேவாரத் திருப்பதிகங்கள்***, ஏழாந்திருமுறை, தருமையாதீனம் வெளியீடு.

4. கழக வெளியீடு, 1971, காரைக்காலம்மையார் அருளிச்செய்த ***திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள்***, சென்னை

5. கோபாலய்யர், தி.வே. (ப.ஆ) 1985, ***தேவாரம் பண்முறை*** தொகுதி - II அப்பரும் சுந்தரரும், பிரெஞ்சு மொழியியல் நிறுவனம், பாண்டிச்சேரி.

6. சதாசிவ செட்டியார் கயப்பாக்கம் (ப.ஆ) 1929, சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த ***தேவாரப் பதிகங்கள்***, திருமுறை ஏழு, கழக வெளியீடு, சென்னை.

7. சுந்தரமூர்த்தி, கு. 1978, ***சுந்தரர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்***, கழக வெளியீடு, சென்னை.

8. சுந்தரமூர்த்தி, ரா. (ப.ஆ.) 1959, ***சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் அற்புதத் திருப்பதிகங்கள்***, சண்முக ராஜ கணபதி பிள்ளை அவர்களின் அறுபதாம் ஆண்டு மணிவிழா மலர், காரைக்கால்.

9. சுப்பிரமணிய பிள்ளை, கா. 1980, **சுந்தரமூர்த்தி நாயனார் வரலாறு**, கழக வெளியீடு, சென்னை.

10. செங்கல்வராய பிள்ளை, வ.சு. 1962, **தேவார ஒளிநெறிக் கட்டுரை** (சுந்தரர்), கழக வெளியீடு, சென்னை.

11. தண்டபானி தேசிகர், எம்.எம். 1966, **தேவாரத் திவ்வியப் பிரபந்தத் திருப்புகழ்ப் பாடல்கள்**, தமிழிசைச் சங்கம், சென்னை.

12. து.ஆ. தனபாண்டியன் மற்றும் இருவர் (ப.ஆ.) 1988, **மூவர் திருமுறைப் பாடல்கள்**, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

13. செல்லக்கணபதி, இரா. 1981. **தமிழ் வளர்க்கும் தருமபுரம்**, தருமை ஆதீன வெளியீடு.

14. **பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்**, 1985, தமிழ்ப் பல்கலைக்கழக நிழற்பட பதிப்பு, தஞ்சாவூர்.

15. சேக்கிழார் சுவாமிகள் அருளிய **பெரியபுராணம்** என வழங்கும் **திருத்தொண்டர் புராணம்** (மூலம்) 1982, ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள்.

16. தெய்வசிகாமணிக் கவுண்டர், வே.ரா. 1975, அறிவனார் இயற்றிய **பஞ்சமரபு**, சக்தி அறநிலைய வெளியீடு, கோவை.

17. பதிப்பாசிரியர்கள் குழுவினர், 1981, **பரிபாடல்**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

18. பிங்கல முனிவர், 1978, **பிங்கலந்தை** என்னும் **பிங்கல நிகண்டு**, கழக வெளியீடு, சென்னை.

19. பெருமாள், ஏ.என். 1985, **தமிழர் இசை**, உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை.

20. வெள்ளைவாரணன், 1962, **பன்னிரு திருமுறை வரலாறு** முதற்பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

21. விருத்தாசலம், பி.(ப.ஆ.) 1994, **நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள்**, ந.மு.வே. நாட்டார் கல்வி அறப்பணிக் கழகம், தஞ்சாவூர்.

22. வேங்கடசாமி, சீவி. மயிலை. 1970, **சமணமும், தமிழும்**, கழக வெளியீடு, சென்னை.

23. ஸ்ரீனிவாசய்யங்கார், கே.வி. 1924, **சங்கீத ரசார்ணவும்**, எம்.ஆதி அண்ட் கம்பெனி, சென்னை.

24. Sambamurti, P. 1935, **Selections from Tamil Composers**, Indian Music Publishing House, Chennai.

25. Shringy, R.K. and Prem Latha Sharma, (editors), 1978, **Sangita Ratnakara of Sarangadeva**, Vol.I (Text and Translation) Varanasi.

